V. Gnana Doss Arul



நெல்லைத் திருச்சபை

# இருநூறாண்டு சரித்திரம்

## 1780-1980




Rev. V. ஹென்ரி பாக்கியநாதன்

## இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்

ஏறக்குறைய 7 ஆண்டுகளாக பல இடங்களிலிருந்து சேகரித்த சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு வரை அச்சடிக்கப்பட்ட, ஆரோக்கிய உபதேசங்கள் அடங்கிய, கிறிஸ்தவ ஆவிக்குரிய புத்தகங்களை, பல மணி நேரம் கொடுத்து, பல இலட்சங்கள் செலவு செய்து மின் நூல்களாக (E-Books) இலவசமாக (மத்தேயு 10:8) உங்கள் கரங்களில் கொடுப்பதற்கு, அற்பரும் நீசருமான எங்களை பயன்படுத்தின உன்னத தேவனுக்கே சகல கனமும் மகிமையும் துதியும் உரித்தாவதாக. இதைப் போன்ற இன்னும் ஆயிரக்கணக்கான புத்தகங்களை தரவிறக்கம் (Download) செய்ய எங்களுடைய இணையதளத்தை சொடுக்கவும்/பார்க்கவும்: www.WordOfGod.in

95 சதவீத புத்தகங்கள் அச்சில் இல்லாதவைகளும், காப்புரிமை முடிந்தவைகளுமே. மீதமுள்ள புத்தகங்கள், நல்ல உபதேசங்களை கொண்டிருப்பதால், முடிந்தவரை ஆசிரியரின் உரிமையோடு மின்-நூலாக, இலவசமாக வெளியிடுகிறோம். ஒருவேளை உங்களுடைய புத்தகம் இப்படி இலவசமாக மின்-நூல் (E-Book) வடிவில் வரக்கூடாது என்று நினைத்தீர்களானால், தயவு செய்து எங்களை மன்னித்துக்கொள்ளுங்கள். எங்களுடைய WhatsApp எண்ணிற்கோ, மின் அஞ்சலிலோ (Email) எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். உடனடியாக எங்களுடைய இணைய-தளத்திலிருந்து எடுத்துவிடுகிறோம்.

WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599

Email: wordofgod@wordofgod.in

## Wishing you in the mighty name of Jesus Christ

*We had collected several thousands of old Tamil Spiritual Books which are rich in Sound Doctrines across various places of India for 7 years. Some of them are more than 200 years old books. We have spent millions of hours and money in scanning them and coverting them to E-Books. The work is still in progress. These E-books are published completely free of cost (Matt 10:8) forever. We give all the praise and glory to God for giving this wonderful opportunity to server Him. You can download thousands of similar Tamil Christian E-books from our website www.WordOfGod.in completely free of cost at any time.*

*95% of these E-Books are not being printed now and their copyrights are already expired. The remaining books are sent as E-Books mostly with the permission from the Authors. If you feel that your books should not be published as E-Book freely, kindly execuse and forgive us. Please let us know the book details by WhatsApp or Email we will remove them from our website.*

WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599

Email: wordofgod@wordofgod.in

# பாயிரம்

தென்னிந்தத் திருச்சபையின் இருநூறாண்டு சரித்திரக்கோர்வையை ஒரு நூலாக்கும் பணியினை எமக்குப் பணித்த மகாகனம் S. டானியேல் ஆபிரகாம் பேராயர் அவர்களுக்கும் இருநூறாண்டு விழாக் குழுவினருக்கும் எனது நன்றி. இந் நூலினைச் சமைக்க திருச்சபைச் சரித்திரப் பேராசிரியர் கனம் D. A. கிறிஸ்துதாஸ் ஐயர் கேட்கப்பட்டார். அவர் கொடுத்த நிபந்தனைகள் குழுவினரால் ஏற்காது வேறு வழியுமில்லாது என் மீது திணிக்கப் பட்டது. காலமோ குறுகியது; கொடுத்த பணியோ 200 ஆண்டு சரித்திரம். எடுத்த காரியத்தைக் குறித்த காலத்தில் கொடுத்தாக வேண்டுமே என்ற எண்ண உந்தல் இந்நூலினை அமைக்க ஏதுவாயிற்று. 1780 முதல் 1895 வரை உள்ள சரித்திரத்தைப் பேராசிரியர் ஜியார்ஜ் மூல்லர் M. A. அவர்கள் ஆங்கிலத்தில் அமைத்துக் கொடுத்தார். அதனைத் தமிழாக்கம் செய்தவர்கள் —S. T. கல்லூரி தமிழ்ப் பேராசிரியை திருமதி. லோமா சாமுவேல் அம்மையார், பரி. யோவான் கல்லூரி தமிழ் பேராசிரியர் திரு. செல்லக்கனி அவர்கள், கனம். R. ஜோசப் ஐயர், கனம். ஜூலியஸ் ஐயர், கனம். V. D. ஆபிரகாம் ஐயர். 1896—1949 உள்ளடங்கிய சரித்திரம் கனம். V ஹென்றி பாக்கியநாதன் ஐயரால் அமையப் பெற்றது. திரு. மகாகனம். செல்வின் அத்தியட்சர் பற்றி கனம். M. P. ஏசுதாசனும் மகாகனம் ஜெபராஜ் அத்தியட்சர் சரித்திரத்தைக் கனம். R. ஜோசப் ஐயர், கனம். P. N. கோவில்பிள்ளை ஐயரும் ஆக்கினர். மகாகனம் காரட் அத்தியட்சர் பற்றி கனம். M. S ஏசுதாசன் ஐயரும் மகாகனம் S டானியேல் ஆபிரகாம் அத்தியட்சர் சரித்திரத்தை கனம். V. ஹென்றி பாக்கியநாதன் ஐயரும் எழுதித் தந்தனர். எனது பரபரப்பான நிலையில் பரிவுடன் ஏற்று முடித்துக் கொடுத்தமைக்கு அவர்களுக்கு என் நன்றி. அச்சுப் பிழை திருத்தம் செய்து கொடுத்த வித்துவான்கள் இ. க. ஆறுமுகம், ஜோசப் திரவியம் ஆகியோருக்கும் எனது நன்றி.

வாசிக்கும் நண்பர்கள் எழுதியவர்களின் பெயர் கண்டு குறுகிய கண்ணோக்கோடு நூலினை நாடாது 'பிழைகளுக்குள்ளும் மறைந்து கிடக்கும் உயரிய சுவிசேஷத் தொண்டர்களின் பணிதான் என்னே' என்று அறிந்து இன்புற இனிதன்புடன் கேட்கின்றேன்.

நன்றி

V. ஹென்றி பாக்கியநாதன்

# பொருளடக்கம்

**முன்னுரை:** உன் கூடாரத்தின் இடத்தை விசாலமாக்கு; உன் வாசஸ்தலங்களின் திரைகள் விரிவாகட்டும்; தடை செய்யாதே உன் கயிறுகளை நீளமாக்கி, உன் முளைகளை உறுதிப்படுத்து. நீ வலதுபுறத்திலும் இடதுபுறத்திலும் இடங்கொண்டு பெருகுவாய்; உன் சந்ததியார் ஜாதிகளைச் சுதந்தரித்துக் கொண்டு, பாழாய்க்கிடந்த பட்டணங்களைக் குடியேற்றுவிப்பார்கள். ஏசாயா. 54 : 2,3

இந்தியத் திருச்சபையின் வரலாற்றில் 1947-ம் வருடம் செப்டம்பர் 27-ம் தேதி காலை 8 மணி ஒரு சிறப்பு நேரமாகும். தென் இந்திய திருச்சபையில் மூன்று பெரிய பாரம்பரியங்களைக் கொண்ட சபைகள் ஒரே சபையாக அன்று இணைந்தன. யோவான் 17 : 21-ன்படி "அவர்கள் எல்லாரும் ஒன்றாயிருக்கவும், பிதாவே, நீர் என்னை அனுப்பினதை உலகம் விசுவாசிக்கிறதற்காக, நீர் என்னிலேயும் நான் உம்மிலேயும் இருக்கிறது போல அவர்கள் எல்லாரும் நம்மில் ஒன்றாயிருக்கவும் வேண்டிக் கொள்ளுகிறேன்" என்று ஆண்டவர் இயேசு கிறிஸ்து ஜெபத்திற்கு ஏற்ப சபைகள் தங்களுடைய அழைப்பை உணர்ந்து, ஒரே சுவிசேஷத்தை உடையவர்களாகவும், ஒரே பணியை மேற்கொண்டவர்களாகவும் ஒரே திருச்சபையாக அமைந்து செயல்பட தங்களை அர்ப்பணித்த நேரம் இதுவாகும். இந்த ஐக்கியத்தைக் குறித்து பல சந்தேகங்கள் எழுப்பப்பட்டன: பயங்கள் பல தோன்றின. சிலர் இதை ஒரு பரீட்சார்த்த செயலாக எண்ணினர். முப்பத்தி மூன்று ஆண்டுகளுக்குப்பின் நாம் இந்த ஐக்கியத்திற்காக கடவுளைத் துதிக்கவும் அவருக்கு நன்றி செலுத்தவும் கூடியவர்களாக இருக்கிறோம். ஐக்கிய திருச்சபைக்குள் பல்வேறு பாரம்பரியங்களையுடைய சபைகள் தங்கள், தங்கள் பாரம்பரியங்களோடு வந்தாலும் ஒன்றினால் ஒன்று விழுங்கப்பட்டதாக அல்ல, இணைந்து செயல்படுகிறதாகவே இருந்து வருகின்றன. தென் இந்திய திருச்சபை ஒரு அகல் விரிவான (Comprehensive) சபையாகும். அகில உலக திருச்சபையின் விசுவாசக்கோட்பாட்டை உடையவர்களாயும், பூரண வழிபாட்டுச் சுதந்திரம் உடையவர்களாயும், திருச்சபையின் வளர்ச்சிக்காக இயல்பாக செயல்படுகிறவர்களாயும் தென் இந்திய திருச்சபையில் அத்தியட்சாதீனங்கள் அனைத்தும் செயல்பட்டு வருகின்றன.

திருநெல்வேலி அத்தியட்சாதீனமும் இந்த ஐக்கியத்திற்குள் தன்னை ஒப்படைத்தது நாம் பெற்ற பெரும் பேறாகும். ஆங்கிலேயத் திருச்சபையின் பாரம்பரியத்தையன்றி வேறு எந்த

பாரம்பரியமும் இல்லாத சபைகளைக் கொண்ட அத்தியட்சாதீனமாக இருந்தாலும் முழு மனதுடன் இந்த ஐக்கியத்திற்குள் ஒப்படைத்தது ஒரு பெரிய காரியமாகும். இன்றைய அத்தியட்சாதீன வளர்ச்சிக்கு இது ஒரு வாய்ப்பாக அமைந்துள்ளது. மற்ற அத்தியட்சாதீனங்களைப் போல் இந்த அத்தியட்சாதீனத்தில் திருச்சபையின் ஐக்கியம் விரிவாக உணரப்படாவிட்டாலும் தென் இந்திய திருச்சபையின் அமைப்பு முறையில் ஏறக்குறைய அறுபது சதவீதம் ஆங்கிலேய திருச்சபையின் மாதிரியிலிருந்து எடுக்கப்பட்டுள்ளதாலேயே தென் இந்தியத் திருச்சபையின் அனைத்து அமைப்பு, செயல்பாட்டு முறைகளும் இன்றைய திருநெல்வேலி சபைகளில் இருந்து வருகிறது. வேறு எந்த பாரம்பரிய வழிபாட்டு முறைகளையும் ஏற்க மறுத்து நின்ற திருநெல்வேலி திருச்சபை இன்று தென் இந்திய திருச்சபையின் வழிபாட்டு முறைகளைப் பின்பற்றி வருவது குறிப்பிடத்தக்கது. முழுமையாக அதனைப் பின்பற்றுவதற்கு சபை முன்னேறி வருகிறது என்று சொல்லலாம்.

திருநெல்வேலி CSI திருச்சபை பிற பாரம்பரிய சபைகளோடு ஐக்கியப்படுவதற்கு வாய்ப்பு இல்லாமல் இருந்தாலும் தங்களில் இருந்தே பிரிந்து சென்ற CMS Evangelical Lutheran திருச்சபையோடு இணைவதற்கு ஆயத்தமான முயற்சி எடுத்துக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது ஆகும். 1977-ம் வருஷம் நவம்பர் 10-ம் தேதி கூடின அத்தியட்சாதீன கவுன்சில் இத்திட்டத்தை ஏற்றுக் கொண்டு அதற்கான முயற்சி எடுக்க பேராயருக்கும், கமிற்றி அங்கத்தினர்களுக்கும் அதிகாரம் கொடுத்திருப்பது ஓர் சிறந்த அம்சமாகும்.

நற்செய்திப் பணியில் ஆர்வம் காட்டியே திருநெல்வேலி திருச்சபை வளர்ந்து வந்திருக்கிறது. தங்கள் எல்லைக்குள் மட்டும் அல்லாது இந்திய நாடு முழுவதும் நற்செய்தி பரப்புவதில் அக்கறை உடையதாக எல்லா சபைகளும் விளங்கி வருகின்றன.

இந்திய மிஷனரி சங்கம் (I. M. S. T.) திருநெல்வேலி திருச்சபையின் சுவிசேஷ வாஞ்சைக்கு ஓர் எடுத்துக்காட்டு ஆகும். ஆண்டுதோறும் அத்தியட்சாதீன எல்லைக்குள்ளேயே பல நூற்றுக்கணக்கான மக்கள் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு ஞானஸ்நானம் பெற்று சபையில் சேர்ந்து வருகின்றனர். புதியசபைகள் அமைப்பதிலும், புதிய சபைகளுக்கு ஆலயங்கள் கட்டிக் கொடுப்பதிலும் வசதியுடைய

சேகரங்கள் ஏகோபித்து செயல்பட்டு வருகின்றன. அத்தியட்சாதீன அளவில் மட்டுமல்லாது சேகரங்களும் சுவிசேஷகர்களை அத்தியட்சாதீனத்தின் பல பகுதிகளுக்கு அனுப்பி ஒரு முகமான சுவிசேஷ ஊழியம் செய்து வருகின்றன.

1055 சபைகளையும் 120 சேகரங்களையும் உடைய அத்தியட்சாதீனத்தில் குருக்களுடைய எண்ணிக்கை குறைவாக இருப்பது வருந்தத்தக்க ஒரு காரியம். ஒரே குருவானவர் பல சபைகளையும் பல ஆத்துமாக்களையும் கண்காணித்து பணிபுரியும் நெருக்கடி இருக்கிறது. அத்துடன் ஏராளமான பாடசாலைகளையும் மேற்பார்வையிடும் பணியும் அவர்களுடையது. பல ஆண்டுகளாகவே இக்குறை நீக்கப்பட முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகிறது. பாடசாலை நிர்வாகத்திற்கு குருமார் அல்லாதவரை நியமிக்க ஒழுங்குகள் செய்யப்படுகிறது. 1984-ம் வருடத்திற்குள் எல்லா சேகரத்திலும் குருமார் நியமிக்கப்படுவதற்காகத் திட்டம் வகுக்கப்பட்டு செயல்படுத்தப்பட்டு வருகிறது. பாடசாலை ஊழியரே சபை ஊழியத்தையும் தொடர்ந்து செய்து வருகின்றனர். ஒரு சில குறைபாடுகள் இப்பணியில் காணப்படினும் பெரும்பாலான ஊழியரின் ஊக்கமும் ஊழியமும் பாராட்டத்தக்கது. இவர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கான திட்டமும் உண்டு.

பொருளாதாரத்திலும் அத்தியட்சாதீன சபைகள் வளர்ந்து வருவது குறிப்பிடத்தக்கது ஆகும். வெளி உதவி இல்லாமல் சுய ஆதரவிலே செயல்பட வேண்டும் என்ற நல்ல எண்ணம் படிப்படியாக நிறைவேற்றப்பட்டு வருகிறது என்று கூறலாம். சபைகள் ஊழியத்திற்காக கொடுப்பதில் காட்டுகின்ற அக்கறை அதிகம். சுய ஆதரவுத்திட்டம் நிறைவேற்றப் பட பல்வேறு முயற்சிகள் எடுக்கப்படுகிறது. இதில் மக்களின் ஒத்துழைப்பு அதிகம் ஆகும்.

அத்தியட்சாதீனத்தின் கல்வி ஸ்தாபனங்களும் வளர்ந்து கொண்டே வருகிறது. தமிழ்நாடு அரசு தனது கல்வி திட்டத்தை மாற்றி கல்லூரிகளின் புகுமுக வகுப்புகளை எடுத்து உயர்நிலைப் பள்ளிகளோடு இணைத்து மேல்நிலைப் பள்ளித் திட்டத்தைக் கொண்டு வந்தபோது திருநெல்வேலி அத்தியட்சாதீனத்தின் 29 உயர்நிலைப் பள்ளிகளில் 12 பள்ளிகள் மேல்நிலைப்பள்ளிகளாக உயர்த்தப்பட்டது. இவ்வத்தியட்சாதீனத்தின் கல்வி சேவைக்குக் கிடைத்த ஒரு பரிசு எனலாம். கிறிஸ்தவ மாணவர்களோடு ஏராளமான கிறிஸ்தவர் அல்லாத மாணவர்களும் இக்கல்வி சாலைகளின் மூலமாக பயன்பெற்று வருகின்றார்கள். பல்வேறு கோணங்களில் அத்தியட்சாதீன ஸ்தாபனங்கள் பொது மக்களாலும், கல்வி இலாகாவினராலும், அரசாங்கத்தினராலும் பாராட்டப்பட்டு வருகின்றன.

அத்தியட்சாதீனத்தின் அமைப்பு முறையில் 1975-ம் வருடம் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டது. சர்க்கிள்கள் நிர்வாக அமைப்புடையதாக இருந்த நிலைமாறி பாஸ்டரேட்டுகளே நிர்வாக அமைப்புகளாக்கப்பட்டன. இதன் காரணமாகப் பல பிரச்சனைகள் தோன்றியிருப்பினும், பல நல்ல பலன்களும் உண்டு. ஒவ்வொரு சபையும் தன்னுடைய பொறுப்பையும் உத்திரவாதத்தையும் உணர ஆரம்பித்திருக்கின்றன. ஊழியத்திற்கு தாராளமாய் கொடுக்கவும், ஊழியத்தில் பங்கெடுப்பதும் ஒவ்வொரு சபையின் பொறுப்பு என்பதை உணர ஆரம்பித்துவிட்டன. பொருளாதார வளர்ச்சிக்கு இது ஒரு காரணமாகும். அத்தியட்சாதீன அமைப்புமுறையில் தேர்தல் ஒரு அவசியமாகக் கருதப்பட்டாலும் அதனுடைய விளைவு சபைகளின் வளர்ச்சிக்கு குந்தகம் விளைவிப்பதாக மக்களால் எண்ணப்படுகிறது. தேர்தல் காரணமாய் சபைகளுக்குள் பிளவுகள் ஏற்படுகின்றன. இதைத் தவிர்க்க கமிற்றிகளுக்கும், சமூகங்களுக்கும் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு பல்வேறு முறைகளை சபையார் முன்நின்று கூறுகின்றனர். இதற்கான மூலச்சட்டங்கள் திருத்தப்படுவது அவசியம் எனவும் கருதப்படுகிறது. தேர்தல் காரணமாக பிளவுகள் ஏற்பட்டாலும் வெகு சீக்கிரத்தில் அமைதியும் சமாதானமும் ஏற்பட தூய ஆவியானவர் செயலாற்றுவதும் மக்களால் உணரப்படுகிறது. காலாகாலத்தில் கர்த்தர்தாமே குறைகள் நீங்க அருள் புரிவாராக.

திருநெல்வேலிப் பேராயராக பொறுப்பேற்று ஐந்து ஆண்டுகள் பணியாற்றி, ஆறாவது ஆண்டின் ஆரம்பத்தில் திருநெல்வேலி திருச்சபையின் 200 ஆண்டு நிறைவு விழாவில் பங்கெடுக்கக் கிருபை அளித்த ஆண்டவருக்கு நன்றி செலுத்துகிறேன். இது ஒரு பெரிய பாக்கியமாக இருந்தாலும், அதிகமான பொறுப்பும் உத்திரவாதமும் உடையது. இந்த விழாவிற்கான பல திட்டங்கள் வகுக்கப்பட்டு ஈராண்டுகளாக பல கமிற்றி சமூகங்களால் ஆலோசிக்கப்பட்டு சபையாருடைய முழு ஒத்துழைப்புடனும், ஜெபத்துடனும், இவ்விழாவிற்குள் பிரவேசிக்கிறோம். இந்த விழாத் தொடர்பான திட்டங்களை என்றும் மனதில் உடையவர்களாக சபைமக்கள் முன்னேறிச் செல்வது சபை வளர்ச்சிக்கு உதவியாக இருக்கும். ஆகவே அவைகளை இந்நூலின் முன்னுரையில் குறிப்பிடுகிறேன்.

திட்டங்கள்:

1) C. M. S. Evangelical திருச்சபையுடன் ஐக்கியம் கொள்ளுதல்.
2) முதியோர் திருமுழுக்குக்கான தீவிர முயற்சி

3) சேகரத்திற்கு ஒரு புதிய சபை உருவாக்குதல் என்ற உயரிய திட்டம்.

4) சேகரந்தோறும் முதியோர் கல்விக்கூடம் அமைத்து அனைவரும் எழுத வாசிக்கக் கூடிய அளவில் கற்றுக் கொடுக்கத் திட்டம்.

5) எல்லா சபைகளிலும் ஆண்கள் ஐக்கிய சங்கம் அமைத்து நடத்துவது.

6) சமூக சமுதாயப் பணிக்காக ஓர் மூலதனம் நிறுவுதல்.

7) ஒவ்வொரு சேகரமும் வட திருநெல்வேலி பகுதியில் ஓர் ஆலயம் கட்டுவது.

8) நூல்கள் பல வெளியிடுதல்.

9) நவீன அமைப்புகளோடுள்ள ஓர் கருத்தரங்கு மண்டபம் கட்டுதல்.

10) இன்றைய நூற்றாண்டு மண்டபம் சிறந்த முறையில் புதுப்பித்தல்.

11) நடமாடும் நற்செய்திப் பணிக்கான உபகரணங்களோடுள்ள ஒரு வாகனம்.

— இன்னும் பல திட்டங்கள்.

இவைகளில் பல உடனடியாக செயல் படுத்த முடியாவிடினும் தொடர்ந்து செயல்படுத்தப்பட வேண்டியவைகளாகும். குறிப்பாக, முதலாவதாக திருச்சபைக்குள் எல்லா மக்களையும் எழுத வாசிக்க கற்றுக்கொடுப்பது. இரண்டாவதாக திருச்சபையின் எண்ணிக்கையை இரட்டிப்பாக்குவது ஆகும்.

இந்த விழாவில் பல நூற்கள் வெளியிடப்படுகின்றன. அவைகளில் திருநெல்வேலி திருச்சபை வரலாறு அடங்கிய இந்த நூலும் ஒன்றாகும். இந்த நூலின் பெரும்பகுதி 1946-ம் ஆண்டு வெளியிடப் பட்ட "திருநெல்வேலி அத்தியட்சாதீனம் பொன் விழா சரித்திரம்" என்ற நூலில் இருந்து எடுக்கப்பட்டது. இந்த நூல் இதனை வாசிப்பவர்களுடைய உள்ளத்தில் விசுவாச வளர்ச்சியையும், கிறிஸ்தவ வாழ்க்கை உயர்வையும் கனிசேஷ ஊழிய ஊக்கத்தையும் கொடுக்கும் என நம்புகிறோம். இந்நூல் வெளியிடப்படுவதற்கு பெரும் முயற்சி எடுத்த கனம். ஹென்ரி பாக்கியநாதன் அவர்களுக்கும் பேராசிரியர் ஜார்ஜ் முல்லர் அவர்களுக்கும் என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் கிருபை நம் அனைவரோடும் கூட இருப்பதாக.

"என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்திரி: என் முழு உள்ளமே, அவருடைய பரிசுத்த நாமத்தை ஸ்தோத்திரி. என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்திரி; அவர் செய்த சகல உபகாரங்களையும் மறவாதே"



அத்தியாயம் I

# விதைப்பொருளும் விளைநிலமும்
## (1542 — 1799)

**புகழ்மிகு நிலம் :**

உலகில் கிறித்தவ நற்செய்திப் பணியினை ஆற்றிவரும் பல இடங்களில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது திருநெல்வேலி. ஏனெனில் நற்செய்தியாகிய விதையினை விதைப்பதற்கும், அப்பணியினை ஆற்றி வரும் பணியாளர்கள் நற்பயனைப் பெறுவதற்கும் ஏற்ற இடமாக அது உள்ளது. 1857 ஆம் ஆண்டில் இதைக் குறித்து ஆராய்ந்து பார்த்த டாக்டர் கால்டுவெல் மிக்க மகிழ்ச்சியுடன் "இந்தியாவின் மிகப் பெரிதும்" வளம் பெற்றதும், முன்னேறக் கூடியதுமான கிறித்தவ சமுதாயத்தை இங்கு கண்டதால் இதயமும் கண்களும் மகிழ்வெய்தின "[1] எனக் குறிப்பிட்டுள்ளார். 1821 இல் பேராயர் ஹீபர் — 'தஞ்சை நெல்லை கிறித்தவ ஸ்தாபனங்களே இந்தியாவில் கிறித்தவத்திற்கும் பலமும் தூண்டுகோலுமாக விளங்கின'[2] எனக் கூறியுள்ளார். 20 ஆண்டுகளுக்குப் பின் நெல்லைக்கு வருகை தந்த பேராயர் ஸ்பென்சர், திருநெல்வேலியின் வளமார்ந்த, ஏற்றம் மிக்க நிலையினை'[3] எழுதியதோடு இங்கிலாந்து இயேசு கிறிஸ்துவின் நற்செய்திக்கு எவ்வளவு முக்கியத்துவத்தை கொடுக்கின்றதோ, அவ்வளவு முக்கியத்துவத்தை நெல்லையும் கொடுக்கிறது "[4] என்று துணிந்து ஆணித்தரமாகக் கூறியுள்ளார்.

தேவ ஊழியர் பலரால் சொல் மாலை சூட்டப்பெற்றபடி நெல்லை திருச்சபை வளர்ச்சியானது கிறித்தவத்தைத் தழுவிய நாடுகளெங்கும் பரவியது. நற்செய்திப் பணியாளர்களின் முயற்சியினை ஏற்றுக் கொள்ளக் கூடியதாக நெல்லை நிலம் இருந்ததால், அவ்வூழியத்திற்கெனத் தம்மைத் தத்தம் செய்துள்ள தேவ ஊழியர்கள் முறையாக வருகை தந்து நற்செய்தியாகிய விதையினை விதைத்து புதிதாகத் தொடங்கிய சபையினைப் பராமரித்ததோடு, அவ்வப்பகுதியில் உள்ள மூப்பர்களைச் சீராகப் பயிற்றுவித்து, முழுப் பொறுப்பையும் ஏற்று நடத்தும் வண்ணம் அவர்களைத் தேர்ச்சி அடையச் செய்தனர். எல்லாவற்றுக்கும் மேலாக கடவுளின் அளவற்ற அருளால் இச்சபை, திருமண்டிலமாக மலர்ந்து 84 ஆண்டுகள் ஆயின. மிக எளிமையான, அற்புதமான

திருச்சபையின் ஆரம்பத்தைக் கொண்ட தென்னிந்தியத் திருச்சபையின் அங்கமான திருநெல்வேலித் திருமண்டிலம், தற்போது தனது இருநூறு ஆண்டு நிறைவு விழாவினைக் கொண்டாட இருக்கின்றது.

## பலவித விதைப்போர் : உரோமர்

இந்தியத் துணைக்கண்டத்தின் தென் கோடிக்கருகில் தமிழ் நாட்டின் தென்கிழக்கிலுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் புவியியல் அமைப்போடு இன்றைய திருநெல்வேலித் திருமண்டிலம் இணைந்து காணப்படுகிறது. வாணிபத்தின் பொருட்டு வந்த மேற்கத்திய ஆதிக்கத்தினரால் கிறித்தவ மதம் நெல்லை மாவட்டத்திலும் அறிவிக்கப்பட்டது. 1498 ஆம் ஆண்டு வாஸ்கோடகாமா கள்ளிக்கோட்டையை வந்து சேர்ந்தார். இதற்குச் சிறிது காலத்திற்கு முன்னமேயே போர்த்துக்கீசியர், மேற்குப்பகுதியில் கோவா, கொச்சியையும், கிழக்கே தூத்துக்குடி, மைலாப்பூரையும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தனர். இருப்பினும், அவர்களுக்கு இந்தியமக்களுக்கு நற்செய்தியினைக் கூற விருப்பமில்லாதிருந்தது. இதனால் 1542 ஆம் ஆண்டு பிரான்சிஸ் சேவியர் என்னும் சிறப்பு வாய்ந்த நற்செய்திப் பணியாளர் கோவாவிற்கு வரும் வரை காத்திருக்கவேண்டியதாயிற்று. அவர், நற்செய்திப் பணியாளரான தனக்கு எல்லா உதவியும், ஆதரவும் அளிக்கப்பட வேண்டும் என்று போர்த்துக்கீசிய மன்னர் ஜான் இடமிருந்து, போர்த்துக்கீசிய அரசப் பிரதிநிதியான அல்புகர்க் என்பவருக்கு எழுதப்பட்ட ஒரு கடிதத்துடன் வந்திருந்தார். மேலும் போப் ஆண்டவரின் பிரதிநிதியாக இவர் இந்தியாவுக்கும், தூரக்கிழக்கு நாடுகளுக்கும் நியமிக்கப்பட்டிருந்தார். ஆனால் இவர் தனக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரத்தின்படி பணியாற்றாது, மக்களின் உள்ளத்தை அசைக்கும் வண்ணம் சுயமாகப் பணியாற்றினார் அன்னார், இந்தியாவில் மிகக் குறுகிய காலமாகிய நான்கு ஆண்டுகளே பணிபுரிந்தார். அதன்பின் இதைவிடப் பெரிய இறையியல் பிரச்சாரப் பொறுப்பினை ஜப்பானில் மேற்கொள்ள நேர்ந்தது. கடல் கொள்ளைக்காரர்களால் உண்டாகும் சேதங்களினின்று காக்கப்பட்டு, போர்த்துக்கீசிய ஆதரவுக்கும், பராமரிப்புக்கும் உட்பட்ட நெல்லை மாவட்டக் கடற்கரையோரப் பகுதிகளில் பெயரளவுக்கு கிறித்தவர்களாக வாழ்ந்த 20 000 பரதவர்களுக்கு கிறித்தவ நம்பிக்கையையும் அடிப்படைத் தத்துவங்களையும் 1542 முதல் 1544 வரை எடுத்துக் கூறினார். 1600 முதல் (ஜெஸ்யிட் குழு) இயேசு சபை

யினைச் சார்ந்த மதுரை ஸ்தாபனத்தாரால் நெல்லையின் உட்பகுதியான கயத்தாறு காமநாயக்கன்பட்டி, வடக்கன்குளம் போன்ற இடங்களில் சபைகள் நிறுவப்பட்டன. இவர்களுள் முக்கியமானவர்களாகிய ராபர்ட் நொபிலி ஜான் டி பிரிட்டோ, ஜோசப் பெஸ்கி முதலியோர் இந்தியர்களோடு ஒன்று பட்டு வாழ்ந்து, தமிழ்மொழியில் பாண்டித்தியம் பெற்று உயர் சாதி இந்துக்கள் பலரைக் கிறித்தவராக்கினர். இதற்கு ஊழியம் ரோம் நகரில் அங்கீகரிக்கப்படாததோடு 1775 இல் போப் கிளெமெந்துவின் காலத்தில் இயேசு சபை நசுக்கப்பட்டது

## டச்சுக்காரர் (உலாந்தியர்)

கத்தோலிக்க முன்னோடிகள் வந்து ஒன்றரை நூற்றாண்டுகளானபின் ஏறத்தாழ 18 ஆம் நூற்றாண்டு வரை புரோட்டெஸ்டான்டு ஊழியர் ஐரோப்பாவில் இருந்து இந்தியாவை அடையாமலிருந்தது வியப்பிற்குரியதே. மதச்சீர்திருத்தம் ஏற்பட்டபின் முதல் 105 ஆண்டுகள் வரை சபைகள் தத்தம் நிலையை உறுதிப்படுத்துவதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்த காரணத்தினால், தங்களைச் சுற்றியுள்ள பரந்த உலகில் தாம் ஆற்ற வேண்டிய பணிகளைக் குறித்துச் சிந்திக்க நேரமில்லாமற் போயிற்று. ஸ்பெயின், போர்த்துக்கீசு ஆகிய இரு நாடுகளும் கடலாதிக்கம் செலுத்தும் நாடுகளாயிருந்தபடியால் உரோம சபை அவர்களைப் பின்பற்றிச் சென்றது. பின்னர் சிறிது சிறிதாக அவர்கள் ஆதிக்கம் குறைய பிரான்சு, பிரிட்டன், ஹாலந்து, ஜெர்மனி, நார்வே போன்ற நாடுகள் கடலாதிக்கம் பெற்று விளங்கின

1600 ஆம் ஆண்டில் ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியும் 1602 ஆம் ஆண்டில் டச்சு கிழக்கிந்தியக் கம்பெனியும் நிறுவப்பட்டன. இந்திய வியாபாரத்தினைக் கைப்பற்றுவதில் ஸ்பெயினும் போர்த்துக்கீசும் சொந்த தேசத்தில் சண்டையிட்டன. 1658 இல் டச்சுக்காரர், தூத்துக்குடியைப் போர்த்துக்கீசியரிடமிருந்து கைப்பற்றி, கத்தோலிக்க மதகுருக்களை நாடுகடத்தி அப்பகுதிகளை மாற்றி அமைத்தனர். அவர்களின் கண்மூடித்தனமான இச்செய்கைகள் அவர்களுக்குத் தோல்வியையே கொடுத்தது. தூத்துக்குடியிலுள்ள கோவில்களைப் பண்டகசாலைகளாக மாற்றி தங்களுடைய பெரிய கோவில்களைக் கட்டினர். தூத்துக்குடியில் இது இன்னும் புனித சின்னமாகக் காணப்படுகிறது. நெல்லை ஆலய வரலாற்றிலும் இடம் பெற்றுள்ளது. இதன் தலைவாயிலில் பின்னலான எழுத்துக்களில் V O C என்றும் MDCCL 1750 என்றும் ஆண்டும் பொறிக்

கப்பட்டுள்ளன எனவே இதுவே நெல்லை மாவட்டத்தின் முதல் புரோட்டஸ்டான்ட் கிறித்தவ ஆலயம் ஆகும் அரசியல் ஏற்றத்தாழ்வுகளுக்கேற்ப 1-6-1825 இல் இவ்வாலயம் ஒரு பெயரும் இடப்படாதபடி நிபந்தனைக்குட்பட்டு டச்சுக்காரரிடமிருந்து ஆங்கிலேயர் வசமாயிற்று

டச்சுக்காரர், திருநெல்வேலி சபைக்குச் செய்தது மிக அற்பமானது. மிகக் குறைவான நபர்களே தூத்துக்குடியிலும், சுற்றியுள்ள இடங்களிலுமிருந்து திருமுழுக்குப் பெற்றிருந்தினர் இதற்கேற்ப டச்சு ஸ்தாபனத்தோடு அல்லது ஹாலந்து சீர்திருத்த சபையோடு தொடர்புடைய ஒரு குடும்பமாவது நெல்லையில் இருப்பதாகத் தெரியவில்லை.

## டென்மார்க்கு தேசத்தவர் (டேனியர்கள்)

இவர்கள் தரங்கம்பாடியில் தமது டேனிஷ் ஸ்தாபனத்தை நிறுவியிருந்தனர். அங்கிருந்து தஞ்சை, திருச்சி, இராமநாதபுரம் ஆகிய இடங்களுக்கும் அவர்கள் சபை பரவிற்று மற்ற ஐரோப்பியர் போல டேனியர்களும் வியாபாரத்திற்காக இந்தியா வந்து தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள தரங்கம்பாடியில் சிறிய வாணிப ஸ்தலத்தை ஆரம்பித்தனர். அது 1621 இல் தஞ்சை மன்னரால் வழங்கப்பட்டது பக்தியுள்ள நாலாம் பிரெடிரிக் 1705-இல் டேனிஷ் சபையினை ஆரம்பித்தார். அதன் முதல் இரு (மிஷனெரிகளாக) நற்செய்தித் தூதுவராக வந்தவர் பர்த்தலோமேயு சீகன்பால்கு, ஹென்றி புளுட்சோ என்னும் ஜெர்மானியராவர். அவர்கள் 1706ஆம் ஆண்டு ஜூலை 9ஆம் நாள் தரங்கம்பாடி வந்து சேர்ந்தனர் ஏழு ஆண்டுகளுக்குள் தரங்கம்பாடியில் ஒரு பாடசாலையை நிறுவியதோடு தாமும் தமிழைக் கற்று புதிய ஏற்பாட்டினை மொழிபெயர்த்து விட்டனர். அப்போஸ்தலர் நடபடிகளோடு ஒத்துக் காணப்பட்ட அவர்கள் பத்திரிகைகள். இங்கிலாந்தில் பெரும் கிளர்ச்சியை ஏற்படுத்தியது சீகன்பால்குக்குக்குப் பின் ஊக்கமும் எழுச்சியும் பெற்ற இளைஞர்கள் பலர் தரங்கம்பாடியில் தாம் செய்யக் கூடியது மிகக் குறைவானது ஊழியமே என்று அறிந்ததால், தம்முடைய எல்லைக்கு அப்பாற்பட்ட இடங்களுக்கும் செல்லத் தப்பட்டனர் ஆனால் டென்மார்க்கு அரசர் அதற்கான பண உதவி செய்ய மறுத்தார். ஆகவே, கிறித்தவ அறிவைப் பரப்பும் ஆங்கலிக்கன் சபை இவர்களின் புதிய இம்முயற்சிக்கு உதவ முன்வந்தது ஏனெனில் இச்சபை இவர்கள்

முயற்சியை மிக உன்னிப்பாகக் கவனித்து வந்தது. இதனால் முன்னதாகவே அச்சு இயந்திரத்தைக் கப்பலில் அனுப்பியிருந்ததால் சீகன்பால்கு மொழிபெயர்த்த புதிய ஏற்பாட்டைத் தமிழில் அச்சிட்டிருந்தனர். ஏற்ற காலத்தில் கிடைத்த இந்த உதவியானது கெரிக் பெர்ரியெஸ், போல் போன்ற பல ஊழியர்கள் கடலூர் நாகப்பட்டினம், தஞ்சாவூர் சென்னை திருச்சி முதலிய பல இடங்களுக்கும் சென்று சபைகளை நிறுவுவதற்கு உதவியாக இருந்தது.

கிறிஸ்தியான் பிரெடரிக் ஸ்வார்ட்ஸ் என்பவர் இவர்கள் எல்லாரிலும் மிகச்சிறந்தவரும், திருநெல்வேலி சபையை நிறுவியவருமானவர். இவர் 1750 இல் இந்தியாவிற்கு வந்து தான் மரிக்கும் வரை அதாவது 1798 வரை ஒரு முறை கூட ஐரோப்பாவிற்குத் திரும்பிச் செல்லாது அரிய சேவை செய்து மரித்தார். அவருடைய குணாதிசயங்களும், அரிய சாதனைகளும் 'மிஷனெரி' என்ற சொல்லுக்குப் புதிய மெருகூட்டுவதாய் அமைந்தது. "என்னிடம் ஒரு கிறிஸ்தவனை அனுப்புங்கள் அவன் ஒருபோதும் என்னைக் கைவிட மாட்டான்" என்று அவரைப் பற்றிக் கூறிய ஹைதர் அலியின் அவையில் இங்கிலாந்து மன்னரின் அரச தூதுவராகப் பணியாற்றியவர். சரபோஜி என்ற தஞ்சை இளவரசனது மெய்க்காவலராகவும், பின் அவரது திவானாகவும் பொறுப்பேற்றிருந்தார். தென்னிந்தியா முழுவதும் பரவியிருந்த அவரது இறைப்பணி வியக்கத் தக்கதாகும்.

தரங்கம்பாடியில் சிறிது கால ஆரம்ப ஊழியத்துக்குப் பின் ஸ்வார்ட்சு அவர்கள் திருச்சி சென்று அங்கிருந்தே தரங்கம்பாடியின் உபதேசிமார்களின் ஊழியங்களை மேற்பார்வையிட்டதுடன் சுற்றியுள்ள பல இடங்களுக்கும் சென்று அவர்கள் செய்த பணியினைக் கண்டார். 1770 ஆம் ஆண்டிற்குள் திருச்சியில் குறிப்பிடத்தக்க அளவு கிறித்தவ அங்கத்தினர்கள் சேர்ந்ததுடன், கிழக்கிந்திய கம்பெனியில் பணி புரிந்த கிறித்தவ சிப்பாய்கள் திருநெல்வேலி வரை வந்து பணி புரியவும் அடிகோலினர். மேலும் திருச்சிக்கு வணிக சம்பந்தமாக வரும் அநேகர் மனம் மாறி கிறித்தவர்களாகத் தம் ஊருக்குத் திரும்பிச் செல்வதும் உண்டு. இத்தகைய தனி நபர்களின் மாறுதலினாலேயே திருநெல்வேலிச் சபை ஆரம்பமாயிற்று எனலாம்[1] திருச்சி ஆலய திருமுழுக்குப் பெயரேட்டில் 1770 ஆம் ஆண்டு ஆகஸ்டு 10 ஆம் நாள் திருநெல்வேலியைச் சேர்ந்த இலட்சுமணன் என்ற 20 வயது வாலிபன் ஞானப்பிரகாசம் ஆனார் என்ற சுவையான செய்தி காணப்படுகிறது.

---

1 வெஸ்டகாட் பேராயர்

ஸ்வார்ட்சு ஐயர் அவர்களின் 1771 ஆம் ஆண்டின் இதழ் களில் (Journals) முதன் முதலாகத் திருநெல்வேலி பற்றிய குறிப்பு காணப்படுகிறது. 'திருச்சியிலிருந்து 200 மைல்களுக்கு அப்பாலுள்ள ஒரு கோட்டையும், திருநெல்வேலியின் முக்கியப் பட்டணங்களுள் ஒன்றுமான பாளையங்கோட்டை என்னுமிடத்தில் நமது சபையின் ஒரு கிறித்தவ அங்கத்தினர் வாழ்கின்றார்[2] சவரிமுத்து என்பது அவர் பெயர். கிறித்தவ நம்பிக்கை பற்றி நன்கு அறிவுறுத்தப்பட்டு வேதத்தைக் கவனமாகப் படிப்பவர்... ' ஆங்கிலேயத் தளபதி ஒருவரின் மனைவி இத்தகைய பணியினைத் தொடர்ந்து செய்கின்றார்'[3] என்று ஸ்வார்ட்சு ஐயர் அவர்கள் குறிப்பிடுகின்றார். சிதறிய ஒரு சிலரின் முயற்சியாலேயே திருநெல்வேலித் திருச்சபை உருவாக்கப் பட்டது.

1778 ஆம் ஆண்டு பெப்ருவரி மாதம் ஸ்வார்ட்சு ஐயர் பாளையங்கோட்டையின் சிறிய கிறித்தவ சமுதாயத்தைப் பார்வை யிடவும், ஆங்கிலேயர் ஒருவரின் திருமணத்தை நடத்தவும், பல குழந்தைகளைத் திருமுழுக்காட்டவும் முதன் முதலாகப் பாளையங் கோட்டை வந்தார். அந்த வேளையில்தான் குளோரிந்தா என்னும் இளம் அந்தணப் பெண் திருமுழுக்குப் பெற விரும்பினாள். அவள் ஸ்வார்ட்சு ஐயருக்கு அறிமுகமானவளே. எப்படியெனில் லிட்டில்டன் என்னும் ஆங்கிலேயப் படை அதிகாரி ஒருவரோடு தொடர்பு கொண்டு கிறிஸ்துவை அறிந்த குளோரிந்தா, ஸ்வார்ட்சு ஐயர் தஞ்சை வந்தபோது திருமுழுக்குப் பெற விரும்பியும், அவரால் மறுக்கப்பட்டவள். அந்த ஆங்கிலத் தளபதி சூலை நோயினால் பாதிக்கப்பட்டு இறந்துவிட்டான். நோயுற்ற காலத்தில் உண்மை யாகத் தன்னைப் பராமரித்துப் பேணின கிளாரிந்தாவுக்குத் தன் சொத்துக்களை அவன் விட்டுச் சென்றான்.

வளர்ந்து வரும் திருச்சபைக்கு இன்றியமையாதவளாகவும் பெருமதிப்பக்கு உரியவளாகவும் குளோரிந்தா விளங்கியதை ஸ்வார்ட்சு ஐயர் பிறர் வாயினால் அறிந்தார். மேலும் பிற சமயத்தவரையும் கிறிஸ்துவின் மந்தைக்குள் இழுத்துக் கொள்ளும் தன்மை பொருந்தி யவளாயும் இருந்தபடியால், வருங்காலத்தில் திருநெல்வேலித் திருச் சபையின் தாயாக அமையும் குளோரிந்தாவுக்கு 3 – 3 – 1778 இல் திருமுழுக்குக் கொடுத்தார்.

---

2 திருச்சி சபையினர்

3 திருநெல்வேலி சபைகளின் பண்டைய வரலாற்றில் பேராயர் அவர் களால் மேற்கொள்ளப்பட்டது

# VII

இதன்பின் கிளாரிந்தா பசமடங்கு உற்சாகத்துடன் நற் செய்தியைப் பரப்பலானுள். அவளுடைய வீடு பிற சமயப் பெண்டிர் பலரும் வந்து குழுமி நற்செய்தியைக் கேட்டு அறியும் இடமாயிற்று 1779 ஆம் ஆண்டின் முற்பகுதியில் திருநெல்வேலிக்கு வருகை தந்த தரங்கம்பாடி நற்செய்தியாளர்களும், அங்குள்ள இந்தியப் போதகர் பிலிப்பு என்பவரும் நெல்லையில் காணப்படும் மத எழுச்சிக்குக் காரணமாக அமைபவள் குளோரிந்தா என்பதை அறிவித்தனர். ஸ்வார்ட்சு ஐயர் அவர்களின் உதவியாளராக நியமிக்கப் பெற்ற போல் ஐயர் 1779 ஆம் ஆண்டு ஜூன் மாதம் பாளையங்கோட்டைக்கு வந்த போது பாளையங்கோட்டையிலும் அதன் சுற்றுப்புறங்களிலுமுள்ள கிறித்தவ சமுதாயத்திற்கு குளோரிந்தா வகித்த பொறுப்பு தன் உள்ளத்தைக் கவர்ந்தது எனக் கூறுகிறார். 1799 ஆம் ஆண்டு ஜூன் 29 ஆம் நாள் குளோரிந்தாவின் 30 வயதான வேலையாள் ஒருவனுக்கு யோவான் என்று திருமுழுக்குக் கொடுத்ததோடு, அவளுடைய வளர்ப்பு மகளான மரியமாளுக்கும், அவனுக்கும் திருமணம் நடத்தி வைத்தார். இது வரை போதுமான திருமுழுக்குகள் நடைபெற்றதாலும், அன்று நடந்த திருமணத்தாலும் திருநெல்வேலித் திருச்சபை அன்று உருவாயிற்று என்று குறிப்பிடலாம்.



VIII

## அத்தியாயம் II

# வளரும் ஆலயம்
# (1789—1820)

திருநெல்வேலித்திருச்சபையின் பதிவு செய்யப்பட்ட வரலாறு 1780 இல் இருந்துதான் துவங்குகிறது என்பதை வழக்கமாய் அறிகிறோம் அதற்குக்காரணம் அப்போதுதான் பாளையங்கோட்டையில் முதல் ஆலயம் உருவெடுத்தது. பாளையங்கோட்டையில் குளோரிந்தா என்ற பெண்மணியை முதலாகக்கொண்ட 40 பெயர்கள் அடங்கிய பட்டியலைக்கொண்ட முதல் பதிவேட்டை பேராயர்கால்டுவெல் அவர்கள் தஞ்சாவூரிலிருந்தபோது உருவாக்கிக் கொடுத்தார்கள் (அதன்கண் 13 பிரிவுகள் வரை இருந்தன) ஆதித்திருச்சபை பெரும்பாலும் தன் சொந்த ஆற்றலிலேயே இயங்கியது. ஆயினும் அதற்கு ஒரு தகுதியான போதகர் தேவைப்பட்டது. 1783 டிசம்பர் திங்களில் குளோரிந்தாவும் மேலும் இருவரும் சேர்ந்து ஒரு போதகரைக் கொணரத் தஞ்சாவூர் சென்றனர் அப்பொழுது கனம் சுவாட்ஸ் அங்கிருந்தார். இரண்டு மாதங்கள் காத்திருந்து ஓர் ஊக்கமில்லாத சபை ஊழியரை அழைத்து வந்தனர். விசுவாசி என்ற பெயருடைய அந்த ஊழியர் தரங்கம்பாடி திருவிடைப்பணியாளரால் அனுப்பப் பட்டார்.

அதன் பின்னர் கனம் சுவாட்ஸ் மீண்டும் தஞ்சாவூர் சென்ற போது ஞானப்பிரகாசம் ராயப்பன் போன்ற தம் சபை ஊழியர் களிலிருந்து ஒருவரை 1784 ஜூலைத் திங்களில் அனுப்பினர். பாளையங்கோட்டைத் திருச்சபையைப்பற்றிய அறிக்கைகள் சுவாட்ஸ் அவர்களுக்கு மிகுந்த ஊக்கத்தைக்கொடுத்தன. அப்போது பாளையங் கோட்டைச்சபை 51 உறுதியான உறுப்பினரைக் கொண்டதாய் இருந்தது கடம்பூரின் அருகிலுள்ள ஒட்டாரம்பட்டியில் 30 கிறித்த வரும், குளோரிந்தாவிடம் ஒப்படைக்கப்பட்ட தேரிவிளையில் 24 கிறித்தவரும் இருந்தனர். குளோரிந்தா பாளையங்கோட்டையில் ஓர் ஆலயம் கட்டத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். இரு ஆங்கிலேய கனவான்களும் அவர்க்கு உதவி புரிந்தனர். கோட்டையின் படைத் தளபதி ஒருவர் ஆலயம் கட்டச் சுண்ணாம்பு, தேவையான கட்டிடப் பொருட்கள் சில ஆகியவற்றைத் தானமாகக் கொடுத்தார். கனம்

# IX

சுவாட்ஸ் அவர்கள் 1785 சனவரி திங்களில் திருச்சியின் அருகில் வாழ்ந்த சத்தியநாதன் என்பவரைத் திருநெல்வேலிக்கு அனுப்பினர்கள் (இவரே பின்னர் தஞ்சாவூரின் அருகிலுள்ள வல்லத்தில் பயிற்சி பெற்றுக் கனம் சுவாட்ஸின் நம்பிக்கைக்குரிய சபை ஊழியரானர்). சத்தியநாதன் அங்குச்சென்று குழந்தைச் சபையைப் பார்த்துவிட்டுப் பிரகாசமான மதிப்பீட்டுடன் திரும்பினர் சுவாட்ஸ் அவர்களிடம் குளோரிந்தாவின் தனி ஆலய அமைப்பையும் அதைப் பார்வையிட்டுத் துவக்கி வைக்க வேண்டிய குளோரிந்தாவின் அழைப்பையும் தெரிவித்தார்.

அழைப்பிற்கிணங்கிய சுவாட்ஸ் அவர்கள் 1785 ஆகஸ்டுத் திங்களில் திருநெல்வேலிக்கு இரண்டாம் முறையாகப் பயணம் ஆனர் வரும் வழியில் அவர் இராமநாதபுரத்தில் ஓர் ஆங்கில வட்டாரப் பள்ளியைத் துவக்கி வைத்தார். தூத்துக்குடியைப் பார்வையிட்டு, டச்சு ஆலயத்தில் தூய மாற்கு 8 ஆம் அதி, 36 ஆம் வசனத்தில் போதகம் செய்தார். பின்னர் பாளையங்கோட்டையில் மூன்று வாரங்கள் தங்கி ஒரு நாளைக்கு இரண்டு அல்லது மூன்று வேளைகளிலும் கூட ஆலயப் போதனை செய்தார். எண்பது பேருக்குத் திரு விருந்து பரிமாறினர் அந்த இளஞ்சபையினர் அவரை நன்றியறிதலுடன் பாராட்டினர். அவர் குளோரிந்தவிடம் அமைந்த கிறித்தவப் பண்புகளுக்காக, அவளை நம்பிக்கையான பொறுப்பில் அமர்த்தியிருக்க, பணி செய்வதற்குப் பணம் கொடுக்க வேண்டும் என்று அவள் எண்ணியதைக் கடிந்து கொண்டதாகத் தெரிகிறது அவள் அவரின் பயணச் செலவாக நூறுரூபாய் கொடுக்க முன் வந்த போது. தீமையே இயல்பாகக் கொண்ட மனிதர்கள் அவளைப் பற்றித் தவறுகக்கணித்து, எச்செய ⁿ யு ı சரியான கூலி கொடுத்தே முடிப்பாள் என்று குறை கூறக் கூடாதென்பதகாக அவர் அப்பணத்தை ஏற்க மறுத்தார் என்றும் கூறப்பறிகிறது. அவர் தஞ்சாவூருக்குத் தம்மோடு இரு இளைஞரை அழைத்துச் சென்றுர். ஒருவர் ஊழியர் பச்சைமுத்து என்பவரின் 7 வயது மகன், மற்றவர் 12 வயதுடைய வேதநாயகம் என்றும் இளைஞர் இவரே, கவிஞர் தேவசகாயம் என்பவரின் மகனுவர் இவரே தமிழ்ப் பெருங் கவிஞராகவும், இறை இசை மேதையாகவும் மலர்ந்து மணம் வீசிய வேதநாயக சாஸ்திரியார் என்பவர். சுவாட்ஸ் அவர்கள் பாளையங்கோட்டைச் சபையின் பொறுப்பைச் சத்தியநாதவிடம் ஒப்படைத்தார்கள் குளோரிந்தா அவரோடு பெருந்தன்மையாக ஒத்துழைத்தார்

சத்தியநாதன் தமிழ்க்கிறித்தவரையும் குளோரிந்தாவினால் உருவாக்கப்பட்ட பள்ளியையும் தினந்தோறும் மேற்பார்வை செய்தார் இராயப்பன் என்ற நிர்வாகப் பணியாளர், தரங்கம்பாடியிலிருந்து வந்து வேளா வேளைகளில் தெற்குப் பகுதிக் கிறித்தவரைப் பார்வையிட்டுச் சத்தியநாதனுக்கு வேண்டிய உறு துணை புரிந்தார். சில நாட்களுக்குள் தரங்கம்பாடிக்குத் திருப்பி அழைக்கப்பட்டு, இறை அனுக்கப் பயிற்சி கொடுக்கப்பட்டார், அதன்பின் அவர் லூதரன்சபை ஒழுங்கு முறைகளுக்கேற்ப 1790 டிசம்பர் 29 ஆம் நாள் அபிஷேகம் செய்யப் பெற்றார். 1791 ஆம் ஆண்டிற்குரிய S. P. C K யின் ஆண்டறிக்கையும் கோலாப் என்பவரின் ஆங்கில மொழியாக்கமும்; மறைத்திரு சத்தியநாதன் அவர்கள் அபிஷேகம் பெற்றபோது அவர்கள் ஆற்றிய சிறப்பான அருளுரையை, மிக விரிவாக விளக்கம் செய்தன. அச்செய்தி சங்கத்தின் 1792 ஆம் ஆண்டிற்கான ஆண்டறிக்கையின் ஒரு தொகுதியாக வெளியிடப்பட்டது.

அபிஷேகம் பெற்ற பின்னர் மீண்டும் சத்தியநாதன் அவர்கள் பாளையங்கோட்டைச் சபையின் ஆட்சிப்பொறுப்பை ஏற்றார். சுவாட்ஸ் அவர்கள் சத்தியநாதனுடன் அவருக்குத் துணைபுரிய ஒரு கிறித்தவச்சபை ஊழியரை அனுப்பி வைத்தார்கள். அவரோடு 1791 அக்டோபர் 16 ஆம் நாள் மறைத்திரு. ஜெனிக் என்பவர் சேர்ந்து கொண்டார். மறைத்திரு ஜெனிக் 1788 ஆகஸ்டு 27 ஆம் நாள் தரங்கம்பாடிக்கு ஏற்கனவே வந்திருந்து, சுவாட்ஸ் அவர்களால் திருத்தொண்டர் பயிற்சி முறைகளைத் தமிழில் பயின்றிருந்த S.P.C.K. திருத்தொண்டராவார். அப்போது திருநெல்வேலிச் சபைப் பட்டியலில் ஏறத்தாழ 400 உறுப்பினர் சேர்ந்திருந்தனர். திரு சத்தியநாதனின் சுமை தாங்கும் பொறுப்பான பணிகட்கும் குளோரிந்தா போன்ற அவருடைய ஊக்கமுள்ள துணையாளர்கட்கும் மிக்க நன்றி கூறக்கடமைப் பட்டுள்ளோம்.

ஏறத்தாழப் பத்துமாதங்கள் வரை, சத்தியநாதனின் அறிவுரைப்படி களிபெருக்கத்துடன் ஜெனிக் ஒரே மூச்சாகப் பணிவிடை செய்தார். பாளையங்கோட்டையின் சுற்றுப்புறங்களில், குறிப்பாக பத்மநாபபுரம், பூவாணி ஆகிய இடங்களில் சபைகள் பெருகின.

சில ஆங்கில நண்பரோடு (திரு டோரின்-மாவட்ட ஆட்சித் தலைவர்; கர்னல் கிளார்க்—படைத்தளபதி, பாளையங்கோட்டை திரு மார்ட்டின் — சம்பள அலுவலர்) ஜெனிக், மேற்குத் தொடர்ச்சி மலைச்

சாரல் பகுதிகளாகிய களக்காடு, அம்பாசமுத்திரம், பாவநாசம், குற்றாலம் ஆகிய பகுதிகளைப் பார்வையிட்டார் அவ்விடங்களில் கிடைத்த ஒவ்வொரு வாய்ப்பையும் அங்குள்ள மக்களைச் சந்தித்துக் கிறிஸ்துவைப் பற்றிச் சொல்லும் வாய்ப்பாகப் பயன்படுத்தினர். தீவினைப் பயமாக அப்போது அவருக்கு காய்ச்சல் ஏற்பட்டு, அது எப்போதும் துன்புறுத்தி வந்தது இறைப்பணி முயற்சியில் செழுமிய நண்பரான திரு மெக்கான் என்ற தூத்துக்குடியிலுள்ள டச்சு ஆளுநரின் அழைப்பை ஏற்று 1792 ஏப்ரல் 14-ம் நாள் தூத்துக்குடி சென்றுர். 1792 ஏப்ரல் 29 ஆம் நாள் அவர் டச்சு ஆலயத்தில் தமிழில் அருளுரையாற்றினர் மீண்டும் மீண்டும் வந்த முறைக் காய்ச்சலையும் பொருட்படுத்தாது அவர் மணற்பாடு, திருச்செந்தூர், ஆழ்வார்திருநகரி ஆகிய இடங்களைப் பார்வையிட்டார். அவர் தஞ்சை செல்லுமுன் பாளையங்கோட்டை பத்மநாபபுரம், பூவாணி (புதிய ஆலயப் பிரதிஷ்டைக்காக) ஆகிய இடங்களைப் பார்வையிட்டுவிட்டுத் தஞ்சாவூருக்கு 1792 செப்டம்பர் 14-ம் நாள் திரும்பிச்சென்றுர். வழியில் மீண்டும் தூத்துக்குடியைப் பார்வைட்டுச் சென்றுர்

திரு ஜெனிக் 1794 மார்ச் 18-ஆம் நாள் பாளையங்கோட்டை திரும்பி வந்து அங்கு 1795 ஜூலை 7ம் நாள் வரை தங்கினர். அவர் சிறு பயணம் கூடச் செய்ய இயலாதபடி உடல் நலக் குறைவாயிருந்தார் என்று அவருடைய நாட்குறிப்பு கூறுகிறது ஆனாலும் அந்நாட்குறிப்பே, அவர் சேரன்மகாதேவி அம்பாசமுத்திரம், பாஞ்சாலங்குறிச்சி ஆழ்ரூர் ஆகிய இடங்களைப் பார்வையிட்டு அங்குள்ள கிறித்தவர் சிலரை அல்லது சில சபை விசாரணைக்காரரையாவது சந்தித்துப் பேசினர் என்று கூறுகிறது

தரங்கம்பாடியின் மற்றொரு திருத்தொண்டர், Dr. J. P. ராட்லர் (இவர் பின்னாளில் சென்னையில் பெருமிதமான திருப்பணி செய்தவர்) இவர் 1795 அக்டோபர் / நவம்பர் மாதங்களில் திருநெல்வேலியைப் பார்வையிட்டார். பாளையங்கோட்டையில் ஆலயத்துக்குச் சொந்தமான ஒரு வீட்டை விடுதியாகக் கொண்டு (ஜெனிக் வாழ்ந்த வீடு) தங்கி திரு. சத்தியநாதனும் அவருடைய சபை ஊழியர்களும் உடன் வர அயலகத்துள்ள சபைகளைச் சந்தித்தார் சத்தியநாதன் சுவாட்ஸ் அவர்களிடம், திருவிருந்தில் பங்கு பெறவும், ஞானமுழுக்குப் பெறவும் ஆட்களைத் தயாரிப்பதில் தமக்குத் துணை செய்ய ஓர் உதவியாளர் வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருந்தார். ஆகவே 1796 செப்டம்பரில் தாவீது என்ற பேருடைய 21 வயது

இளைஞன் ஒருவன் பாளையங்கோட்டைக்கு அனுப்பபட்டான். அவன் ஒரு காலத்தில் ஓர் இந்து குடும்பத்தைச் சேர்ந்தவன் (பெயர்: சுந்தரானந்தன்) சாத்தான் குளம் முதலூர் ஆகிய ஊர்களுக் கிடையிலுள்ள காலன்குடியைச் சேர்ந்தவன்.

இளங்காளையாயிருந்த போது தன்பொழுது முழுவதையும் வானசாத்திரம், மருத்துவம், மந்திரவித்தை, ஆகியவற்றில் கழித்துப் பயனுள்ள எந்தவேலையும் செய்யாது வாழ்ந்தான். அவனுக்குக் கொடுக்கப்பட்ட கடமையைச் செய்யாது புறக்கணித்ததால் அவனுடைய கோபக்காரச் சிற்றன்னை ஒருத்தி அவனை தயிர் கலக்கும் மத்தினுல் அடித்துவிட்டாள். அவமானம் தாங்காமல் 1793 இல் அவன் வீட்டை விட்டு ஓடி, சில வணிகர்களைத் தொடர்ந்து மதுரை திண்டுக்கல் சென்று பின் தஞ்சாவூரை அடைந்தான். அங்கு ஒரு சடைக்காரனுக்குத் துணையாளராகப் பணி புரிந்தான். அப்போது சுவாட்ஸ் அவர்களுக்குத் திருப்பணிப் பயணவழி காட்டிகளாகிய சில சபை ஊழியர்களில் ஒருவரால் தேர்ந்தெடுக்கப்பட்டு கோலாப் அவர் களிடம் கொணரப்பட்டான். அவர் அவனுக்குப் போதனை செய்து ஞானமுழுக்காட்டி அவனைத் திருப்பணிவிடையில் நம்பிக்கையான பணியாளராக்கினுர்.

சில நாட்களில் தாவீது. தம் சொந்தக்காரர் பலர் வாழ்ந்து வந்த விஜயராமபுரம் என்னும் ஊருக்குச் சென்று, தான் பெற்று அனுபவித்த இயேசுக் கிறிஸ்துவின் அனுபவத்தை அவர்களிடம் ஓயாது சொல்லி வந்தார். சத்தியநாதனும் அவருடைய சபை ஊழி யக்காரரும் 1797 இல் அவரைப் பின்மற்றினர். அந்த வட்டாரத்தில் அவர்களின் ஒருமித்த முயற்சி, பெரியதோர் எழுச்சியாயிற்று. தற் போது கடாட்சபுரம் என்ற ஊரின் மையப்பகுதியாயமைந்திருந்த சண் முகபுரம் என்ற ஊரில் தாவீதின் உறவினர் பலர் உட்பட 20 பேர் முதல் குழுவினராக ஞான முழுக்குப் பெற்ருர்கள். அக்டோபர் 1797-இல் மற்றும் 20 பேர் கொண்ட ஓர் குழுவினர் ஞான முழுக்குப பெற்ருர்கள். ஆனல் புதிய கிறித்தவர் மிகுதியான எளனத்திற்குள் ளாயினர். அவர்களின் ஜெப வீடு, கிறித்தவரல்லாதவரால் இருமுறை இடிக்கப்பட்டது ஆகையால் அவர்கள் மொத்தமாகச் சேர்ந்து அடையல் என்ற ஊருக்குச் சில மைல் தூரமுள்ள ஓர் இடத்திற்குக் குடிபெயர்ந்து போயினர். தாவீது மறைத்திரு ஜெனிக் அவர்களின் பெயரால் 1799 ஆகஸ்டில், அங்கு ஒரு நிலம் வாங்கித் தம் உறவினர் களை அங்கு குடியேற்றினுர். மேலும் அங்கு பாளையங்கோட்டை

S. P C K.யைச் சேர்ந்த நண்பர் கேப்டன் எவரெட் என்பவரின் உதவியால் ஒரு கிணறு வெட்டினர். ஒரு ஜெப வீடும் கட்டினர். திருநெல்வேலி மாவட்டத்தில் முதலில் முழுவதும் தூய கிறித்தவரே அங்குத்தங்கியதால் அவ்வூர் முதலூர் எனப் பெயரிடப்பட்டது

1800 பிப்ருவரியில் ஜெரிக்ஸ் என்பவர் தம் பதினொரு நாள் பயணத்தில் திருநெல்வேலி வந்தார். தம் மூன்றும் பயணத்தின்போதிலிருந்து (1796) மிகுதியாக நோய்வாய்ப்பட்டிருந்து, இராமநாதபுரம் சென்ற ஜெனிக்கை அவரோடு செல்லத்தூண்டினர். அவருடைய கனிதரும் முயற்சிகள் பணிகளை அவர் பார்வையிட வந்தது. அவருக்கு இறுதியான வருகையாயிற்று. இராமநாதபுரத்திலிருந்து அவர்கள் 21 2 – 1800-இல் தூத்துக்குடி வந்து, டச்சு ஆலயத்தைச் சேர்ந்த கிறித்தவ சபையினரைக் கூட்டி, அவர்களிடை அருளுரையாற்றினர்கள் பின்னர் மணற்பாடு, திருச்செந்தூர் சென்று, வழியில் முதலூர் கிறித்தவர்களையும் 24 - 2 – 1800 இல் சந்தித்தார்கள். பத்மனுபபுரத்தைப் பார்வையிட்டு, பின் பாளையங்கோட்டையில் சில நாள் தங்கிய பிறகு 1800 மார்ச் 7 ஆம் நாள் மதுரை சேர்ந்தார்கள். ஜெரிக்ஸ், மேலும் வடக்குத்திசையாகச் சென்ற போது ஜெனிக் தஞ்சாவூர் திரும்பினர் அவர் அங்கு 1800 மே 10 ஆம் நாள் காலமானர்

சத்தியநாதன் கோலாப் அவர்களுக்கு எழுதிய 1800 ஜூன் 6 ஆம் நாள் கடிதத்தில், திருநெல்வேலியில் அவரை அறிந்த யாவரும் ஆழ்ந்ததுக்கத்துடன் அவர் மறைவுச் செய்தியைக் கேட்டனர் என்று குறிப்பிட்டார் 1801 மே 24 இல் பிரிட்டிஷ் அரசினரால் அழித்துத் தரைமட்டமாக்கப்பட்ட, பாளையக்காரரின் உறுதிக்காப்பிடமாகிய பாஞ்சாலங்குறிச்சியை; அங்குள்ள கிறித்தவரின் அழைப்பின் பேரில் சத்தியநாதன் இறுதியாகப் பார்வையிட்டார். அங்கு அவர்களோடு அவர் ஒரு வாரம் தங்கி, அவர்களுக்குப் போதித்து அவர்களில் ஐவருக்குத் திருவிருந்தைப் பரிமாறினர் பின்னர் மாப்பிள்ளையூரணிக்குச் சென்று, அங்கு முகாமிட்டிருந்த மாவட்ட ஆட்சித்தலைவர் லூஷிங்கனுடன் தங்கியிருந்த பரிவாரங்களுக்கும் பாளையக்காரருக்கும் கிறித்துவைப்பற்றி அவ்வாரம் முழுவதும் போதனை செய்தார். மேலும் வடக்கே மதுரை, திண்டுக்கல் ஆகிய இடங்களைப் பார்வையிட்ட பின் சத்திய நாதன் ஆண்டின் இறுதியில் தஞ்சாவூர் அடைந்தார் பாளையக்காரரின் இறுதிப்புரட்சி பரவியதின காரணமாக

அவர் அங்கேயே தங்சி விட்டார். 1801 ஆம் ஆண்டில் கிறித்தவர் புரட்சிக்காரராகவும், பிரிட்டிஷ் அரசினருக்குக் காட்டிக் கொடுப்பவராகவும் கருதப்பட்டதால் திருநெல்வேலிச சபை பெரிதும் துன்புற்றது. சபை பெரிதும் அலைக்கழிக்கப்பட்டது ஆனால் முழுவதும் பெயர்த்தெடுக்கப்படவில்லை. சத்தியநாதன் 1802 இல் மீண்டும் தம் பணிக்களத்திற்குத் திரும்பிய போது, அந்த ஆண்டில் வேறு எக்காலத்திலும் கிடைக்காத அறுவடைப் பயன் கிடைத்ததைக் கண்டார். ஜெரிக் 1802 செப்டம்பர் அக்டோபர் மாதங்களில் மேலோட்டமாக நெல்லை மாவட்டச் சுற்றுப்பயணம் செய்து போன பின்னும் சத்தியநாதன் மீண்டும் நெல்லை வருவதற்கு முன்னும் உள்ள இடை நாட்களில், அவர்களில் ஏறத்தாழ 5474 க்கும் மேலான தொகையினர் ஞான முழுக்குப் பெற்றுர்கள்.

அவர்கள் அவ்வாறு மொத்தமாக மதமாற்றம் அடைந்தமைக்குப் பல நோக்கங்கள் கற்பிக்கப்பட்டன. நவாப் அரசர்களின் ஆட்சிக்கால அடக்கு முறைகளுக்குக் கிறித்தவமதம் ஒரு புகலிடம் என மதம் மாறியவர்கள் கருதியதாகக் கூறப்பட்டது. ஆனால் நவாப்பின் அரசாங்கம் முடிவடைந்து 1801 ஆம் ஆண்டிலேயே நெல்லை மாவட்டம் பிரிட்டிஷ் அரசின் ஆளுகைக்குட்பட்டது. மதமாற்றமோ 1802 இல் தான் நடைபெற்றது. உண்மையில் அவர்கள் கிறித்தவர் ஆவதற்கு முன்னைவிட, ஆன பிறகு தான் அதிகமான அடக்குமுறையை அநுபவித்தார்கள். திருச்சபையின் திருத்தொண்டர் தாமே அப்போது மிகவும் ஏழ்மை நிலையிலிருந்ததால், புதுக்கிறித்தவர் யாதொரு பொருளாதார நன்மையும் பெற முடியவில்லை கிறித்தவர்கள். வரி விலக்களிக்கப்பட்டார்கள் என்ற எண்ணமும் வெறுங்கற்பனையே அவர்கள் மதமாற்றமடைந்த பின் இந்து அலயங்களுக்குக் கொடுக்க வேண்டிய வரியைத்தான் கொடுக்க மறுத்தார்களே யொழிய சட்டப்படி அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய வரியை எப்போதும் மறுக்கவில்லை.

உண்மையில், ஜெரிக்ஸ் தாம் சென்னைக்குத் திரும்பியபின், திருநெல்வேலி மாவட்ட ஆட்சிக்குத் தலைவர் திரு. ஸ்தேவான் லூஷிங்டனுக்கு எழுதியமடலில் (15-12-1802) கிறித்தவர்கள் அரசாங்க கீழ்மட்ட அதிகாரிகளால் கொடுமைப்படுத்தப் படுவதாகக் குறிப்பிட்டார். திரு கோலாப் திருநெல்வேலிக் கிறித்தவர்களின் துன்பத்தில் கலந்து உதவி செய்ய திருநெல்வேலிக்கு அனுப்பப்பட்டார்.

அவர் 1803 மார்ச் 11 ஆம் நாள் பாளையங்கோட்டையை அடைந்தார். அவர் மாவட்ட ஆட்சித் தலைவரையும் துணை ஆட்சித் தலைவரையும் சந்தித்ததின் பேரில் அவர்கள் கிறித்தவர்களுக்கு முழு பாதுகாப்பும் கொடுப்பதாக வாக்களித்தனர். என்றாலும் துஷ்டர்கள் சிலர் முதலூர் ஆலயத்திற்குத் தீ வைத்து விட்டனர். அவர்கள் பிடிபட்டுக் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். இந்தத் துக்கமான செய்தி லண்டன் S P C K குழுவினருக்கு எவ்வாறோ எட்டியதால், அக்குழுவினர் கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர்களுக்குத் தம் சார்பானர்கள் மூலம் விவரம் கேட்டனர். அதனால் தகுந்த நடவடிக்கை எடுக்கப்பட்டது. மேலும் சென்னை அரசாங்கம் கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர்கள் 16-7-1805 அன்று செய்த தீர்மானத்தின் நகலைக்கோத்து வைத்து நெல்லை மாவட்ட ஆட்சித் தலைவருக்கு ஒரு தாக்கீது 1805 ஆகஸ்ட் 14 ஆம் நாள் அனுப்பியது. அதன்படி திருத்தொண்டர்கள் எல்லாவிதப் பாதுகாப்பும் அளிக்கப்படவேண்டும்; இந்துக்களுக்கும் முகமதியர்களுக்கும் அளிக்கப்படும் அதே சமயப் பொறுமை, தாயகத் கிறித்தவர்களுக்கும் உத்திரவாதம் செய்யப்பட வேண்டும். என்று ஆணை கிடைத்தது. திருநெல்வேலிச் சபையின் பொறுப்பைத் தஞ்சாவூரிலுள்ள கோலாப் அவர்களிடம் விட்டுவிட்டு ஜெரிக்ஸ் 1803 அக்டோபர் 2 ஆம் நாள் காலமானார்

சத்தியநாதனின் இறுதி இரண்டாண்டு (1804, 1805) களில் அவருக்கும் உடன் பணியாளர்களுக்கும், கருத்துவேறுபாடு ஏற்பட்டது. உள்ளூர்ச்சபை ஊழியர்கள் அவரை ஓர் அன்னியராகவே கருதினர். கிழக்கிந்திய வணிகரானவரும் S P C K குழுவிற்குத் தீவிர ஊழியம் செய்தவருமான சாயர் என்பவரும் உள்ளூர் ஊழியர்களுக்கு ஆதரவளித்ததால், கோலாப்பும் சத்திய நாதனுக்கு எதிரான உணர்வு கொண்டார். அதனால் சத்தியநாதன் 1805 இல் தஞ்சாவூருக்குத் திரும்பிச்சென்று அங்கு வாழ்ந்தார். மீண்டும் 1810 இல் திருநெல்வேலியைப் பார்வையிட்டுத் தஞ்சாவூர் சென்றார் அங்கு 1815 இல் காலமானார். Dr. கிளாடியஸ் புச்சணன், தாம் 1805 இல் ஆகஸ்டு 31 இல் சத்தியநாதனைத் தஞ்சாவூரில் அவருடைய வேண்டு கோட்கிணங்கிச் சந்தித்த போது, அப்பழுத்த ஞானி ஓர் தெய்வ ஆவேசம் பொருந்திய அருளுரையாற்றினர் என்று தம் செய்தி இதழில் குறிப்பிட்டார்.

திரு சத்தியநாதன் ஓய்வு பெற்றபோது அவருடைய இடத்தை நிரப்ப அபிஷேகம் பெற்ற ஊழியர் ஒருவரும் கிடைக்கவில்லை. திரு. ஞானப்பிரகாசம் என்ற சபை ஊழியர், சபையை மேற்பார்வை

யிட அனுப்பப்பட்டு, எல்லா வகைகளிலும் திரு. சாயர் என்பவரின் உதவியை நாட வேண்டுமென்று அறிவிக்கப்பட்டார். தீவினைப்பயனாக ஞானப்பிரகாசம் தஞ்சாவூர்க் கட்சிக்காரரிடம் சேர்ந்து கொண்டு திரு. சாயரைப் புறக்கணித்தார். அதனால் கோலாப் லண்டன் திருத் தொண்டர் சங்கத்திலிருந்து அப்போது தான் தரங்கம்பாடி வந்திருந்த ரிங்கில் டாபே என்பவரை இக்கட்டான அப்பணியிலிறங்க ஒழுங்கு செய்தார். ரிங்கில் டாபே எப்போதும் அசாதாரணமானமனிதனுகை கையால் S. P. C. K. குழுவினர் திருநெல்வேலிச் சபையைக் கை விட்டு விட்டனர் என்று நினைத்து, இப்பணிக்களத்தை எடுத்துக் கொள்ளும் படி லண்டன் திருத் தொண்டர் சங்கத்திற்கு ஓர் ஏற்பாட்டைத் தெரிவித்தார் ஆனால் L. M. S. இயக்கத்தின் இயக்கு நர்கள் மிகக் கவனமாக ரிங்கில் டாபிக்குச்செய்யும் உதவியை வரை யறைப்படுத்தி சில சபை ஊழியர்களை நியமித்து அவர்கள் பணியை மேற்பார்வையிடச் செய்தனர். ரிங்கில் டாபியின் செய்தி இதழ்கள் (1806—1808) பல்வேறு திருத்தொண்டு நிலையங்களை அவர் பார்வை யிட்டது பற்றி விளக்கம் செய்கின்றன. அவர் தன்னலமற்ற பழக்கங் களுடையவராகையால், பணியின் போது எந்த ஆலயத்திலும், எளிய ஜெபவீட்டிலும் கூடத் தூங்குவார். கலொனல் ட்ராட்டர் போன்ற நண்பரால் கொடுக்கப்பட்ட போதே கோட் அணிந்தார். மற்ற நேரங் களில் அவர் கோட் அணிந்து வந்தது அபூர்வமே S. P. C. K. குழு 1808 பிப்ருவரி 4 ஆம் நாள், கோலாப் செய்த ஏற்பாட்டை மறுத்து தன் திருத்தொண்டரை ஒழுங்கு முறையில் ஞான முழுக்குப் பெறுதவரோடும் L. M. S. சபையோடும் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாதென்று அறிவுறுத்தியது. ஆகவே அறிஞர் ரிங்கில் டாபே தம் புகழ்க் காட்சியில் மங்கி, 1808 இல் தெற்குத் திரு வாங்கூரில் புதிய பணியைத் துவக்கினர். அங்கு அவர் திருவிடைப் பணி அடுத்த எட்டு ஆண்டுகள் வரை மிகவும் நன்மதிப்புப் பெற்றது

ரிங்கில் டாபே வெளியேறிய காலம் தொட்டு (1808) மீண்டும் அவர் பாளையங்கோட்டைக்கு 1816 நவம்பர் 2 ஆம் நாள் வந்த காலம் வரை, மறைத்திரு ஜேம்ஸ்ஹக் என்பவரை முதற்படை யின் ஆலயக்குருவாகக் கொண்டுத் திருநெல்வேலிச் சபை, தொடர்ந்த இன்னல்களையும், உறுதிப்பாடற்ற சலனங்களையும் சந்தித்துக் கடந்தது வேதாகமங்கள் நன்கொடைப்பணி நடைபெறுமல் போயிற்று. தஞ்சாவூர் திருத்தொண்டர் சபையால் இனிமேலும் திருப் பணித்தொண்டரை அனுப்ப இயலவில்லை என்ற போதிலும், அச்

சபையின் ஞானப்பிரகாசம், அடைக்கலம், வேதநாயகம், ஆபிரகாம் ஆகிய நான்கு சபை ஊழியரும் 1811 மார்ச் 17ஆம் நாள் திருச்சிராப் பள்ளியில் கோலாப், போலே, சத்தியநாதன் ஆகியோரால் அபிஷேகம் செய்யப் பெற்றனர். அவருள் வேதநாயகம் உடனடியாகப் பாளையங்கோட்டைக்கு அனுப்பப்பட்டார்

இயற்கையின் பெருஞ்சீற்றத்தால் தென்மாவட்டங்கள் (திருநெல்வேலி மதுரை, ராமநாதபுரம்) 1811இல் இருந்து 1813 வரை பேரழிவுக்குள்ளாயின. 1811ஆம் ஆண்டு துவக்கத்தில் ஏற்பட்ட, வழக்கத்திற்கு மாறான பெருவெள்ளமும் அதைத் தொடர்ந்து பரவிய பாவகாலக் சாய்ச்சலும் மிகுதியான உயிர்களைப் பலி வாங்கின. அவ்வாறு 1813ஆம் ஆண்டு பலியானவர்களுள் போதகர் வேதநாயகமும் ஒருவர். இவ் இயற்கைத் துன்பத்தின் தொடர்ச்சியாக 1812 — 1813 ஆம் ஆண்டுகளில் கொடும்பஞ்சம் ஏற்பட்டது கிறித்தவ ஜாதியினர், ஆதரவற்றவராய் நின்று. வெள்ளத்தாலும், பஞ்சத்தாலும் பலவிடங்களில் சிதறடிக்கப் பட்டார்கள் அதனால் அவர்கள் தங்கள் பழைய தேவதைகளுக்கும். பிசாசுகட்கும் விசுவாசமாய் இராததால் அவற்றால் தண்டிக்கப் பட்டோமோ என்று கூட எண்ணத்தலைப்பட்டனர். போதகர் வேதநாயகத்தின் மறைவினால் (1813) அவர் இடத்தை நிறைவு செய்ய பாளையங்கோட்டைக்கு வந்த போதகர் ஆபிரகாமும் கூடக் கடுமையான நோய்வாய்ப்பட்டார் அதனால் அவர் திருநெல்வேலிச் சபைப்பொறுப்பை 1815இல் தான் ஏற்க முடிந்தது.

1816 மார்ச் 22 ஆம் நாள், பம்பாய்க்குச் செல்வதற்காகக் காத்திருந்த கப்பலில் பயணம் செய்யக் கொச்சிக்கு வந்த, கல்கத்தா வின் முதற் பேராயர் மிடில்டன் என்பவர் தம் வழியில் பாளையங் கோட்டைக்கு வருகை தந்தார் அதனால் மேற்கூறிய இருண்ட காலம் மாறி மீண்டும் ஒளிவீசத் தொடங்கியது. பாளையங்கோட்டை யிலிருந்து அன்று பேராயர் அவர்கள் ஆர்ச்டீக்கன் வாட்சனுக்கு எழுதிய கடிதம் அவருக்குக் கிடைத்த நல்வரவேற்பை மகிழ்வாய்க் கணித்துக் கூறியது. பிராமணகுருக்கள் 30 பேர் பேராயரிடம் வந்து, தங்கள் ஆலய உபயோகத்திற்கு அரசாங்கத்தால் அளிக்கப்பட்ட நிலங்களின் விளைச்சல் மிகக் குறைவானது என்றும், பேராயர் அவர் கள் தலையிட்டு அதைமிகுதியாக்க வேண்டுமென்றும் வேண்டினார்கள். மேலும் 30 பாளையங்கோட்டைக் கிறித்தவர், போதகர் ஆபிரகாமின்

நிலையில், பேராயர் என்றும் கண்டிராத இருண்ட வறண்ட தோற்றத்துடன், தமிழ் இறைவழிபாட்டுப் புத்தகத்திலிருந்து ஒரு சங்கீதம் பாடிக்கொண்டு வந்தார்கள் அந்தக்காட்சி பேராயரின் வாழ்க்கை வரலாற்று நூலில் அருமையாக விவரிக்கப்பட்டிருக்கிறது. "முதல் புராட்டஸ்டான்ட் பேராயர் முன்னிலையில், ஊமையும், மாந்திரீக நம்பிக்கையும் உடைய குருக்கள் பார்த்துக் கொண்டு நின்ற போது, இத்தகை வளர்ச்சி பெறாத விக்கிரக ஆராதனைக்காரர் நிரம்பிய நாட்டில், இச் சிறிய மந்தையினர், கிறிஸ்துவின் வழிபாட்டினர் இவ்வாறு ஊர்வலமாய் வந்து நின்று சீயோன்கீதங்களில் ஒன்றைப் பாடிய காட்சியைவிட, வேறு எந்த காட்சியும் என்னைக் கவரும் என்பதைக் கற்பனை கூடச் செய்ய முடியாது" என்று எழுதப் பட்டிருக்கிறது.

மறுநாள் கலோனல்டிராட்டர் அவர்களோடு காலைச் சிற்றுண்டியை முடித்த பின்னர் பேராயர் அவர்களைக் குளோரிந்தா ஆலயத்திற்கு அழைத்து ஓர் எழுச்சியான வரவேற்புக் கொடுத்தனர். பேராயர் அவர்கள் பள்ளிக் குழந்தைகள் மணலில் அகர வரிசை எழுத்துக்களை எழுதியதைப் பார்த்து மகிழ்ச்சியும் ஆர்வமும் கொண்டார்கள் ஞாயிற்றுக்கிழமை, இறைவழிபாடு மாவட்ட ஆட்சித் தலைவரின் இல்லத்தில் நடைபெற்றது. குளோரிந்தா ஆலயம் தங்க ஏற்ற நிலையில் இல்லாததால் ஆட்சித்தலைவர் இல்லத்திலேயே பேராயர் தங்கினர்.

பேராயரின் பாளையங்கோட்டை வருகைக்குப் பின் சில மாதங்களில் மறைத்திரு ஜேம்ஸ்ஹக் அவர்கள் வந்து சேர்ந்தார்கள். (சுவார்ட்ஸ்க்குப் பிறகு) திருநெல்வேலியில் ஆலயஸ்தாபகர்களில் இரண்டாமவர் என்று அழைக்கப்படும் தகுதி பெற்றவர் இவரே. அவர் பேருக்கல்கொண்டு திருத்தொண்டாற்றிய அரியதோர் மாதிரியான பட்ட ஆலயக்குருவாய்த்திகழ்ந்தார். அவருடைய ஐந்தாண்டுக் கால ஆலயக்குருப்பணியில் (1816 – 1821) திருநெல்வேலி சபையைத் தம் கூடுதல் பொறுப்பாக ஏற்று நினைவு கூரும் வகையில் உள்ளூர் வாழ் திருத்தொண்டரின் இடத்தை நிறைவு செய்தார். ஆலய தொண்டாற்றும் சங்கத்தைத் தாம் பணியாற்றும் நெல்லைப் பணிக்களத்திற்கு அழைப்பதில் ஆயுதம் போன்று செயலாற்றினர். முதன் முதலாக, வருங்காலத் தொலை நோக்கோடு நெல்லையிலும் பாளையங்கோட்டையிலும் வாங்கி வைத்திருந்த சிறப்பான பகுதிகளில்

கட்டிய பள்ளிகட்கு C. M S உதவி பெறுவதற்கு ஆவன செய்தார். தம் சொந்தக்கையிருப்புப்பணத்திலும், உள்ளூர்வாசிகளிடம் பெற்ற சந்தாத் தொகையிலும், மாவட்ட ஆட்சித்தலைவர் திரு ஜான் காட்டன் என்பவரிடம் பெற்ற தொகையாலும் பல செயல்களைச் செய்தார். தர்சநல்லூர், மேலப்பாளையம் தூத்துக்குடி ஆகிய ஊர் களில் உடனடியாகப் பள்ளிகளைத் திறந்தார் சபை ஊழியராகப் பயிற்சி பெறுவதற்கு கிறித்தவ மாணவர்க்காக ஒரு விடுதி கொண்ட பள்ளியை முதன்முதலாகப் பாளையங்கோட்டையில் திறந்தார்.

சென்னை S. P. C K. கமிட்டியின் வேண்டு கோளுக்கிணங்க திரு ஹூக்; வருகைதந்து திருநெல்வேலியிலுள்ள பல கிறித்தவ மையங்களைப் பார்வையிட்டார். 1818 செப்டம்பர் 10 ஆம் நாள் திருநெல்வேலித் திருச்சபையின் நிலையை அதன் பலத்தையும் பல வீனத்தையும் பற்றிப் புலமை சால் அறிக்கை ஒன்று தாக்கல் செய்தார். மேலும் செப்டம்பர் 1819, ஆகஸ்டு 1820, மார்ச் 1821 ஆகிய மூன்று சமயங்களிலும், சபையின் முன்னேற்றம் பற்றிய அறிக்கைகள் அனுப்பினார்

1817 இல் 'போலே' அவர்களால் அபிஷேகம் பெற்ற பாக்கியநாதன், நல்லதம்பி, விசுவாசநாதன் ஆகிய மூன்று சபை ஊழியர்களில் ஒருவரான விசுவாசநாதன் 1819 இல் வந்து நாசரேத் சபையின் பொறுப்பை ஏற்றுக்கொள்ள, ஆபிரகாம் முதலூருக்குச் சென்றார். ஹூக் இவ்விரு சபைகளையும் பார்வையிட்டு, மனக் கிளர்ச்சியோடு அச் சபைகளைப்பற்றி இங்கிலாந்திலுள்ள ஒரு நகரத் திலும் கூட, இங்கே உள்ளதைப் போல, அவ்வளவு மிகுதியாக மதச் சார்புச்செயல்களைக் கவர்ச்சியாகக் காண்பது அரிது என்று விளக்கி எழுதினார்.

1820இல் சென்னை S. P. C. K கமிட்டி ஹூக் அவர்களின் அறிக்கையைப் பரிசீலனை செய்த பின்னர் திருநெல்வேலிப் பள்ளிப் பணிகளுக்கென்று மாதம் ரூ40/- ஐக் கல்விக் கொடையாக வழங்கியது அதனால்ஹூக், S. P C K. நிலையங்களில் C. M. S. கணக்கில் முன்னால் துவக்கிய 7 பள்ளிகளையும் S. P. C. K. கணக் கிற்கு மாற்றி, மேஷ்ஞானபுரம் நாசரேத், முதலூர் ஆகிய ஊர்களிலுள்ள பெற்றோர்களின் ஓயாத தூண்டுதல் பேரில் இரு பெண்கள் பள்ளிகளை நாசரேத்திலும் முதலூரிலும் துவக்கினார். 1821 மார்ச் மாதம் ஹூக்

படைத்தலைமையக ஆலயக் குருவாக மாற்றம் செய்யப்பட்டதால், பாளையங்கோட்டையை விட்டுப்போக மனமில்லாதவராகப் பிரிந்து சென்னையருகிலுள்ள பூனமல்லி என்னும் இடத்திற்குச் சென்றார்.

அவருடைய தெளிவான ஐந்தாண்டுக் காலப் பணியில் நிலை பெற்ற திடமான செயல்களைச் செய்து முடித்திருந்தார். மாவட்ட ஆட்சித் தலைவரின் வேண்டுகோளுக்கிணங்க, நெல்லை மாவட்டத்தின் திருச்சபைச் சொத்துக்கள் யாவற்றையும் அளந்து கணக்கிட்டுச் சரிபார்த்தார். அவர் S. P. C. K. திருச்சபை மூழ்கப்போகும் சரியான சமயத்தில் புத்துயிர் அளித்தார். C. M. S திருச்சபை திருநெல்வேலி யில் நுழையவும், ஒரு நூற்றாண்டுக்கு மேலாக வெற்றிச் சங்க நாதம் ஊதி மகிமையுடன் பரவவும், அதைப்பலர் பின்பற்றவும் கொடியாட்டி வழிகாட்டினார். ஆகையால் திருநெல்வேலித் திருச்சபை நன்றிப் பெருக்கோடு அவரையும் அவர் பணிகளையும் நினைவு கூர்கிறது. அந் நன்றியின் அடையாளமாக அவருடைய பெயரை ஓர் ஊருக்கிட்டு அவ்வூரை ஹக்ஜயர் புரம் என்று அழைக்கிறது.



## அத்தியாயம் III

# இருபெரும் இயக்கங்கள்: 1. சி. எம். எஸ்.

'நான் நட்டேன், அப்பொல்லோ நீர்ப்பாய்ச்சினான்,
தேவனே விளையச் செய்தார்' (கொரிந்தியர் 3 : 6)

ஆதித்திருச்சபையைப் பற்றி பரி. பவுல் கூறியது திருநெல்வேலிக்கும் மிக உண்மையாகும் ஷ்வாட்ஸ் அதை நட்டார். சத்தியநாதனுக்கும் அவரது உபதேசமாரும் அதைக்கவனிக்கும் படி விட்டுச் சென்றார்ம் தரங்கம்பாடி தஞ்சாவூர் ஆகிய இடங்களிலிருந்து ஊழியஞ்செய்த S. P C. K. மிஷினெரிகள் வளரும் திருச்சபைக்கு நீர்ப்பாய்ச்சினார்கள். பாளையங்கோட்டையின் தேவதிட்டத்தின் படி அப்போது இராணுவ குருவாக நியமிக்கப்பட்டிருந்த அருள் திரு ஜேம்ஸ் ஹாப் அவர்கள் வாட்சி காலத்தில் அதைக் காத்தார். நம்பிக்கை தரும் இந்நிலத்துக்கு நீர்ப்பாய்ச்சும்படி இரு பெரும் நீரோடைகள் பாய்ந்து வந்தன. தீவிர உதவி கோரி ஹாப் ஐயர் அனுப்பிய வேண்டுகோளுக்கு இணங்கி 1820 இல் திருநெல்வேலிக்குத்தனது ஆட்களை அனுப்பிய திருச்சபை மிஷனெரி சங்கம் (C. M. S) ஒன்று அடுத்தது சுவிசேஷ அபிவிருத்தி சங்கம் (S. P G) 1825 – இல் S P. C K. தன் பணித்தலத்தை ஒப்புவித்திருந்தது. திருநெல்வேலி திருச்சபையின் இனிவரும் வளர்ச்சிக்கான பொறுப்பை இவ்விரு சங்கங்களும் சேர்ந்து ஏற்றுக்கொண்டன 1896-ல் அத்தியட்சர் நியமனம் பெற்றதாக திருச்சபை மலர்ந்தது 1924 - இல் இருசங்கங்களும் தங்கள் பணித்தலங்களை ஒன்றாக இணைத்து ஒரே அத்தியட்சாதீனமாக உருவாக்கின.

### (a) திருநெல்வேலி அப்போஸ்தலன் ரேனியஸ் வருகை (1820—1835)

திருச்சபை (C M. S) மிஷனெரி சங்கம் 1799 – இல் இங்கிலாந்தில் உருவாக்கப்பட்டிருந்தது துணிச்சலான இரு ஜெர்மானிய இளைஞர்கள் – ரேனியசும் ஸ்னூர் என்பவரும் 1815 ஜனவரியில் C. M. S. சார்பாக சென்னை மாநில அதிபரைச் (Governor) சந்தித்தனர். அவரது நல்லாசியுடன் கறுப்பர் பட்டணத்தில் (Black Town) தங்கள் ஊழியத்தைத் தொடங்கினர். இதற்கு முன்னர் தரங்கம்பாடியில் அவர்கள் ஐந்து மாதகாலம் தமிழ் கற்றிருந்தனர்.

மிகத்துரிதமாக சென்னையிலும் அதைச்சுற்றிலும் சபைகளையும் பள்ளிகளையும் அவர்கள் நிறுவ முடிந்தது. தியோக்கர் ஷ்மிட், பெர்னுரட் ஷ்மிட் என்ற இன்னும் இரு ஜெர்மானியர்களையும் C. M S. அனுப்பியது. அதனால் அவர்கள் ஊழியம் உறுதிப்பட்டது.

அச்சு வார்த்தையின் வலிமையையும் ஊழியஸ்தானம் எதுவாயினும் அங்குள்ள மொழியில் எழுதப்பட்ட வேத நூல்கள் சுவிசேஷப் பிரதிநிதிகள் இவைகளின் தேவையையும் உணர்ந்தவராக, 1815 இல் வேதாகமத்தின் தமிழ் மொழி பெயர்ப்பை ரேனியஸ் தொடங்கியிருந்தார் 1817 நவம்பர் 5-ஆம் நாள் அவர் சென்னை வேதாகமச் சங்கத்தை நிறுவினர். தமிழில் பெருமளவில் தகுந்த சுவிசேஷப் பிரதிகளை அச்சிட்டு விநியோகம் செய்யும் பொறுப்பை ஏற்கும்படியாக 1818 செப்டம்பர் 29 ஆம் நாள் அவர் சென்னைத் துண்டு பிரசுரச் சங்கத்தை ஏற்படுத்தினர்.

திருநெல்வேலிக்கு ஒரு மிஷினெரி வேண்டுமென்ற ஹாப் ஐயரின் அழைப்பிற்கு இணங்கி இந்த ரேனியசைத்தான் அனுப்பத் தீர்மானித்தது C M S. ஐந்தாண்டு காலம் இவ்வளவு வெற்றியுடன் உழைத்த இடத்தை விட்டுப் பிரிவது ரேனியசுக்குத் துக்கமாயிருந்தது திருநெல்வேலியின் அப்போஸ்தலராகும்படித் தாம குறிக்கப்பட்டிருந்ததை அவர் அறியாதிருந்தார் பரந்த ஒரு நிலம் அங்கு அவருக்காகக் காத்திருந்தது. அங்கு கிறித்தவ உலகின் மிகப் பெரிய சபைகளில் ஒன்றை உருவாக்கியவரும் கட்டி எழுப்பியவரும் அவர் ஆவார்.

1820 ஜூலை 7ம் நாள் ரேனியஸ் தம் மனைவி மக்களுடன் பாளையங்கோட்டை சேர்ந்தார். மகிழ்ச்சியோடும் விடுதலை உணர்ச்சியோடும ஹாப் ஐயர் அவர்களை வரவேற்றார்; கோட்டைக்குள்ளே அவர்களுக்காக ஆயத்தப்படுத்தியிருந்த வீட்டில் அவர்கள் குடியிருக்க அவர் உதவி செய்தார். பெர்னுர்ட் ஷ்மிட் விரைவில் — 1820 அக்டோபர் 20 - அவர்களுடன் வந்து சேர்ந்தார் இனி வரும் 15 ஆண்டுகளில், மனிதப்பிரசாரம் சொல்லப்போனால், திருநெல்வேலி மிஷன் மிகச் செல்வாக்குடையவராக ரேனியஸ் விளங்குவாராயினர் (C. M. S. மிஷனெரி ரிஜிஸ்டர்)

ஹாப் ஐயர் பாளையங்கோட்டை பெரிய ரஸ்தாவில் விலை மதிப்புடைய சொத்து[1] வாங்கி அதில் அவரது பள்ளிக்கூடம் செமினெரி,

1 தற்போதைய பரி. திரித்துவ அத்தியட்சாலயம், அருகிலுள்ள கதீட்ரல் மேல்நிலைப்பள்ளி, மேரி சார்ஜென்ட் மேல்நிலைப்பள்ளி இவைகள் அடங்கியது.

பங்களா இவற்றைக் கட்டியிருந்தார். சீக்கிரத்தில் ரேனியஸ் ஷ்மிட் ஆகியோர் C M S. சங்கத்துக்காக அதனை வாங்கினர். சில மாறுதல் களுடன் இந்த முக்கிய இடத்தில் தற்போதைய பரி. திருத்துவ அத்தி யட்சாலயம், அருகிலுள்ள கதீட்ரல் மேல்நிலைப்பள்ளி, மேரி சார்ஜன்ற் மேல்நிலைப்பள்ளி இவைகள் அடங்கியது அவர்கள் குடியிருந்து கொண்டு, தங்கள் ஊழியத்தைச் செய்யத் தொடங்கினர்.

மூன்று C. M. S. சபைகளும் பதினொரு பள்ளிகளும் பாளையங்கோட்டையிலும் அதனைச் சுற்றிலும் இருந்தன. ஹாப்ஜயர் அவைகளை ரேனிசிடம் ஒப்புவித்தார். 1820-இல் ஆபிரகாம் ஐயரும் (நாசரேத்) 1822-இல் விசுவாச நாதன் (முதலூர்) இறந்தபின், அங்கு ஏற்படுத்தப்பட்டிருந்த சபையையும் பள்ளியையும் கவனிக்கும் படி S. P. C. K. சங்கம் ரேனியசைக் கேட்டது.

பையன்கள் செமினரியில் * 1821-இல் சாதிபேதங்கள் எழுந்தன. சிலகாலம் அது மூடப்பட்டிருந்தது அது முழுமையாக மாற்றியமைக்கப்பட்டு 1822-இல் மீண்டும் திறக்கப்பட்டது. (உள்ளூர் மூப்பர்களால் பெரிதும் விரும்பப்பட்ட) பெண்களுக்கான ஒரு செமினரி ⁸ 1823 மார்ச் மாதம் தொடங்கப்பட்டது. இப்பள்ளி களெல்லாம் ஷ்மிட்-இடம் ஒப்புவிக்கப்பட்டன. அவருக்கு உதவி யாக ஒரு விசாரணை ஆசிரியர் (Inspecting School Master) இருந்தார். தமது பெலனையெல்லாம் ரேனியஸ் சபை ஊழியத்துக் காகப் பயன்படுத்தினர்.

ஞானஸ்நானம் பெற்ற 10 கிறிஸ்தவர்களுடன்' பாளையங் கோட்டை (முருகன்குறிச்சி) யில் முதல் C. M S சபை 1822 மார்ச் 10-ஆம் நாள் உருவாகியது. (கோட்டைக்குள்ளிருந்த முந்திய S P. C K. சபை, 1843-இல் C. M. S. சபையுடன் இணையும் வரை, தொடர்ந்து சுயாதீனமாக இருந்து கொண்டிருந்தது)

அதன் பிறகு திருநெல்வேலி மாவட்டம் முழுவதிலும் சுற்றுப் பிரயாணம் செய்து, ஒழுங்காக ரேனியஸ் நிறைவேற்றிய சுவிஷேப் பணியானது ஒவ்வோர் ஆண்டும் பல சபைகள் ஏற்படுத்தப்படும் படியாக நற்பலன் தந்தது; 1838-இல் அவர் இறக்கும்போது மொத்தம் 371 சபைகள் அவ்வாறு ஏற்பட்டிருந்தன. 1833 (செப்டம்பர் 18-16) இல் அறிவர் ஒல்ப் (Dr. Wolf) என்னும் பெரும் யூத மிஷனரி திருநெல்வேலிக்கு வருகை தந்தார் ரேனியசின் வேலையைப்

பார்த்த அவர் இவ்வாறு எழுதியதில் வியப்பில்லை!'' இவர் உண்மையாகவே ஒரு மிஷனரி ... ... அப்போஸ்தலர்களின் காலத்துக்குப் பின் தோன்றியவர்களில் மிகப்பெரிய மிஷனரி இவர் என நான் நம்புகிறேன்.

ரேனியஸ் மூலமாய்த் திருநெல்வேலி திருச்சபை அடைந்த மாபெரும் வளர்ச்சியின காலவரிசைப்படி வரிசையாக எடுத்துச் செல்ல இப்போது இடமில்லை. அவருடைய காலத்தின் சிறப்பான சில முக்கியக் குறிப்புகளை மட்டும் குறிப்பிட்டுப் போகலாம்.

பெருமளவு இந்து நகராயிருந்த திருநெல்வேலி ரேனியசை வெகுவாய்க் கவர்ந்தது. 1818-இல் குற்றாலம் ரஸ்தாவில் திறக்கப் பட்ட) ஹாப் ஐயரின் ஆங்கிலப்பள்ளி 1831-இல் மூடப்பட்டபோது, ரேனியஸ் அதனை ஒரு சிற்றாலயமாக மாற்றினர். 1822 ஜூலை 16 ஆம் நாள் அதில் முதலாவதாக மாலை ஜெபம் நடத்தினர்; அதன்பிறகு பிரதி புதன் மாலையிலும் அறிவு படைத்த ஓர் இந்துக் குழுவை அவர் அங்கு சந்தித்தார் அவர்கள் அவரிடம் நுட்பமான கேள்விகளைக் கேட்டனர். பிராமண நண்பர்களில் பலர் பாளையங்கோட்டையிலுள்ள ரேனியஸ் பங்களாவுக்கு அவருடன் கூடச் சென்று அவரோடு தொடர்ந்து உரையாடினர். மிகச் சிறப்பாக எழுதப்பட்ட துண்டுப் பிரசுரங்கள், சுவிசேஷப்பங்குகள் வாயிலாகத் தமது பணியை உறுதிப் படுத்தும்படி இது ரேனியசுக்குப் பேருக்கம் தந்தது. ஆறுண்டுகள் விடா முயற்சியுடன் உழைத்த பின் நெசவாளர் இனத்தைச் சேர்ந்த 60:பேர் கிறிஸ்துவைத் தெரிந்து கொண்டனர்; திருநெல்வேலியில் முதல் ஞானஸ்நானம் 1828 ஆகஸ்டு 24 ம் நாள் நடைபெற்றது.

1824-இல் ரேனியஸ் தமது இந்துத் தோழரும் வள்ளலுமான வெங்கு முதலியாரிடமிருந்து ரூ 750/– என்னும் சலுகை விலைக்கு, பெரிய ரோட்டை அடுத்துள்ள மதிப்புள்ள சொத்தை[1] வாங்கினர். ஏற்கனவே C. M S க்குச் சொந்தமான பகுதிக்கு வடக்கே அது உள்ளது புதிதாகக் கிடைத்த வளாகத்துக்கு பையன்கள் செமினரியை ரேனியஸ் மாற்றிக்கொள்ள இது உதவி செய்தது. இவ்விதமாகக் கிடைத்த நிலத்தில் ஓர் ஆலயம் அமைக்க அவர் திட்டமிட்டார்; 1826 ஜனவரி 3-ஆம் நாள் அதற்கு அடிக்கல் நாட்டப் பட்டது. பத்தாண்டுகளுக்கும் பின்னர்; முதல் குரு அபிஷேக ஆராதனையை' அதில் நடத்தியபின் (1836 ஜனவரி 30-ஆம் நாள் நடைபெற்ற அருள்திரு ஜாண் தேவசகாயம் அவர்களின் அபிஷேகம்)

பேராயர் கோரி, பத்திரங்களுக்குக் கையெழுத்திடுகையில் ஆலயத்தின் பெயரைக் கேட்டார். அதற்குப் பெயரில்லை என பெற்றற் ஐயர் சொன்னபோது, பேராயர் அந்த இடத்திலேயே பரிசுத்த கிறித்தவ ஆலயம்[1] எனப் பேரிட்டார்.

பின்வரும் ஆண்டுகளில் பலமுறை விரிவுபடுத்தப் பட்ட போதிலும், முக்கிய நீளமான பாகம் 1826-இல் இருந்துதான், அருகிலுள்ள இந்துக் கோயில்களின் கோபுரங்களைக் காட்டிலும் உயரமான (155 அடி உயரமான) பெரிய கோபுரம் பெற்றிற் ஐயரால் 1845-இல் கூடுதலாகச் சேர்க்கப்பட்டது; அன்று முதல் மாவட்டம் முழுவதுக்கும் இது ஓர் அடையாளமாக உள்ளது.

பாளையங்கோட்டையை மையமாகக் கொண்டு பணி செய்த ரேனியஸ், மாவட்டம் முழுவதிலும் பல கிராமங்களைச் சந்தித்து சிறு சபைகளை நாட்டினர் (சாத்தான்குளம், 1823, நெல்லை / மெஞ்ஞானபுரம் 1825, இடையன்குளம் 1827 ஆசீர்வாதபுரம் 1828 நல்லூர் 1832, சுரண்டை 1833). ஆதிக்கிறித்தவர்களுக்கு உபத்திரவம் ஏற்பட்ட இடங்களில், பத்திரமான கிறித்தவக் குடியிருப்புக்களில் குடியேற்றுவிக்க ரேனியஸ் உதவி செய்தார். இவ்வாறு பக்தியுள்ள ஒரு பிரஷ்ய நாட்டுப் பிரபு அளித்த நன்கொடையினால் வாங்கிய ஒரு கிராமத்தில், புளியன் குரிச்சிக் கிறிஸ்தவர்களை 1827 இல் குடியேற்றுவித்தார். ஷ்லோபின் என்ற இடத்துப் பிரபு டோஹ்னா என்ற அப்பிரபுவின் பெயரால் அவ்விடத்துக்கு டோஹ்னாவூர் என்று பேரிட்டார்.

1827-இல் அருள்திரு J C விங்க்ளர் ஐயர் ரேனியசுக்கு உதவி செய்யும்படி அனுப்பப்பட்டார். அவர் தூத்துக்குடிக்கு அனுப்பப்பட்டார். ஆனால் அவரது சுகக்குறைவினால் அவர் அதிக உதவியாயிருக்க முடியவில்லை. 1830 - இல் ஷ்மிட் திடீரென பணித்தலத்தை விட்டுச் சென்றார், நான்கு மாதங்கள் ரேனியஸ தனித்தவராகப் பொறுப்புகளைக் கவனிக்க வேண்டியதாயிற்று. பதிலாட்கள் விரைவில் அனுப்பப்பட்டனர். அருள்திரு P. P. ஷாப்டர் (முன்னர் மாயவரத்தில் பணியாற்றியவர்) 1831 ஏப்ரல் 5-ம் நாள் வந்து சேர்ந்து டோஹ்னாவூரிலும் சாத்தான்குளத்திலுமுள்ள வேலைப் பொறுப்பை ஏற்றார். இளைஞ

1. பேராயர் சார்ஜெண்ட் பயிற்சி நிலயம், கதீட்ரல் தருப்பன அதனை அடுத்துள் வீட்டு வரிசைகள்
2. பேராயர் ஸ்டீபன் நீல் அவர்களால் பரிசுத்த திருத்துவ அத்தியட்சாலயமாக உயர்த்தப்பட்டது.

ரான அருள்திரு ஜேம்ஸ் முல்லர் அவரைத் தொடர்ந்து வந்தார். (1832 ஜனுவரி 19) (இவர் 1834 - இல் ரேனியசின் மகள் கேதரின் அம்மையாரை மணந்தார்.) (பேராயர் டர்னரால் - 1830 இல் உதவி குருவாக அபிஷேகம் பெற்ற முதல் தென் இந்தியர்) அருள்திரு ஜான் தேவசகாயம் 1832 ஜூன் 23-ஆம் நாளிலும் அருள்திரு ஜான் லெக்லர் 1835 - இலும் வந்தனர்.

ரேனியஸ் தமது மிஷினெரி வாழ்க்கையின் உச்சக்கட்டத்தி லிருக்கும் போது தான் C M S இன் திருநெல்வேலி மிஷனில் விரும்பப் படாத பிளவு ஏற்பட்டது. அக்காலத்திலிருந்த ஏழு திறமை யான உபதேசிமாரின் குரு அபிஷேகத்தைப் பற்றியே அது உண்டா னது. லூத்தரன் முறைப்படி அவர்களுக்கு குரு அபிஷேகம் கொடுக்க C. M S சென்னைக் கமிற்றியின் அநுமதியை ரேனியஸ் நாடினர் கமிற்றி அனுப்பிய பதில் இதுவே: இந்தியாவில் பேராயர் எவரும் இல்லாத போது (அதாவது 1814 க்கு முன்) அல்லது இந்தியர்களுக்கு அபிஷேகம் கொடுக்கப் பேராயருக்கு அதிகாரம் இல்லாத போது (அதாவது 1824 க்கு முன்) இந்தியர்கள் லூத்தரன் முறைப்படி அபி ஷேகம் செய்யப்பட்டிருக்கலாம். ஆனல் இந்தியர்களுக்கு அபிஷேகம் அளிக்கக்கூடிய பேராயர் ஒருவர் இருக்கும் போது, அவர்கள் ஆங்கி லேயே முறைப்படி அபிஷேகம் செய்யப்படுவது அவசியம். இங்கிலாந்து திருச்சபையின் பல்வேறு விதிகளைப்பற்றித் தமது உபதேசிமாருக்கு மனச்சாட்சியின்படி மறுப்பு உண்டென ரேனியஸ் பதில் எழுதினர். இதுபற்றி ரேனியஸ் எழுதிய ஒரு துண்டுப் பிரதி C M. S. தாய்ச் சங்கத்தாரின் கவனத்தை ஈர்த்தது, அவரது பணி வேண்டாமென்று தீர்மானம் நிறைவேற்றியது. 1834 மே 18 ஆம் நாளில் ரேனியசுக்கு இச்செய்தி கிடைத்தது 1834 மே 28-ஆம் நாள் C M S. செயலாளர் அருள்திரு டக்கர் மிஷன் பொறுப்பேற்கும்படி பாளையங்கோட்டைக்கு வந்தார். ரேனியசின் உபதேசிமார் அனைவரும் அவரைச் சூழ்ந்து வந்தனர், அவர்களுடன் நெடுநேரம் கலந்தாலோசித்த பின், பணித் தலத்தை விட்டு விலகிக் கொள்ளும் தமது தீர்மானத்தை அவர் அறிவித்தார். 1835 ஜூன் 21-ஆம் நாள் ஷாப்டர், முல்லர், லெக்லரு டன் தூத்துக்குடியிலிருந்து சென்னைக்குக் கப்பலேறினர்.

அருள்திரு. ஜார்ஜ் பெற்றிற், அருள்திரு எட்வர்ட்டென்ட், திரு எட்வர்ட் சார்ஜென்ற் (அப்போது ஓர் உபதேசியார்) ஆகியோர் 7-7-1835 இல் பாளையங்கோட்டை அடைந்தனர்; அருள்திரு டக்கர்

வழி காட்டியபடி, மிஷன் வேலையின் பல்வேறு பகுதிகளின் பொறுப்
பெற்றனர். ஆனால் தாவீது என்பவருடைய தலைமையில் சில உபதேசி
மார் புரட்சி செய்ய எழுந்தனர். (வட ஆற்காட்டில் அப்போது வேலை
யைத் தொடங்கியிருந்த) ரேனியஸ் வந்து தீவிரமாய் உதவ வேண்டு
மென அவர்கள் செய்தி அனுப்பினர். அவரும் தமது முந்தியப் பணித்
தலத்துக்குத் திரும்பி வரத் தீர்மானித்தார். 1835 அக்டோபர் 22-ஆம்
நாள் அவர் பாளையங்கோட்டை வந்தவுடன், அவரது ஆதரவாளர்கள்
அவருக்கு அமோக வரவேற்பளித்தனர். 1835 டிசம்பரில் லெக்லரும்
1836 ஜனுவரியில் சாப்டரும் அவரைத் தொடர்ந்து வந்து சேர்ந்தனர்

தாமிரபரணி ஆற்றின் மேல் பக்கத்திலுள்ள ஒரு வீட்டில்
தமது புதிய தலைமையகத்தை ரேனியஸ் ஏற்படுத்தினார். விரைவில்
அருகே ஓர் ஆலயத்தைக் கட்டினார்; அவரைச் சேர்ந்தவர்கள்
மேல்பக்கத்தார் என்று அழைக்கப்படலாயினர்; பெற்றிற் ஐயரைச்
சேர்ந்தவர்கள் கீழ்ப்பக்கத்தார் என்றழைக்கப்பட்டனர் மறு
பக்கம் தாவுதல்களும் கசப்பான விவாதங்களும் அடங்கிய மிக
வெறுப்பூட்டும் ஓர் அதிகாரம் தொடர்ந்தது 1836- ஜனவரியில்
சென்னைப் பேராயர் தானியேல் காரி பாளையங்கோட்டை வந்து,
சண்டையிடும் இரு குழுவினரையும் ஒப்புரவாக்க முயன்றார்; முயற்சி
வீணாயிற்று. ஆயினும் 1836 ஜனவரி 31-ஆம் நாள் அவர் அருள்திரு.
ஜான்தேவசகாயத்துக்கு குரு அபிஷேகம் கொடுத்து அதனால்
அதிகாரப்பூர்வமான C M S. குழுவினைப் பலப்படுத்தினார்.
பிரஷ்ய நாட்டு மன்னன் பிரடரிக் வில்லியம் III உட்பட, இந்திய
விலும், வெளிநாட்டிலுமுள்ள அவரது ஏராளமான நண்பர்கள்
அனுப்பிய பணத்தைக்கொண்டு, ரேனியஸ் தம்மைத் தாங்கிய
சபையை ஆதரித்தார். இதனாலுண்டான பாரமும் வருத்தமும்
தாங்கக்கூடாததாயிற்று; அவரது உடல் நலம் குன்றியது;
அவரது நாட்குறிப்பேடு 1838 மே 9-ஆம் நாளில் முடிகிறது. அந்
நாளில் எழுதிய கடைசி குறிப்பு, தாங்கமுடியாத உஷ்ணத்தைப்
பற்றி ரேனியஸ் குறிப்பிடுவதாகும். அம்மாத இறுதியில் அவர்
வேறு வேலைகளை ஒதுக்கிவிட்டு, வேதாகம மொழிபெயர்ப்புமட்டும்
சிந்தனை செய்தார். 1838 ஜூன் 5-ஆம் நாள் அவரது அழைப்பு
வந்தது. அன்று பிற்பகல் அவர் தன்னுணர்வு இழந்தார்; இரவு
7-30 மணிக்கு திருநெல்வேலி அப்போஸ்தலன் தனது ஆண்டவரும்
தலைவருமானவரின் பிரசன்னத்துக்குள் அமைதியாகச் சென்றார்
திருநெல்வேலியிலுள்ள அவரது புதிய ஆலய மக்கள் பாளையங்கோட்
டையில் அவர் கட்டி எழுப்பிய பரிசுத்த திரித்துவ ஆலயத்துடன்

சேர்க்கப்பட்டனர். கசப்பையெல்லாம் மரணம் அகற்றிவிட்டது. 7—6 1838 காலையில் நடைபெற்ற அடக்க ஆராதனைக்கு "இஸ்ரவேலின் பிரபு" என் அவரை மதித்திருந்த இரு பிரிவினரும் வந்தனர். இன்னும் ஐரோப்பிய அதிகாரிகள், வியாபாரிகள், இந்து நண்பர்கள் ஏராளமானவர்களும் வந்திருந்தனர். தேசிய நெடுஞ்சாலைக்கு சில கெஜ தூரத்தில், அடைக்கலபுரத்திலுள்ள அவரது கல்லறை கூடுதலான கவனம் பெறத் தகுதியுள்ளது. திருநெல்வேலிக்கு வருகை தந்த மிஷனரிகள் மிகத் துடிப்புள்ளவரானவரின் இளைப்பாறும் இடமாக அது பேணிக்காக்கப்படவேண்டும்.

## (b) பெற்றிற் ஐயர் காலம் (1834—1847)

ரேனியஸ் மறைவுக்குப்பின் ஒருவருக்கொருவர் எதிரியாயிருந்த இருபிரிவினரும் மெதுவாக ஒன்றுபட ஆரம்பித்தனர். லண்டன் மிஷனரி சங்கத்தைச் சேரும்படி லெக்லர் 1837-இல் திருநெல்வேலியைவிட்டு விலகினார் ரேனியஸ் மரணமடைந்து மூன்று மாதங்களுக்குப்பின் ஷாப்டர் C.M.S சங்கத்துடன் ஒப்புரவாகி, நல்லூரில் அமர்த்தப்பட்டார். சுவிசேஷபுரத்தில் முல்லர்மட்டும் ஈராண்டுகளாகத் தனிப்பிரிவாகத் தொடர்ந்து செயல்பட்டார். ஆனால் 1840 டிசம்பரில் அவரும் C.M.S. மந்தைக்குள் வந்து சேர்ந்தார். பிளவு ஏறத்தாழ முழுவதுமாகக் குணமாயிற்று; கிட்டத்தட்ட 5 வீணான ஆண்டுகளின் இடைவெளிக்குப்பின் மிஷன் ஊழியம் தொடர்ந்து நடைபெறலாயிற்று.

மிஷன் ஊழிய அமைப்பில் ஒரு மாற்றம் தேவையென விரைவில் உணர்ந்தனர். ரேனியசைப் போன்ற ஒருவரால், பாளையங்கோட்டையிலிருந்துகொண்டு ஒரே முகமாகச் செயல்படக் கூடிய மிஷன் ஊழியம் இனி கூடாததாயிற்று. 'தங்கியிருந்து செய்யும் மிஷனரிமுறை' ஏற்படுத்தப்பட்டது. முக்கியமான இடங்களில் மிஷனரிகள் தங்கியிருந்து, ஒவ்வொருவரும் சென்னைக் கமிற்றியுடன் நேரடியாகத் தொடர்பு கொள்ளுதலே இம்முறை. புதிய மிஷனரிகளில் மிகப்பெரியவரான பெற்றிற் தலைமையிடமான பாளையங்கோட்டை ஊழியத்துக்குப் பொறுப்பாயிருந்தார். (1841-ல் கூடுதலாகக்கட்டப்பட்டிருந்த மண்டபத்துக்குப்பின்னர்) பாளையங்கோட்டை பரிசுத்த திரித்துவ ஆலயத்தின் மகிமையான கோபுரத்தை 1845-இல் கட்டியவராக அவர் சிறப்பாக நினைவு கூரப்படுகிறார். (இந்துக் கோயில்களை இடித்து அதன் கற்களைக்கொண்டு முன்னர்

ஒரு மதுரைய வீரன் கோட்டையைக்கட்டியிருந்தான்) அழிந்து போன அக்கோட்டையிலிருந்து (பெற்றிற் தாம் கட்டிய கோபுர) அஸ்திவாரத்துக்குப்போதுமான பளிங்குக் கற்களை எடுத்துக்கொள்ள மாவட்ட ஆட்சித்தலைவரிடம் அனுமதி பெற்றார். சிற்பி, பொறியியல் வல்லுநர், மேற்பார்வையாளர் எல்லாமே அவர்தான். கொத்தனாரின் வேலையையும் அடிக்கடி அவரே செய்யவேண்டியதிருந்தது. கோதிக் அலோசிய சிற்ப வேலைப்பாடுகள் உள்ளூர் செங்கல்வேலையாட் களுக்குத் தெரியாததினால் அவ்வாறு செய்தார். கோபுரத்தின் உச்சியில் பந்தை மாட்டிவைக்க அவர் யாரையும் நம்பவில்லை. மேற்குத்தொடர்ச்சிமலைக்குக் கீழே சூரியன் இறங்கிக்கொண்டிருந்த ஒரு மாலை வேளையில் அவரே மரச்சாரங்களில் ஏறி, அவரே அதனை அதன் இடத்தில் அமைத்தார்?

வெளியூர்களில் சில உறுதியான ஆலயங்களை ஏற்படுத்து வதிலும் பெற்றிற் ஐயர் காரணமாயிருந்தார் — ஆள்வானேரியிலும் (அக்டோபர் 1846), டோனாவூரிலும் (அக்டோபர் 1847), பண்ணை விளையிலும் (அக்டோபர் 1849) அவ்வாறு ஏற்படுத்தினர். கிறிஸ் தவம் பரவுவதற்கு முந்திய பத்தாண்டுகளில் கூட்டு எதிர்ப்பு இருந்தது மிஷன் பரவுவதைத் தடுக்கத் திருச்செந்தூரில் விபூதி சங்கம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. ஏரலிலும் நல்லூரிலும் கலகங்கள் உண்டாக்கப்பட்டன. ஆனால் கிறிஸ்தவத்தைத் தழுவியவர்கள் உபத்திரவங்களையெல்லாம் உறுதியாகச் சந்தித்தனர். தங்கள் புதிய விசுவாசத்தில் உறுதியாயிருப்பதையும் தங்கள் பழைய நம்பிக்கைக் குத் திரும்பிச் செல்லும் கேள்வி இல்லை என்பதையும் தங்கள் உறுதி யான ஆலயங்களினால் காண்பிப்பதற்கு அக் கிராமங்களின் மக்கள் பக்தி வைராக்கியத்தோடிருந்தனர். உள்ளூர்களில் ஆலய கட்டு மான சங்கம் ஒன்றை ஏற்படுத்தவும், அதற்காக ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஆண்டும் தனது சிறப்பு நாளின் வருமானத்தைப் படைக் கவும் ஊக்கமூட்டப் பெற்றனர். ஆசீர்வாதபுரத்தில் தொடங்கி, இந்த முன்மாதிரி மெஞ்ஞானபுரம், கடாட்சபுரம், ஆலங்குளம், ஆரைக்குளம் ஆகிய இடங்களில் பின்பற்றப்பட்டது; இவ்வூர்களி லெல்லாம் இந் நூற்றாண்டின் நாற்பதுகளில் அழகிய ஆலயங்கள் எழுந்தன. (பின்னர் வந்த C. M. உயர்நிலைப்பள்ளி, கல்லூரி இவைகளின் முன்னோடியான) 1844-இல் பாளையங்கோட்டையில் நிறுவப்பட்ட ஆங்கிலேய-பிராந்தியப் பள்ளி (Anglo-Vernacular School) மிஷன் பெருமையை உயர்த்த சரியான காலத்தில்

தோன்றியதாயிற்று, ஏனெனில், மக்காலேயின் பெயர் பெற்ற 1835 ஆம் ஆண்டு நடபடிகளுக்குப் பின்னரும் அதன் விளைவாக அரசுப் பணியில் ஆங்கிலம் தெரிந்த மனிதர் விருப்பப்பட்டபடியினாலும் இவ்விதப் பள்ளிகளுக்கான தேவை அதிகமாயிற்று. மேலும், பத்து வயதிலிருந்து பார்வையற்றவராயிருந்த ஐரோ ஆசியர் வில்லியம் குருக்ஷாங் என்னும் திறமையான கல்வி அறிவர் ஒருவர் ஒருவரை அதன் தலைமை ஆசிரியராக C. M S சங்கம் பெற்றுக்கொண்டது. நல்வாய்ப்பாயிற்று. அவர் மதிப்பு மிகப்பெற்ற ஆசிரியரானார்; திருநெல்வேலியில் அவரது பெயர் எல்லா வீடுகளிலும் வழங்கும் பெயராயிற்று அடுத்த ஐம்பதாண்டுகள் எறத்தாழ மாவட்டத்தின் எல்லா உயரிய அதிகாரிகளும் இப்பள்ளியிலிருந்து தோன்றியவர்களே மிகத்திறமையான சில இந்து இளைஞர்களைக் கிறிஸ்துவிடம் வழி நடத்துவதற்கும் குருக்ஷாப் கருவியானார் அவர்களில் ஒருவர் 1847 இல் மனம் மாறிய திருவேங்கடம் நாயுடு; அவர்தான் சென்னையில் சிறப்பு வாய்ந்த குருக்களில் ஒருவராக விளங்கிய அருள் திரு. W. T. சத்தியநாதன் ஆனார்.

குருக்களாக அபிஷேகம் பெறத் தகுதியான இளைஞருக்கு உள்ளூரிலேயே இறையியற் கல்வி புகட்டும் முதல் முயற்சி 1846-இல் தொடங்கியது. சென்னைக் கமிற்றி மிகுதியான வேண்டா மனத்துடன் இத்திட்டத்துக்கு இணங்கியது; பாளையங்கோட்டை பரிசுத்த திருத்தவ ஆலயக்கோபுரத்தின் காற்றேட்டமான ஓர் அறையில் பெற்றித் ஐயரால் முதல் வகுப்புகள் நடத்தப்பட்டன.

பலதரப்பட்ட திறமைகள் உடையவர் பெற்றித் ஐயர். தம்மோடு எப்போதும் ஒரு மருந்துப்பெட்டியை அவர் சுமந்து செல்லுவார்; மிக வெற்றியுள்ள 'காலரா மருத்துவர்' என அவர் கருதப்பட்டார். அவரிடம் இலக்கியச் சுவையுண்டு; திருநெல்வேலி மிஷனின் முதல்வரலாற்றின்[1] ஆக்கியோன் அவரே, பிளவு உண்டான ஆண்டுகளிலும் அதைத் தொடர்ந்து கிறிஸ்தவர்களுக்கு உண்டான கொடிய உபத்திரவத்திலும் தொடக்க காலத்து மிஷனை மிகத்திறமையாக நடத்தினர். 1847 ஜனவரியில் அவர் இங்கிலாந்துக்குச் சென்ற காலத்துக்குள்ளாக, அவரது மிஷனரி உடனூழியர்கள் தங்களுடைய பல்வேறு வெளியூர்களில் உறுதிபெற்று, அவைகளை மேலும் விருத்திசெய்யும் திறமையுடையோராயினர்.

1. பெற்றித்; ஜார்ஜ் : *திருச்சபை மிஷனரி சங்கத்தின் திருநெல்வேலி மிஷன் (1851)*

# XXXI

வெளியூர்களில் மிகச் செழித்து வளர்ந்தது மெஞ்ஞானபுரம், 1825-இல் ரேனியஸ் அங்கு முதலாவதாகச் சபையை நாட்டியிருந்தார். ஆனால் 1837 கிறிஸ்மஸ் தினத்தில், பராக்கிரமமுள்ள ஜான் தாமஸ் அவ்வூரில் கால்வைத்து அவ்வூரைத் தன் இதயத்தில் ஏற்றுக்கொண்டதிலிருந்துதான், அதின் முன்னேற்றம் தொடங்கியது. இந்த மந்தையின் உலகிய, ஆவிக்குரிய தேவைகளைப் பூர்த்தியுடைய ஜான் தாமஸ் மணற்பகுதிகளுக்கு நீர்ப்பாய்ச்சும் ஏராளமான கிணறுகளைத் தோண்டி, மெதுவாக அவைகளைக் குடியிருப்புக்கேற்ற நிலப்பரப்புகளாக மாற்றும் வேலையைத் தொடங்கினார். திருநெல்வேலியில் கிறித்தவ முயற்சியின் மீது இதுவரைக் கடவுள் அருளியிருக்கும் நல்லாசிகளுக்கு ஸ்தோத்திரமாக காணிக்கையாகவும் இனி வரும் ஆண்டுகளில் இன்னும் பெரிய பரிமாணங்களாக அதுவளர்ச்சியடையும் என்பதற்குச் சின்னமாகவும் ஒரு பெரிய கர்பீரமான ஆலயத்தைப் பற்றி அவர் கனாக் கண்டார் அதைக் கட்டுவதற்கான முதல் நன்கொடை- 29-1- 1843 இல் அவ்வூருக்கு வருகை தந்த இந்தியாவின் மெற்றிராணியார் (Metropolitan of India) பேராயர் வில்சன் வழங்கியதாகும். ஆலயங்கட்டுவதற்கு மக்கள் தாரளமாகக் கொடுத்தனர். அருள்திரு ஜாண் டக்கர் (செயலர், C. M. S கமிற்றி, சென்னை) இங்கிலாந்தில் பல நண்பர்களுக்கு எழுதி பெரிய உதவித் தொகையைப் பெற்றுத்தந்தார் கெண்ட் (Kent) நகரின் குட்னஸ்டோன் ஆலய அமைப்பு கையாடப்பட்டது; 20-6 1843-இல் முன்னர் இந்துக் கோயில் இருந்த இடத்தில் அருள்திரு ஜாண் டக்கர் ஐயரால் அஸ்திபாரமிடப்பட்டது அதே நாளில் அவர் மேரி எலியற் டக்ஸ்போர்டு பெண்கள் பள்ளிக்கும் அஸ்திபாரமிட்டார். இப்பள்ளியை நிறுவுவதற்கு இங்கிலாந்திலுள்ள அருள்திரு E V எலியற் ஐயரும் டக்ஸ்போர்டு கிராமத்தினரும் தாராளமாகக் கொடுத்தனர். எலியற் ஐயர் அக்கிராமத்தில் போதகராயிருந்தார் அதன் சிற்ப வேலைப்பாடமைந்த சிற்றாலயம் 1844-இல் பூர்த்தியானது. ஆலய வேலை பூர்த்தியாகி 10-12-1947-இல் அது பிரதிஷ்டை செய்யப்படும்வரை, இச்சிற்றாலயம் அக்கிராமத்தினரால் இறைவழிபாட்டுக்குப் பயன் படுத்தப்பட்டது. நிறைவு பெறாத வேலைகள் படிப்படியாக செய்யப்பட்டன. மெஞ்ஞானபுரத்துக்கு 21-1—1851-இல் வருகை தந்த சென்னைப் பேராயர் டெல்ற்றி பிரசங்க பீடத்தை நன்கொடையாக வழங்கினார். 1859—1860 இல் கருப்பு, வெள்ளைப் பளிங்குக்கல் தளம் போடப்பட்டது. திருநெல்வேலியில் அப்போது மாவட்ட நீதிபதியாயிருந்த திரு எட்வர்ட் ஸ்டோரி அதன் முழுச்செலவையும் ஏற்றுக்கொண்டார்.

கெம்பீரமான கோபுரம் (192 அடி உயரமானது) லண்டன் நகர் சிற்பி ஹர்சே என்பவரால் திட்டமிடப்பட்டது. அது மெதுவாக ஆகாயத்தில் உயர்ந்தது. சென்னை மாநில ஆளுனர் நேப்பியர் பிரபுவின் முன்னிலையில் களிப்புக்கொண்டாட்டக் காட்சிகளினூடே 9 - 10 - 1868ல் அது பிரதிஷ்டை செய்யப்பட்டது. இந்தியாவில் தாம் பார்த்த ஆலயங்களிலெல்லாம் மிக மேன்மையானது இதுவே என அவர் புகழ்ந்தார். அழகில் கல்கத்தா அத்தியட்சாலயத்தையும் விட மேம்பட்டது என்றார் அவர்.

அருள்திரு. ஜான் தாமஸ் ஐயரின் ஒழுங்கான திருப்பணிவிடையினால் சபை எப்போதும் நன்றாகப் போஷிக்கப்பட்டது. குழந்தைகள் வாலிபர், பெண்கள் ஆகியோரின் தேவைகளெல்லாம் எவ்வாறு முழுமையாகச் சந்திக்கப்பட்டன என்பதை எந்த ஞாயிற்றுகிழமைகளிலும் அவருடைய நாட்குறிப்பேட்டில் அவர் எழுதியிருப்பவைகளை வாசித்துவிட்டால் போதும். 1844–இல் ஆண் பையன்களுக்காகத் தொடங்கப்பட்ட போர்டிங் பள்ளி[1] பாளையங்கோட்டை ஆங்கில-பிராந்தியப் பள்ளியை மாதிரியாகக்கொண்டது. ஆனால் கிராமச் சூழ்நிலைக்கேற்றாற்போலிருக்கும்படி பார்த்துக்கொள்ளப்பட்டது. டோனவூர் சாக்தான்குளம், பண்ணைவிளை, நல்லூர், சுரண்டை ஆகிய ஊர்களிலும் இதைப் போன்ற பள்ளிகள் உண்டாயின. அவைகளின் முன்னோடியாக மெஞ்ஞானபுரப் பள்ளி விளங்கியது. இப்பள்ளிகளெல்லாம் வெளியூர்கள். அவைகளின் சுற்றுப்புறங்களின் தேவைகளைச் சந்தித்தன.

மெஞ்ஞானபுரத்தில் தங்கியிருந்த அருள்திரு ஜாண் தாமஸ் அதனைச் சுற்றியுள்ள கிராமங்கள் பலவற்றுக்குத் திருச்சபை பரவுவதற்கு காரணமானார். அவைகளில் ஒன்று வெள்ளாளன்விளை அவ்வூரில் ஓர் இந்துக்கோயில் இருந்தது. அருள்திரு. ஜாண் தாமஸ் அவ்வழியாகச் செல்லும்போதெல்லாம் அவரது குதிரை மீது கல்லெறி விழுந்தது. அந்த இடத்திலேயே ஒரு கிறிஸ்தவ ஆலயம் எப்போதாதாவது எழும்பவேண்டுமென அவர் ஊக்கத்துடன் ஜெபித்தார். அப்படியே ஆயிற்று. புகழ்பெற்ற பேராயர் அசரியாவின் சொந்த ஊர் இதுவே என்பது சிறப்புக்குறியது. அவருடைய தந்தை அருள்திரு வேதநாயகம் சபைக்குருவாயிருக்கும்போது உள்ளூர் மக்களின் நன்

---

1. இன்றைய அமடிரோஸ மேல்நிலை பள்ளியாக உயர்ந்துள்ளது.
2. 1856-இல் குரு அபிஷேகம் பெற்றவர். ராவ் சாகிப் அருள்திரு சாமுவேல் பவுல் ஐயரின் தந்தை

## XXXIII

கோடைகளினுலேயே பரிசுத்த திரித்துவ ஆலயம் கட்டப்பட்டு 1875-இல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இன்னொரு ஊர் நாலுமாவடி ஆதிக்கிறிஸ்தவர்கள் அங்குக் கொடிய உபத்திரவத்தைச் சந்திக்க வேண்டியதிருந்தது. அருள்திரு ஜாண் தாமஸ் ஐயரும் பால் தானியேல்' என்னும் அவருடைய மிகச் சிறந்த உபதேசியாரும் அங்கு கோபக்கூட்டத்தால் சூழ்ந்துகொள்ளப்பட்டனர். நாசரேத்திலிருந்து S P G மிஷனரி கேமரர் தலைமையில் வந்த கிறிஸ்தவ வீரர்கள் கூட்டத்தினுல் அவர்கள் கைகளிலிருந்து மீட்கப்பட்டனர். நாலுமாவடி சபை விரைவில் அதிகமாக வளர்ந்தது. அதின் முதல் ஆலயம் (1842) பெரிதாக உறுதியான ஆலயமாகக் கட்டப்பட்டு 24-9-1850-இல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அச்சமயம் அருள்திரு. ஜாண் தாய்நாடு சென்றிருந்தார்.

1868-இல் அவருடைய ஆலய வேலை நிறைவு பெற்றவுடன் அருள்திரு ஜாண்தாமஸ் உடல்நலம் குன்றியது. 1870-இல், (நாசரேத்திலுள்ள S P G. மருத்துவ மிஷனரி) அருள்திரு டாக்டர் ஸ்டரஹன் என்பாரின் அன்பான கவனிப்பு கிடைத்த போதிலும், உடல் நலம் மிக மோசமாயிற்று 28 – 3 – 1870-இல் அவர் அமைதியாக இவ்வுலகைவிட்டுச்சென்ருர்; அவரே திட்டமிட்டுக்கட்டி, பணி செய்த மகிமையான ஆலயப்பிரகாரங்களில் அவரது உடல் அடக்கம்செய்யப்பட்டது தகுதியானதே. தம் உள்ளத்தில் ஏற்றுக்கொண்ட ஊரில் வாழ்க்கை முழுவதும் அவர் செய்த பணிகளை, "திருநெல்வேலியில் C M S. நூற்றுண்டு வரலாறு" என்னும் தமது நூலில் பவுல் அப்பாசாமி சிறந்த வகையில் சுருக்கித் தருகிறர். "மக்களுக்கு கல்வியறிவூட்டி அவர்களைச் சிறப்பித்தலிலும், செழிப்பையும் வளமையையும் உண்டாக்குவதிலும் கிறிஸ்தவப்பக்தி ஆர்வம் இவைகளின் உயரிய நிலைக்கு மக்களைப் பயிற்றுவிப்பதிலும் ஒரு குறிப்பிட்ட ஊருக்கு ஒரு மிஷனெரி யாது செய்யக்கூடும் என்பதற்குச் சரியான எடுத்துக்காட்டு ஒன்றைத்தெரிந்தெடுக்க வேண்டுமானுல் தயக்கமின்றி எவரும் மெஞ்ஞானபுரம் ஊரைத் தெரிந்தெடுப்பார்"

### பண்ணைவிளை

C.M S.-ஆல் கவனமாக வளர்க்கப்பட்ட இன்னெருஊர் அவர் இது முற்றிலும் அங்கு 20 ஆண்டுகள் ஊழியம் செய்த அருள்திரு. J. T டக்கர் ஐயரின் பலன். அவர் 1866-இல் இங்கிலாந்துக்குச்

சென்றிருக்கும்போது இறந்தார். (C.M.S. க்குத் தம் சேவைகளைக் கொடுக்குமுன் இங்கிலாந்தில் அவர் ஒரு மருத்துவராயிருந்தார். அவர் தம் கைகளாலேயே மனந்திரும்பியவர்கள் 3000 பேருக்கு ஞானஸ்நானம் கொடுத்தார் என்று சொல்லப்படுகிறது. தாமே தயாரித்தத் திட்டங்களின்படி 60 எளிய கிராம ஆலயங்களைக் கட்டினார். அவைகள் பெரும்பாலும் முன்னர் பேய்க்கோயில்கள் இருந்த இடங்களிலேயே கட்டப்பட்டன. இப்பேய்க்கோயில்களை அவைகளில் முன்னர் வழிபட்ட மக்களே அழித்தனர். பண்ணை விளையில் பெரிய ஆலயத்தையும் மிஷன் பங்களாவையும் அவர் கட்டினார். இவை அருகிலுள்ள குளம், பசுமையான நெல்வகைகள் இவைகளுக்குமுன் அழகிய காட்சியுடன் விளங்குகின்றன. அவருடைய ஆலயமணி ஓசையைக் கேட்கும் தூரத்திலுள்ளவர்கள் கிறிஸ்தவர்களாயிருப்பார்கள் அல்லது ஒரு கிறிஸ்தவனுக்கு இருப்பதுபோன்ற வேத அறிவு பெற்றவர்களாயிருப்பார்கள் என்று சொல்லப்படுவதுண்டு. அவரது ஊழியம் அவ்வளவு முழுமையானதாயிருந்தது.

C.M.S. S.P.G. என்னும் இரு சங்கங்களும் திருநெல்வேலி மாவட்டத்தின் கிழக்குப் பகுதியில் தங்கள் மிகப்பெரிய சபைகளை ஏற்படுத்தி தங்கள் மிகச்சிறந்த ஆலயங்களைக்கட்டின என்பது ஒன்றுபோல் நடந்துவிட்டதொரு செயலாகும். ஆயினும், C.M.S. மிஷனரிகள் மேற்கிலும், தெற்கிலும், வடக்கிலும்கூட ஊடுருவிச் சென்றிருந்தனர். ரேனியஸ் காலத்திலேயே, 1820 முதல் 1855 வரை, மேற்கு திருநெல்வேலி C.M.S. வட்டத்துக்குள் இழுக்கப் பட்டிருந்தது. 1835-இல் C.M.S. ஆல் வாங்கப்பட்டு நல்லூர் என்று பேரிடப்பட்ட 30 ஏக்கர் பரப்புள்ள ஒரு கிராமத்தில் ஆதியில் மனம் மாறியவர்கள் குடியேறினார்கள். நல்லூரும் சுரண்டையும் இப்பகுதியில் முக்கிய ஊர்கள்; இவைகள் ஷாப்டர், பேரன்புருக் இவர்களால் முன்னேற்றம் அடைந்தது. தென்மேற்கிலுள்ள டோனாவூர் இன்னொரு கனிதரும் ஊர். டென்ட், வின்க்லர்; ஷாப்டர், அயராது உழைத்து வால்க்கர் ஆகியோரின் முயற்சியால் கனிதரும் ஊரானது. சென்னை கவர்னர் நேப்பியர்பிரபு, 1868-இல் திருநெல்வேலிக்கு வருகைதந்தபோது, சுரண்டையிலும், டோனாவூரிலும் தமிழ் ஆராதனையில் பங்குபெற்றார்; இந்திய மண்ணில் திருச்சபை வேரூன்றியிருக்கும் விதத்தைக்கண்டு அவர் வியந்தார். டோனாவூரில் காணிக்கைப்பையை அவரே பார்வையிட்டு ஏழைக் கிறிஸ்தவர்களின் தாராளமனப்பான்மையைக்கண்டு வியப்படைந்

நார் என்று சொல்லப்படுகிறது. தாமஸ் கெஜூற்றன் ராக்லந்து வருகையினால் நெடுங்காலம் கவனிக்கப்படாமலிருந்த வடதிருநெல்வேலி சிறப்புக்கவனம்பெற்றது. கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தின் கணிதத்தில் சிறப்புத்தேர்ச்சி (Senior Wrangler in Mathematical Tripos) *பெற்ற அவர் 1845 இல் திருநெல்வேலி வந்து, அடுத்த ஏழாண்டுகள் தமிழ்மொழியைக் கற்று C M. S. கமிற்றியின் செயலராஜுர் பணித்தள ஊழியத்துக்காக மீண்டும் அவருக்கு விடுதலை கிடைத்தபோது மிஷன் இயக்கம் அனல் குன்றி விரைவாக ஒரு சபையாக மாறிக்கொண்டிருக்கிறதை அவர் உணர்ந்தார். தென் திருநெல்வேலி வடபகுதிக்கு சுவிசேஷம் அறிவிக்க வேண்டுமென துரிதப்படுத்தினர் 28 – 2—1854-இல் அவர் (இப்போது விருதுநகர் என்னும்) விருதுப்பட்டியை அடைந்து விரைவில் சிவகாசிகுச் சென்றூர் ஊருக்கு வெளியே தமது கூடாரத்தை அமைத்து மிகக் கொடிய பகையையும் உபத்திரவத்தையும் சந்தித்து, நிலையான ஒழுங்கான பணியைச் செய்தார்; 1858-இல் அவரது அகால மரணத்துக்கு முன் ஏராளமான கிறிஸ்தவர்களைப் பெற்றூர்; அவர்கள் அருகிலுள்ள நாட்சியாபுரம் என்னும் ஊரில் குடியேற்றுவிக்கப் பட்டனர்; 'இரகசியக் கிறிஸ்தவர்கள்' பலரையும் பெற்றூர். இரகசியக் கிறிஸ்தவர்களுக்கு எப்போதும் பெயர் பெற்ற இடமாக சிவகாசி விளங்குகிறது.

மிஷன் ஊழியத்தின் எல்லாக் கிளைகளும் குவிந்து கிடக்கும் பழமுள்ள C. M S தலைமையிடமாக பாளையங்கோட்டை காலமெல்லாம் தீவிரமாக விருத்தி செய்யப்பட்டது. அங்கு தங்கியிருந்த மிஷனரிகள் எண்ணிக்கை படிப்படியாக உயர்ந்தது C M. S. வரலாற்று ஆசிரியர் ஈஜின் ஷடாக் 1892-இல் பாளையங்கோட்டைக்குவந்தார்; அவர் எழுதினர் " தங்கியிருந்து பணிசெய்யும் மிஷனரிகள் எண்ணிக்கையில், பாளையங்கோட்டை உலகிலேயே மிகப் பெரிய C. M. S. மையம் என நான் கருதுகிறேன்."* 35 பேர்கள் அடங்கிய பட்டியலை அவர் கொடுக்கிறூர்!

ஆயினும் கல்வி தரும் நிறுவனமாகவே சமூகத்தில் மிகுந்த செல்வாக்கை C. M. S. பெற்றிருந்தது; பாளையங்கோட்டையிலும் திருநெல்வேலியிலும் அதின் வழிகாட்டி நிறுவனங்கள் இருந்தன. 1862 வரை குருக்ஷாங் நடத்திய ஆங்கிலேய - பிராந்தியப்பள்ளி வளர்ந்து வந்தது. அவ்வாண்டு உயர்சாதி இந்து மாணவன் ஒருவன் ஞானஸ்நானம் பெற்றதினல் வருகை 73-ஆகக் குறைந்தது இது

* The Madras Dioceson Record July 1893

திருநெல்வேலி டவுண் இந்துக்கள் ஓர் எதிர்ப்புப்பள்ளியைத் தொடங்குமபடி தூண்டியது இதற்காக நான்கு நாட்களில் அவர்கள் ரூபாய் 20,000 சேகரித்தனர். இது பின்னர் இந்துக் கல்லூரியாக வளர்ந்தது, இதற்குப்பதில் தரும் வகையில் C. M S. மிஷனரிகள், குருக்ஷேத்ர பள்ளி மாதிரியின்படி திருநெல்வேலி டவுணில் இன்னொரு பள்ளியைத் தொடங்கினர். H J ஷாப்டரைக்கொண்ட கல்லூரி 1880 இல் விரைவாகத் தொடங்கியது அக்கல்லூரி நன்றாக வளர்ந்தது; விரைவில் மாணவர் எண்ணிக்கை இந்துக் கல்லூரியின் எண்ணிக்கையைவிட அதிகமானது — இதனால் 1896—1898–இல் பெருஞ்சாலையின் மேலுள்ள செழிப்பான நெல் வயல்களின் நடுவில் ஓர் இலட்சிய இடத்தில் ஒரு புதிய கட்டிடம் அமைக்கப்பட வேண்டியதாயிற்று. 1867-க்குள்ளாக பாளையங் கோட்டையிலுள்ள உயர்நிலைப்பள்ளி மிக நன்றாக வளர்ந்து தன் முந்திய எண்ணிக்கையைப் பெற்றுக் கொண்டது: 1894 இல் அதின் பொன்விழா கொண்டாடப்படுகையில் இந்து, இஸ்லாமியப் பிரமுகர்கள் தங்களுக்கு இதைப் போன்ற இன்னொரு பள்ளி வேண்டு மெனக் கேட்டனர் அதனால் மேரி ஆர்டன் பள்ளி திறக்கப்பட்டது. சென்னையில் C M S. செயலராயிருந்த திரு ஆர்டன் என்பாரின் மகள் அப்போது மரணம் அடைந்திருந்தாள். அவளுடைய பெயரால் அப்பள்ளி அமைக்கப்பட்டது.

பெண்கள் கல்வியைப்பற்றி யாரும் சிறிதேனும் அக்கறை காட்டாத காலத்தில் C M. S இன் கவனத்துக்கு அது வந்தது. 1858-இல் சாராடக்கர் பயிற்சிப் பள்ளி தொடங்கியது. சென்னை மாநிலம் முழுமைக்கும் இலங்கை, மவுரிசியஸுக்கும் கூட தேவையான ஆசிரியைகளை அது உருவாக்கியது. செல்வி சாராடக்கர் பெயரால் மாவட்டம் முழுவதும் தோன்றிய நிறுவனங்களின் மையமாக அது இருந்தது. சென்னை C. M S செயலர் அருள்திரு ஜான்டக்கர் ஐயரின் நோயுற்ற சகோதரியே செல்வி சாராடக்கர் அவர்கள் நினைவாக இங்கிலாந்தில் சேகரிக்கப்பட்ட நிதியைக் கொண்டு இந் நிறுவனங்கள் நிறுவப்பட்டன. பெயரேட்டில் 5 பெண்களை மட்டும் கொண்டு 1890 இல் சாராடக்கர் உயர்நிலைப்பள்ளி தொடங்கியது. சென்னை மாநிலத்தில் பெண்களுக்கு முதற் கல்லூரியாக சாராடக்கர் கல்லூரி இன்டர்மீடியம் வகுப்பில் நான்கு பெண்களுடன் 1896-இல் தொடங்கப்பட்டது.

உயர்சாதி இந்துப் பெண்களைக் கவர்ந்து கொள்ளும் படியாக, இங்கிலாந்திலுள்ள இரு அஸ்போர்ன் சகோதரிகளின் தயாள நன்

கோடையைக் கொண்டு 1878-இல் அருள்திரு A. H லாஷ்றுபரால் அப்போர்ன் நினைவுப் பள்ளி தொடங்கப்பட்டது. அப்போதுள்ள மாவட்ட ஆட்சித்தலைவர் திரு R. K. பக்கின் அர்த்துபோன கோட்டையின் அருகே நிலம் வாங்கக் கருவியாயிருந்தார். 2–3–1878-இல் அவரே பள்ளிக்கு அஸ்திவாரமிட்டார். நூறு பெண் குழந்தைகளுடன் 4–11–1878-இல் பள்ளி வேலைத் தொடங்கியது. மாவட்ட முழுவதும் இதே விதமான பள்ளிகள் பல விரைவில் தொடங்கப் பட்டன. அவைகளில் கல்வி பெற வந்த உயர்சாதிப் பெண்பிள்ளைகள்; வீட்டுக்குச் சென்றவுடன் நன்றாகத் தங்களைக்கழுவி சுத்திகரித்து துணிகளை மாற்றிக்கொள்ளுவார். இவ்வித மாசுகிறித்தவ ஆசிரியைகளுடன் தொடர்புகொண்டதினால் உண்டான தீட்டை நீக்கிக் கொள்வர். என்று சொல்லப்படுகிறது

வழக்கமான இப்பள்ளிகளுக்கு மேலாக, பாளையங்கோட்டையில் இரு மிக ஒப்பற்ற நிறுவனங்களையும் C. M. S. தொடங்கியது. 1) பாளையங்கோட்டை 'பார்வையற்றோர் பள்ளி விசித்திரமாகத் தொடங்கியது பாளையங்கோட்டை சாராடக்கர் நிறுவனங்களின் நிர்வாகியாக செல்வி ஆஸ்க்வித் என்னும் ஒரு C. M. S. மிஷனெரி அம்மையார் இருந்தார். 1888-இல் ஒரு நாள் பார்வையற்ற ஒரு பையன் பிச்சை கேட்க வளாகத்திற்குள்ளே வந்தான் ஒரு பள்ளியினுள்ளே தான் வந்திருப்பதை அவன் கண்டபோது, தர்மம் கேட்பதற்குப்பதிலாக கல்வி வேண்டுமெனக் கேட்டான். அவனது தேவையைச் சிந்தித்து செல்வி ஆஸ்க்வித் பார்வையற்ற பிள்ளைகளுக்கான ஒரு பள்ளியைப்பற்றிக்கனாக் கண்டார். பார்வையற்றோருக்குக் கற்பிப்பதெப்படியெனக் கற்றுக்கொள்ள அவர் தாய்நாடு சென்றார். 1890–இல் பார்வையற்ற குழந்தைகளுக்கான முதல் வகுப்பு திறக்கப்பட்டது.

1908-இல் 'தரிசனமனை' என்னும் அதின் இன்றைய இடத்துக்கு அப்பள்ளி சென்றது. இந்தியாவில் அதைப்போன்ற பள்ளிகளில் மிகப்பெரிய பள்ளியாகச் சீராக வளர்ந்துள்ளது

2) 1887-இல் சாராடக்கர் வளாகத்திற்குள்ளே தவறுதலாக வந்து சேர்ந்த இரு காதுகேளாத பெண் பிள்ளைகளினால் தூண்டப்பட்டு பாளையங்கோட்டை பிளாரன்ஸ் சுவேன்சன் காதுகேளாதார் பள்ளி தோன்றியது சீக்கிரத்தில் செல்வி சுவேன்சன் காது கேளாத பிள்ளைகளுக்கு ஒரு வகுப்புத்தொடங்கினார். தென் இந்தியாவில் இதைப்போன்ற நிறுவனங்களில் இது முதலாவதானது. இதே செல்வி

சுவேன்சன் அம்மையார்தான் பின்னர் சென்னை அரசு காது கேளா தோர் பள்ளி ஒன்று தொடங்கவும் திருவல்லாவில் இன்னொன்று தொடங்கவும் உதவினார் பாளையங்கோட்டையின் தென்கோடியில் 14 ஏக்கர் நிலத்தில் அமைந்துள்ள இன்றைய கட்டிடங்களுக்கு அப் பள்ளி விரைவில் வந்தது. நீர்ச் சிகிச்சை மருத்துவ நிலையத்துக்காக டாக்டர் தனக்கோடி ராஜு இக்கட்டிடங்களைக் கட்டியிருந்தார். அவருடைய குமாரன் திரு தனக்கோடி ராஜுவிடமிருந்து அவை வாங்கப் பட்டன.

1854-இல் பாளையங்கோட்டையில் ஒரு C. M. S. தொழிற் பள்ளியும் தொடங்கப்பட்டது. போசிங்கர் என்னும் ஒரு ஜெர்மானிய தொழில் நுட்பக் காரரின் பொறுப்பில் அது நடைபெற்றது ஆனால் செலவு தடையாயிருந்தது குறுகிய சோதனைக் காலத்துக்குப்பின் முயற்சி கைவிடப்பட்டது.

தனது கல்வி முயற்சிக்கு உதவியாக பாளையங்கோட்டையில் C. M S. தனது சொந்த அச்சகத்தை நிறுவியது பின்னர் அது மூடப்பட்டது. 1942-ல் அது மீண்டும் உயிர்பெற்று திருநெல்வேலி டயோசீஷன் அச்சகம் எனத் தோன்றியது. அதே நோக்கத்துடன் ஒரு C. M S புத்தக நிலையமும் (1882) நிறுவப்பட்டது. அது இன்று வரை நிலைத்திருந்து நாளடைவில் வளர்ந்திருக்கிறது.

பின்னர் மிஷினெரிகள் தங்கள் சிறப்பு ஈவுகளை திருநெல்வேலி திருச்சபையின் சேவைக்கு வழங்கியுள்ளனர் அருள் திரு ஸ்கார்ட் பிரைஸ் 1892-இல் திருநெல்வேலி சிறுவர் ஊழியத்தை ஏற்படுத்தினார் அது ஒரு பெரும் இயக்கமாகச் சீராக வளர்ந்துள்ளது. உண்மைகள் உள்ளத்தில் பதியக்கூடிய பிராயத்தில், ஆயிரக்கணக்கான பிள்ளைகள் வேதத்தை ஒழுங்காகக் கற்று சிறந்த கிறித்தவ மக்களாகும்படி உருவாக்கியது இந்த இயக்கம்.

இந்திய மனதுக்கு ஏற்றதாகயிருக்கும் அறுப்பின் பண்டிகைகளை வாக்கர் ஐயர் ஏற்படுத்தினார் ஒரு வகையில் இவை இந்து விழாக்களுக்கு ஒத்திருந்தன. முதல் அறுப்பின் பண்டிகை 1891-இல் சாட்சியாபுரத்தில் நடைபெற்றது. பலதரப்பட்ட கவர்ச்சியுள்ள நிகழ்ச்சிநிரலுடன் அது நான்கு நாட்கள் நீடித்தது. வாக்கரின் திட்டப்படி, அறுப்பின் பண்டிகை நிதி திரட்டுவதற்கு மட்டுமல்ல 'இளைஞரையும் முதியோரையும் சிலகாலம் நல்ல முறையில் மகிழ்ந்திருக்கும் படி

கூடிச் சேர்க்கும் நோக்கத்துடனேயே அது ஏற்பட்டுள்ளது. இக் காலத்தில் அவர்களுடைய ஆவிக்குரிய வாழ்க்கை, திருச்சபையி லும் மிஷனெரி முயற்சியிலும் அவர்களது ஆர்வம். துதி தோத்திர சிந்தை ஆகியவை எழுப்பப்படவும் புதுப்பிக்கப்படவும் வேண்டும்" பல ஊர்கள் இப்பண்டிகையைக் கொண்டாடத் தொடங்கின – நல் லூர் 1892 இல், பாளையங்கோட்டை 1895 இல் பண்ணை விளையும் சுரண்டையும் 1896-இல்

திருநெல்வேலி திருச்சபையின் முதல் நூற்றுண்டு விழாவைக் கொண்டாட 1880 ஜனுவரியில் C. M. S., S. P. G. சங்கங்கள் ஒன்றுசேர்ந்து கொண்டன. பேராயர் ஜெல் சென்னையிலிருந்து வந்து பாளையங்கோட்டையில் ஒழுங்கு செய்யப்பட்ட பல நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றார்; குரு அபிஷேக ஆராதனையும் பொதுக்கூட்டம் ஒன் றும் அப்போது நடைபெற்றன. பொதுக்கூட்டத்தில் பேராயர் கால்டு வெல் தமது பிரசித்திபெற்ற 'நூற்றுண்டு இதழை சமர்ப்பித்தார். அதில் முதல் நூற்றுண்டுகளில் திருநெல்வேலி சபையின் வரலாற்றை அவர் வரிசையாகத் தந்தார்.

(மெஞ்ஞானபுரம் தாமஸ் பண்ணைவிளை டக்கர், டோனவூர் வாக்கர் திருநெல்வேலி ஷாப்டர்போன்று) நிரந்தரமாக மிஷினரிகளின் பெயர்கள் தாங்கள் பணிசெய்த ஊர்களுடன் இணைக்கப்பட்டுள்ளன. இவ்விதமாக வெவ்வேறு மிஷினரிகள் தாங்கள் ஊர்களுக்கு முன் னேற்றத்தைக் கொண்டு வந்தனர். பாளையங்கோட்டையின் தலைமையிடத்து ஊழியத்துக்குத் தலைமை தாங்கி அரை நூற்றுண்டுக்கு மேலாக மற்றெல்லாரையும் விட மாமனிதராக விளங்கியவர்; எட்வாட் சர்ர்ஜன்ற். வாட்டர்லூ போரில் ஈடுபட்ட ஒரு போர் வீரனின் மகனை அவர், அப்பட்டாளம் இங்கு அனுப்பப் பட்டபோது தம்பெற்றோருடன் இந்தியாவுக்கு வந்தார். பெற்றோர் தாய் நாடு திருப்பிய போது, சென்னை இராணுவக் குரு அருள் திரு J. சாயரின் பொறுப்பில் எட்வர்ட் விடப்பட்டார். அங்குள்ள C M. S செமினரியில் பயிற்சி பெற்று, 7–7—1835-இல் 19 வயதுடைய சபை உபதேசியாராகத் திருநெல்வேலிக்கு வந்தார் மிஷனில் பிளவு ஏற்பட்டிருந்த நெருக்கடி காலத்தில் பெற்றிற் ஐயருக்கு உதவி செய்தார். தமது சொந்த செலவில் 1839-இல் இங்கி லாந்துக்குக் கப்பலேறினார். இஸ்லிங்டன் என்னும் லண்டனிலுள்ள C M. S. பயிற்சிக் கல்லூரியில் பயிற்சி பெற்று, 1843-இல் திரும்பினார் அடுத்த 46 ஆண்டுகள் இம்மாவட்டத்தில் நிரந்தர

மாகத் தங்கி விட்டனர். தொடக்கத்தில் சுவிசேசபுரத்தில் ஊழியம் செய்தார். பின்னர் பாளையங்கோட்டைக் கொண்டு வரப்பட்டார். இங்கு நாம் நினைக்கக்கூடிய ஒவ்வொரு பொறுப்பையும் மாறி மாறி வகித்துள்ளார். 1853 இலும் 1876-இலும் இரு முறை பரிசுத்த திரித்துவ ஆலயத்தில் செய்யப்பட்ட விஸ்தரிப்புகளுக்கு அவர் பொறுப்பாளர். இங்கிலாந்திலுள்ள நண்பர்களிடமிருந்து பெற்றுக் கொண்ட நிதியினால் C. M. S. சங்கத்துக்குப் பெறுமதியுள்ள பல சொத்துக்களை வாங்கினார். அவைகளில் மிகச் சிறந்தது 1869-இல் ஆதாளிபூத்து என்னும் ஊரை வாங்கியதாகும். (இது பாளையங் கோட்டையின் வெளிபாகத்திலுள்ளது சில கிறிஸ்தவக் குடும்பங்களைக் குடியேற்றுவிக்கும்படியாக செல்வி டக்கர் அம்மையார் வழங்கிய நிதியைக்கொண்டு வாங்கி டக்கரம்மாள் புரம் எனப் பேரிடப்பட்டது திருமதி மேரி சார்ஜன்ற் அம்மையார் தம் கணவரின் பலத்த ஊழியத்தில் திறமையாக அவருக்கு உதவி செய்தார். பெண்கள் போர்டிங் பள்ளியின்* முழுப்பொறுப்பையும் அம்மையார் ஏற்றுக் கொண்டார். தாய்மாருக்கு வெள்ளிக்கிழமைகளிலும் இளம் பெண்களுக்கு ஞாயிற்றுக்கிழமைகளிலும் ஒழுங்காகக் கூட்டங்கள் நடத்தினர் 'இஸ்ரவேலில் அவர் உண்மையான தாய்.'

தூரமான சென்னையிலிருந்து ஒரு பேராயர் எப்போதாவது வருகை செய்வதற்குப் பதிலாகத் திருநெல்வேலி தனக்கென ஒரு பேராயரைப் பெற்றிருக்கச் சரியான நேரம் வந்துவிட்டதென அதிக மாக உணரப்பட்டது தனது நேரத்தில் மிகுதியான நேரத்தை திருநெல்வேலி எடுத்துக்கொள்ளுகிறதென பேராயர் ஜெல்லும் உணர்ந்தார். (பிரிட்டிஸ் பாராளுமன்றத்தின் தீர்மானத்தின் படி ஏற்படுத்தப்பட்டிருந்த) சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய மூன்று திருமண்டலங்களுக்குக் கூடுதலாகப் புதியதொரு திருமண்டலத்தை ஏற்படுத்துவதில் சட்டப்பிரகாரமான கஷ்டங்கள் இருந்தன. எந்தச் சட்டத்திருத்தமும் மிக வேதனை தரக்கூடிய செயல் முறைக்கும் பின் பாராளுமன்றம்தான் செய்யக்கூடும். எப்படியும், 1874-இல் குடியேற்ற நாட்டுத் திருப்பணியாளர் சட்டம் நிறைவேற்றப்பட்டது அதின்படி, இந்தியாவிலுள்ள பேராயர்கள் தாங்களாகவே தங்களுக்கு உதவிப்பேராயர்களை நியமித்துக் கொள்ளலாம். அவ்வாறே, பேராயர் ஜெல் திருநெல்வேலிக்கு இரு உதவிப் பேராயர்களை நியமித்தார். C.M.S. சங்கத்திலிருந்து சார்ஜன்ற், S P.G சங்கத்திலிருந்து கால்டு வெல், கல்கத்தா பரி பவுலின் அத்தியட்சாலயத்தில் 11-3-1877ஆம்

*இப்போது மேரி ஜார்ஜன்ற் மேல்நிலைப்பள்ளி என அறியப்படுகிறது.



அருள்பெருந்திரு
எட்வர்ட் சார்ஜெண்ட் (C. M. S.)
1861—1889

நாளில் இந்தியாவின் மேற்றிராணியார் பேராயர் ஜான்சன் அவர்களால் அவர்கள் ஒன்றாக அத்தியட்சர் அபிஷேகம் பெற்ற தோம் நினைவை விட்டகலாத ஒன்றாகும். அபிஷேக அருளுரையில் பேராயர் ஜெல்சார்ஜன்ற், கால்டுவெல் "பேராயர்களை இரட்டை நட்சத்திரங்கள்" எனக் குறிப்பிட்டார். "இரட்டை நட்சத்திரங்கள் பிரிந்திருக்கின்றன .. ஆயினும் முற்றிலும் ஒன்றை விட்டு ஒன்று பிரிந்திராது, ஆனால் ஒன்றை ஒன்று வசீகரிக்கும். ஒவ்வொன்றும் தங்கள் கோளங்களை சமநிலையிலும் ஒழுங்கிலும் வைத்துக் கொள்ளுகின்றன" சார்ஜன்ற், கால்டுவெல் ஆகிய இருவரின் பணிகளும் மிக நெருக்கமாக இணைந்திருந்தன. இருவரும் ஏறத்தாழ ஒரே சமயத்தில் இந்தியாவுக்கு வந்தனர். ஒரே ஆண்டில் இருவரும் குரு அபிஷேகம் பெற்றனர். முதன்மைப் பேராயர் டெயிட் (Archbishop Tait) அவர்களால் ஒரே சமயத்தில் அவர்கள் இருவரும் இறையியல் பேரறிவர் (Doctorate in Divinity) பட்டம் வழங்கப் பெற்றனர். பேராயர் சார்ஜன்ற் 1889–இலும் பேராயர் கால்டுவெல் 1891–இலும் மரிக்கும் வரை அவர்கள் இருவருக்கும் மிக அன்பான உறவு இருந்தது.

பேராயராக அபிஷேகம் பெற்ற பின் திருநெல்வேலிக்கு வந்த போது, கிறிஸ்தவர்கள், இந்துக்கள் எல்லோராலும் பேராயர்; சார்ஜன்றுக்கு ஓர் அரச வரவேற்பு அளிக்கப்பட்டு, ஒரு வெற்றிப் பவனியில் அழைத்துச் செல்லப்பட்டார். இது வரை திருநெல்வேலி C. M. S. ஊழியத்தின் உண்மையான தலைவராயிருந்த பின், இது முதல் அவ்வேலையின் உரிமை பெற்றத்தலைவரானார். 13 ஆண்டுகள் தமது ஞானமுள்ள ஆலோசனையினாலும், சாந்தமாக ஆனால் உறுதியாக வழி காட்டியதாலும் அவர் திருநெல்வேலி திருச்சபையை நடத்தினார்.

பேராயர் சார்ஜன்றும் சார்ஜன்ற் அம்மையாரும் இந்து சமூகத்துக்கு மிக அருமையானவர்களாக்கிக் கொண்டனர். பேராயர் சார்ஜன்ற் தமது அருளுரைக்காக அருளுரைப் பீடத்தில் ஏறும்போது ஆர்வமுள்ள இந்துக்கள் பலர் பரிசுத்த திரித்துவ ஆலய வளாகத்துக்குள் நுழைந்து, அவரது அருளுரையைக் கவனத்துடன் கேட்பர் என்று சொல்லப்படுகிறது. ஆர்வமுடன் இவ்வாறு தேடிவருவோருக்காகப் பின் பக்கத்தில் செங்கலால் கட்டப்பட்ட மூன்று பெஞ்சுகளுடன் கூடிய அடைப்பு ஒன்று அமைக்கப்பட்டது. ஜனவரி 1885 இல் மூன்று நாட்களாகப் பேராயர் சார்ஜன்றின் திருப்பணியின் பொன்

விழா கொண்டாடப்பட்டபோது, திருநெல்வேலி, பாளையங்கோட்டை இந்துக்கள் அருள்திரு சார்ஜன்ற்றுக்குத் தங்கள் நன்றியைத் தெரிவிப்ப தற்கு இருநாட்கள் ஒதுக்கப்பட வேண்டியதாயிற்று அவ்வளவாகப் பெரும் நண்பராகவும் கொடையாளராகவும் அவர்கள் அவரை மதித் திருந்தனர்

இதற்குள்ளாக மிஷன் ஊழியம் மிகவும் பெரிதாகி அதின் நிர் வாகம் சிக்கல் நிறைந்ததாயிற்று. பேராயர் சார்ஜன்ற்றுக்கும் வயதாகிக் கொண்டிருந்தது, அலுவலக வேலையில் அவர் பலன் மிகுதியாகச் செலவானது. பேராயர் சார்ஜன்ற்றுக்கு உதவி செய்யவும் மிஷனெரி அமைப்பில் சீர்திருத்தங்களைச் சொல்லவும் அருள்திரு ஜான் பார்ட்டன் C. M. S.-ஆல் அனுப்பப்பட்டார். அவரது அறிக்கையில் பார்ட்டன் குறிப்பிட்டார்; " ஒரு பேராயர் மீது இவ்வளவு அலுவலக வேலைப்பளுவைச் சுமத்துவதை நான் பலமாக ஆட்சேபிக்கிறேன். இத்தகைய அலுவல்களிலிருந்து எல்லாரைக் காட்டிலும் அவர் விடுதலை பெற்றவராயிருக்க வேண்டும்' முன்பிருந்ததைக் காட்டிலும் இன்று இச் சொற்கள் மிக்க உண்மையானவைகளே! செய்யப் படும் வேலையை ஒழுங்குபடுத்தவும் கட்டுப்படுத்தவும் மத்திய அமைப்பு இல்லையென பார்ட்டன் கண்டார். பேராயர் சார்ஜன்ற்தான் ஒன்று படுத்தும் அந்த ஆற்றலாயிருந்தார். அவர் அதிகமாகப் பிரயாசப் பட்டு உழைத்ததினால் அவரது உடல் நலம் குன்றியது. 1889 இல் மரணம் அவருக்கு விடுதலை தந்தது. பார்ட்டனுடைய ஆலோசனை யின் பேரில் நான்கு கவுன்சில்கள் உருவாக்கப்பட்டன வடக்கு தெற்குக் கவுன்சில்கள் வாக்கர் தலைமையின் கீழும் மத்திய, மேற்குக் கவுன்சில்கள் கெம்பர் தலைமையின் கீழும் வைக்கப்பட்டன. ஆயினும் (அத்தியட்சாதீன கவுன்சிலுக்கு முன்னோடியான) ஒரு மத்திய திருச்சபை மன்றத்தின் கீழ் 1896–இல் தான் அவைகள் ஒன் றுக இணைக்கப்பட்டன. திருநெல்வேலியின் முதற் பேராயர் மார்லி அதன் தலைவரானார்.

## XXXXIII

### அத்தியாயம் IV

# இரண்டு முக்கிய நீரோடைகள்

## எஸ். பி. ஜி. 1829—1896

அந்நிய நாடுகளில் சுவிசேஷத்தைப் பரப்புவதற்கான சங்கம் (எஸ். பி. ஜி.) 1701 ம் வருஷம் ஜூன் மாதம் 27ம் தேதியில் லண்டனில் பிறபிக்கப்பட்ட அரச கட்டளையால் நிறுவப்பட்டது. 1820 ம் வருஷ வாக்கில் அச்சங்கம் தன்னுடைய வேலையை இந்தியாவிற்கு எட்டச் செய்தது. அங்கே அதற்கு உதவியாக ஊழியர் பயிற்சிக்காக கல்கத்தாவில் அந்நிய. சக் கல்லூரியை நிறுவியது மட்டுமல்லாது வேலைக்கனுகூலமான கேந்திரஸ்தானங்களையும் தெரிந்தெடுத்தது. அதேசமயத்தில் கிறிஸ்தவ அறிவைப் பரப்புவதற்கான பணியைச் (எஸ். பி. சி. கே.) செய்வதில் ஈடுபட்டுள்ள சங்கம். தான் அதுவரை விருத்தி செய்துள்ள ஸ்தலங்களுக்குத் தன் கவனத்தையும் கண் காணிப்பையும் இனிமேலும் கொடுக்க இயலா நிலையை தான் அடைந்துள்ளதை உணர்ந்தது. அதன் விளைவாக 7-6-1825ல் நடந்த தனது பொதுக்கூட்டத்தில் தென் இந்தியாவில் செய்து வந்த சுவிசேஷ ஊழியங்களை, சுவிசேஷ பிரபல்ய சங்கமான (எஸ் பி. ஜி) ஸ்தாபனத்திற்கு மாற்றிக் கொடுத்து விடும்படி தீர்மானம் செய்தது. கீழ் நாடுகளை சுவிசேஷத்தின் ஆதிக்கத்திற்குள் கொண்டு வருவதற்கான பணியில் ஈடுபட்ட இயக்கங்களில் எஸ். பி ஜி. தான் மிகப்பெரிய ஸ்தாபனமாக விளங்கியது. இதன் விளைவாகத் தஞ்சாவூர் மிஷன் பொறுப்பிலுள்ள சபைகளில் ஒன்றான திருநெல்வேலி சபையும் அச்சங்கத்திற்கு மாற்றிக் கொடுக்கப்பட்டது.

1825ல் கொள்கை அளவில் இந்த மாற்றம் ஏற்றுக் கொள்ளப்பட்டபோதிலும் செயல் முறைக்கு இதைக் கொண்டு வருவதில் தாமதம் ஏற்பட்டது. எஸ். பி ஜி சங்கத்தின் சென்னைக் கமிட்டி 1826 ம் வருஷம் மே மாதம் 15ம் தேதியில் நிறுவப்பட்டது (ஹீபர் அத்தியட்சர் மரணமடைந்த (3-4-1826 ஒரு மாதம் முடியுமுன்னரே) எஸ். பி ஜி. யின் காரியதரிசியாயிருந்த கனம் டபிள்யு. எம். ராய் திருநெல்வேலி மிஷன் சம்பந்தமாக கனம் ஜே. ஸி. கோலாப் ஐயரவர்களையும் கனம் ரொபிரி ஐயரவர்களும் கலந்து ஆலோசித்தார் திருநெல்வேலிக்கென்று

ஒரு தனி மிஷனெரி நியமிக்கப்படும் வரைக்கும் அதைத் தஞ்சாவூர் மிஷனின் கவனிப்பிலேயே விட்டு வைப்பது தான் உசிதம் என ஆலோசனை கூறினர். அதன்படி செய்த பொழுது தஞ்சாவூர் மிஷன் அதை சி. எம். எஸ். மிஷனெரிகளான ரேனியஸ், ஷிமிட் என்பவர்களிடம் ஒப்படைத்தனர்.

ரேனியஸும், சமித்தும் தங்கள் மேற்பார்வையில் உள்ள 20 உபதேசிமார்களின் கண்காணிப்பில் இருந்த 69 கிராமங்களில் உள்ள 3626 சபை அங்கத்தினர்களையும், 15 பள்ளிக் கூடங்களில் உள்ள 262 மாணவர்களையும் பற்றிய ஓர் அறிக்கையை 1829 பெப்ரவரி 7-இல் சென்னை ஜில்லா சுவிசேஷ பிரபல்ய கமிட்டிக்கு சமர்ப்பித்தனர். இவ்வறிக்கையுடன் நாசரேத்தில் ஒரு ஆலயம் கட்ட வேண்டும் என்று மூன்று சபை பிரதி நிதிகளால் கையெழுத்திடப்பட்ட ஒரு விண்ணப்பமும் சேர்த்து அனுப்பப்பட்டது குறிப்பிடத்தக்கதாய் இருந்தது. 1829 ஜூலை 23ல் நடைபெற்ற நிர்வாகக் குழு கூட்டத்தில் இந்த விண்ணப்பம் பரிசீலனை செய்யப்பட்டு அதன் விளைவாக கடலூரிலுள்ள கனம் டேவிட் ரோஸன் ஐயரவர்கள் திருநெல்வேலிக்கு சென்று, திருநெல்வேலி மிஷன் பொறுப்பை ஏற்கத் தீர்மானிக்கப்பட்டது. கனம் டேவிட் ரோஸன் கிறிஸ்தவ அறிவைப் பிரபலப்படுத்தும் டேனிஸ் மிஷனரியாக (SPCK) ஏற்கனவே 1819ல் வந்திருந்து திருச்சிராப்பள்ளியிலும், அதன்பின் கடலூரிலும் 1824 வரை பணியாற்றியவர். அவர் 1829 நவம்பர் 4-இல் கப்பல் மூலம் தூத்துக்குடி வந்தடைந்து திரு. ரோஸ்மாலி ஹூக் என்ற போலீஸ் சூப்பரின் டெண்டுடன் இரண்டு நாட்கள் தங்கி பின் பல்லக்கு ஏறி 1829 நவம்பர் 5-இல் பாளையங்கோட்டை வந்து சேர்ந்தார். கனம் ரேனியஸ் ஐயரவர்கள் அவரை வரவேற்று கோட்டையிலுள்ள ஆலயம், பள்ளிக்கூடம் முதலியவற்றை அவருக்குக் காண்பித்தார்.

அச்சமயம் ஜில்லா கலெக்டராயிருந்த திரு. ட்ரூரி கனம் ரோசன் ஐயரவர்களுக்கென அமர்த்தியிருந்த வீட்டை விட்டு விட்டு அவர் ஆலயத்தின் பக்கத்திலுள்ள மற்றொரு வீட்டைத் தெரிந்து கொண்டார். அடுத்த இரண்டு மாதங்களாக ரோசன் ஐயரவர்கள் ஊர்களைச் சுற்றிப் பார்ப்பதில் ஈடுபட்டார். கிறிஸ்மஸ்தினத்தை நாசரேத்தில் செலவிட்ட அவர் 31—12—1829ல் அங்கே ஆலயம் கட்டுவதற்கான அடிக்கல் நாட்டினார். சுவிசேஷ பிரபல்ய சங்கம் வ்வாலயக் கட்டுமானதிற்குத் தாராளமான ஒத்தாசை செய்ய

வாக்களித்திருந்தது. புதுவருட ஆராதனையைத் தூத்துக்குடியிலுள்ள ஆலயத்தில் நடத்தக் கூடிய நேரத்தில் போய்ச் சேர முடியாமற் போனாலும் அங்குள்ள டச்சு கிறிஸ்தவ ஆலயத்தில் ஜனவரி 3 ம் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று பிரசங்கம் நிகழ்த்தினர். தொடர்ந்து தூத்துக்குடியில் குடியிருக்க விரும்பி அங்கு தனக்கென்று ஒரு சிறிய வீட்டை ஏற்பாடு செய்து கொண்டார்

சென்னை ஆர்ச்டீக்கன்ராபின்ஸன் அவர்கள் நாசரேத்துக்கு விஜயம் செய்து அங்குள்ள சபையாரைத் தற்காலிகமாக ஆராதனைக்கென்று ஏற்பாடு செய்யப்பட்டுள்ள இடத்தில் சந்தித்தார். தேக அசௌகரியம் ஏற்பட்டதன் விளைவாக அங்கிருந்து முதலூருக்குச் செல்லவிருந்த ஏற்பாடு கைவிடப்பட்டது. படுத்துக் கொள்வதற்கான வசதி இல்லாமையால் பல்லக்கிலேயே இருந்து கொண்டு அன்றிரவே பாளையங்கோட்டைக்குத் திரும்ப வேண்டியதாயிற்று;

எஸ். பி. ஜி சபையினருக்கும் சி.எம் எஸ். சபையினருக்கும் தர்தம் எல்லை சம்பந்தப்பட்டுள்ள தகராறுகளை ரேனியஸ் ஐயரவர்களும் ரோசன் ஐயரவர்களும் சுமுகமாகத்தீர்த்து வைத்தனர். இது சம்பந்தமாக கால்டுவெல் அத்தியட்சரவர்களின் கவனத்திற்கு திரு. கோலப் அவர்களின் மகன் கொண்டுவந்த சம்பவம் சுவை நிறைந்தது கனம் ரேனியஸ் ஐயரவர்கள் திருநெல்வேலி சபைகளைக் கண்காணித்து வந்தபொழுது அவர்களால் நியமிக்கப்பட்ட உபதேசிமார் சுதேச குருமாரால் ஏற்படுத்தப்பட்டுள்ள உபதேசிமார் போதித்து ஆயத்தப்படுத்த சபையினரைத் தங்களுடைய சபைகளுக்கு இழுத்துக் கொள்கின்றனர் என அவரிடம் பிராது செய்தனர். ஆனல் ரேனியஸ் ஐயர் அந்த வித நிகழ்ச்சிகளை நம்பத் தயாராயில்லை. அவருடைய விஜயத்தின்போது சுதேச குருமார் தங்களுடைய சபை என்று அவர்கள் பாத்தியதைக் கொண்டாடிய ஓர் சபையைப்பார்க்கும்படி அழைக்கப்பட்டார். அப்பொழுது அவர் அந்தச் சபையின் மக்களுக்குச்சில, ஆலோசனைகளை வழங்கியபின், அந்தக்காலத்து சி.எம் எஸ் மிஷனரிமார் செய்துவந்த வழக்கத்தின்படியே முடிவில் கர்த்தருடைய ஜெபம் சொல்லாதபடியான ஒரு ஜெபம் செய்து முடித்தார் அவர் அவ்வாறு ஜெபம் முடித்தபின் சபையார் எல்லாரும் மிக ஆர்வத்துடனும், ஊக்கத்துடனும் கர்த்தருடைய ஜெபத்தைச் சொல்லிமுடித்தனர். இச்சம்பவமானது அந்த சபை, சுதேச குருமாரால் உபதேசிக்கப்பட்ட சபை, என்றும் சி.எம் எஸ். மிஷனெரிமாரால் உருவாக்கப்பட்ட சபை அல்ல

வென்றும் அவருக்குத்தெளிவாய் எடுத்துக்காட்டியதால் சம்பந்தப் பட்ட உபதேசியாரைக் கண்டித்து அச்சபை எஸ். பி ஜி சபையின் எல்கைக்குட்பட்டதென்று தீர்மானிக்கப்பட்டது.

ரோசன் ஐயர் அவர்கள் ஒரு வருஷத்திற்குக் குறைவாகவே தங்க நேரிட்டது வருந்தத்தக்கதாகும். அன்னுர் 1830ம் ஆண்டு செப்டம்பர் 17ம் தேதி விடு முறையில் தரங்கம்பாடிக்குச் சென்ருர். அங்கிருந்து டேனிஷ் அரசின் சார்பில் நிக்கோபார் தீவுகளுக்கு ஒரு படைமுயற்சி யின் தலைவராகச் செல்ல கால வரையற்ற விடுமுறையில் செல்வதற்கு அனுமதி கோரினுர் இவ்வித விடுமுறை அளிக்கக் கூடாத நிலையில் சென்னை கமிட்டியார் அவர் திரும்பியவுடன் அவரைத் திரும்பவும் பணி யில் ஈடு படுத்தும் விஷயத்தைக் கவனிக்கிறோம் என்று கூறினர். அந்தப் படை முயற்சி படுதோல்வியடைந்தது. ரோசன்ஐயர் அவர்கள் தவிர அப்படையினர் அனைவரும் இறந்தனர். 1834ம் ஆண்டில் தரங் கம்பாடிக்குத் திரும்பி தான் இறந்து போனதாக துக்கம் கொண்டாடிக் கொண்டிருந்த தம் மனைவியிடம் வந்து சேர்ந்தார்

ரேனியஸ் ஐயர் பிரிந்து சென்ற பின்; எஸ் பி ஜி. சங்கத்தார் தஞ்சாவூர் மிஷனெரிமார்களை திருநெல்வேலி மிஷன் மேற்பார்வையை மேற்கொள்ளும் படி கேட்டுக் கொண்டனர். அச்சமயம் சுதேச குருவான அடைக்கலம் ஐயர் அவர்கள்தான் அவ்வட்டாரத்தின் முழுப் பொறுப்பில் இருந்தார்கள். 1830-ம் ஆண்டு நவம்பர் மாதம் 20-ம் தேதி அன்று நாசரேத்தில் கட்டப்பட்டுள்ள ஆலயத்தையும் அவரே தெய்வ வழிபாட்டுக்குத் திறந்துவைத்தார். 1854-ம் ஆண்டு எப்ரல்மாதத்தில் தஞ்சாவூர் எஸ். பி ஜி மிஷனரிமார்களில் ஒருவ ரான கனம் எ. சி. தாம்சன் ஐயர் அவர்கள் திருநெல்வேலிக்கு விஜயம் செய்ததாகத் தெரிகிறது. அச்சமயம் எஸ்.பி.ஜி சங்கத்தார் திருநெல்வேலியில் உள்ள தங்கள் சபைகளை சி. எம். எஸ். சங்கத்தாருக்குக் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாக மாயவரத்தி லுள்ள சி எம் எஸ் சபைகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற வெகு தீவிரமாக ஆலோசனையை அடைக்கலம் ஐயர் அவர்களே பிரப்பித்தார். ஆனுல், இது ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

வில்சன் அத்தியட்சர் அவர்கள் தகையிட்டின் பேரில் கனம் ரோசன் ஐயர் அவர்கள் எஸ் பி ஜி. சங்கத்தாரால் மீண்டும்

லேக்கு அமர்த்தப்பட்டு திருநெல்வேலிக்கு அனுப்பி வைக்கப் பட்டார். 1835ம் வருடம் மார்ச் மாதம் 31-ம் தேதியில் தூத்துக்குடி வந்து சேர்ந்த அவர் முதலூரில் தங்காமல் இருக்க தன்னால் கூடிய மட்டும் முயன்றார். தூத்துக்குடிக்கு அடுத்தபடியாக, அவர் தங்க விரும்பிய இடம் மணப்பாட்டின் அருகில் உள்ள ஒரு கடற்கரை கிராமம் ஆகும். ஆனால் சென்னை சங்கத்தார் இந்த ஆலோசனையை ஏற்றுக்கொள்ள கண்டிப்பாக மறுத்துவிட்டனர் ஆனால் முதலூரில் ஒரு வீடு கட்டப்படும் வரைக்கும் அவர் நாசரேத்தூரில் வசிக்க அனுமதி அளிக்கப்பட்டது

நான்கு வருடங்களுக்குப்பின் 1835-ம் வருஷம் ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் ரோசன் ஐயர் அவர்கள், தம்முடைய பழைய சபைகளில் பெரும்பான்மையானவற்றைச் சந்தித்தார். தாம் அங்கு இல்லாத காலங்களில் அச்சபைகளில் எல்லா அம்சங்களும் க்ஷீண தசை அடைந்திருந்ததை அவர் கண்டார் அவர் தமது ஆதீனத்தில் உள்ள சபைகளை நான்கு பகுதிகளாகப் (உக்கிரங்கோட்டை, நாசரேத், முதலூர், இடையன்குடி) பிரித்து சி. எம். எஸ். முறையில் ரேனியஸ் ஐயர் செய்தபடியே விசாரணை உபதேசியார்களை அவர்களுக்கென்று நியமித்தார் சென்னை சங்கத்தார் 1835-ம் வருஷம் அக்டோபர் 27-ம் தேதியில் நடந்த கூட்டத்தின் தீர்மானத்தின்படி வெப்பேரி குருவாக இருந்த கனம் J. L. இரியன் ஐயர் அவர்களை நாசரேத்துக்கு மாற்றினார்கள். ஆனால் சுகவீனத்தின் காரணமாக கனம் இரியன் ஐயர் அவர்கள் தரங்கபாடியில் சில காலம் ஓய்வெடுத்தபின் 1836-ம் வருஷம் ஜூலை மாதம் 17-ம் தேதியில் தான் தூத்துக்குடியை அடைந்து முதலூருக்கு மாற்றப்பட்டிருந்த கனம் ரோசன் ஐயர் அவர்களிடமிருந்து நாசரேத், உக்கிரங்கோட்டை சபைகளின் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்.

நாசரேத்தில் இரியன் ஐயர் அவர்களுக்கு 1836ம் ஆண்டு ஜூலை மாதம் 30ம் தேதியில் ஒரு சிறப்பான வரவேற்பு கொடுக்கப் பட்டது. அப்போதுதான் கட்டி முடிக்கப்பட்டு சுவர்கள் முற்றிலும் உலராத நிலையில் இருந்த கூரை வேயப்பட்ட பங்களாவில் குடி யேறியபடியால் கடுரமான குடல் வியாதியினால் அவர் தாக்கப்பட்டார் 1836ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 2ம் தேதியில் சாத்தான்குளம் சென்று ரோசன் ஐயர் அவர்களை அங்குள்ள சி. எம். எஸ். பங்களாவில் சந் தித்துவிட்டு, பின் நாசரேத் வந்த அவர், அவ்விடத்தில் தமது ஊழி யத்தை ஆரம்பித்தார்.

திருநெல்வேலிக்கு முதல் எஸ் பி. ஜி மிஷனரியாக கனம் சார்ல்ஸ் ஹப்பார்ட் என்ற ஆங்கில மிஷனரி நியமிக்கப்பட்டார் திருநெல்வேலிக்கு வந்த மிஷனரிமார்களில் இவர் மூன்றுமவராவார். இவர் 1836ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 20ம் தேதியில் சென்னைப்பட்டிணத்தில் வந்திறங்கினர். பாளையங்கோட்டையில் உள்ள கோட்டை சபையை கண்காணிக்கவும் தமிழ் கற்றுக்கொள்ளவும் கேட்டுக்கொள்ளப்பட்டார். பாளையங்கோட்டையிலுள்ள கோட்டையிலும் திருநெல்வேலியிலும் ஒவ்வொரு ஆங்கில தமிழ் பள்ளிக்கூடங்கள் திறக்கவேண்டும் என்று செனைனக் கமிட்டிக்கு ஆலோசனை கூறினர். பாளையங்கோட்டையில் அதற்கான நிலம் கிடைத்ததால் 36 மாணவர்கள் அடங்கிய பள்ளி திறக்கப்பட்டு மேலிடத்தாரால் அங்கிகரிக்கப்பட்டது திருநெல்வேலியில் இடம் கிடைக்காதபடியால் பள்ளி திறகப்படவில்லை. இதற்கிடையில் 1838ம் ஆண்டில் அன்னர் மதுரைக்கு மாற்றப்பட்டார்.

1837ம் ஆண்டு டிசம்பர் மாதம் 18ம் தேதியில் தாம் ஐரோப்பாவிற்கு திரும்ப தீர்மானித்திருப்பதை சென்னை சங்கத்தாருக்கு அறிவித்தார் அவ்வாறே தம்முடைய பணியைச் சாந்தப்பன் என்ற விசாரணை உபதேசியாரிடம் ஒப்படைத்துவிட்டு 1855ம் ஆண்டு மார்ச் மாதம் 12ம் தேதி கொச்சி சென்று அங்கிருந்து ஐரோப்பாவுக்குக் கப்பல் ஏறினர். டென்மார்க்கில் 1862ம் ஆண்டில் மரணமடைந்தார்

ரேசன் ஐயர் அவர்கள் திருநெல்வேலியை விட்டுச் செல்லு முன்னரே இரியன் அய்யர் அவர்கள் கடும்நோய்வாய்ப்பட்டு சென்னை சென்று 1839ம் ஆண்டின் ஆரம்பத்தில் அய்ரோப்பா சென்று 1841ம் ஆண்டில் மரணமடைந்தார் ஆகவே திருநெல்வேலிக்கு திரும்பவும் எந்த அய்ரோப்பிய மிஷனரிமாரும் இல்லாதுபோயிற்று.

இந்நிலையைக்கண்ட சென்னை சங்கத்தினர் பெரிதும் கவலையுற்றவராய் அப்பொழுது சென்னை வெப்பேரியில் பணிபுரிந்துகொண்டிருந்த கனம் ஏ. எப். கேமிரா அய்யரவர்களைத் திருநெல்வேலிக்கு அனுப்பத் தீர்மானித்தது. அதன்படி 1838ம் வருடம் மே மாதம் 25ம் தேதியில் பாளையங்கோட்டை வந்து சேர்ந்து அடுத்த இருபது வருடங்களுக்குள் நாசரேத் சபையை எஸ். பி. ஜி. சபையில் அதி உன்னத நிலையை எய்துவதில் ஈடுபட்டனர். வைராக்கியத்தில் தம் முன்னோடிகளுக்குச்சமமாயும் பலத்திலும் சக்தியிலும் அவர்களை மிஞ்சியும் இந்த

பிராந்தியத்தின் மீது அழித்துவிடமுடியாத ஒரு முத்திரையைப் பதிப்பித்தார். இவரது ஊழியத்தில் பங்கு பெற்று உதவும்படி 28-3-1839ல் கனம் ஜி ஒய். ஹெயினும் 5-4-1839ல் தஞ்சாவூரில் எஸ். பி சி.கே. மிஷனெரியாகவுமிருந்த கனம் கிறிஸ்டியன் சாமுவேல் கோலாப்பும் (கனம் ஸ்வார்ட்ஸ் ஐயரவர்களின் மாணவரும் அதன்பின் அவர் ஸ்தானத்தில் பணியாற்றியவருமானவர்) முதலூரில் ஸ்தாபகப்படுத்தப்பட்டனர். இவர்கள் இருவரும் அங்கு ஒரு ஆலயம் கட்ட மிக ஆர்வத்துடன் செயல்பட்டனர். எஸ். பி. சி. கே. சங்கத்தாரும், சென்னை எஸ். பி. ஜி. சங்கத்தாரும் மிகத் தாராளமான உதவி செய்தனர். கால்டுவெல் அத்தியட்சரவர்கள் 'அழகில் மிகக்குறைந்திருந்தாலும் பரிமாணத்தில் திருநெல்வேலியில் மிகப் பிரமாண்டமானது" என்று இதை வருணித்திருக்கிறார்.

பதினைந்தே மாதங்கள் மாத்திரமே முதலூரில் பணியாற்றிய கனம் கோலாப் ஐயரவர்கள் அங்கிருந்து 11—6 1840ல் திண்டுக்கல் லுக்கு மாற்றப்பட்டார் குறுகிய காலத்துக்குள் உடன்குடியிலுள்ள பெரும்பான்மையினரை கிறிஸ்தவ சபையின் அங்கத்தினராக்கிவிட்டார், அச்சபையினர் குடியிருந்த பாகத்திற்கு கிறிஸ்திய நகரம் என்று பெயர் வைத்துக்கொண்டனர். ஏனென்றால் அது கனம் கோலாப் ஐயரவர்களின் முதற்பெயராகும். இத்தலம் பின்னால் S.P.G சபையின் ஒரு பிராந்திய தலைத்தளமாக மாறியது. இங்கு கனம் J. K. பேஸ்ட் ஐயரவர்களால் கட்டப்பட்டுள்ள மிக அழகான பரி. மாற்கு ஆலயம் 25—1—1849ல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. 1845ம் வருடம் வரை ஹெயின் முதலூரில் ஊழியம் செய்து வந்தார். (இவர் முன்னர் கப்பற் படையில் பணியாற்றிப் பின் கல்கத்தாவிலுள்ள அத்தியட்சர் கல்லூரியில் கல்வி கற்று 7-3-1840ல் நாசரேத் வந்து கேமரர் ஐயரவர்களுக்கு உதவியாக உபதேசியாராகப் பணியாற்றியவர். ஸ்பென்ஸர் அத்தியட்சரவர்களால் 17-1--1841-ல் பாளையங்கோட்டையில் குரு அபிஷேகம் பெற்று 28—1—1841ல் நாகபட்டினத்தில் பணியாற்றும்படிச் சென்றார்.

ஸ்பென்ஸர் அத்தியட்சரவர்கள் திருநெல்வேலிக்கு விஜயம் செய்தது குறிப்பிடத்தக்கதாகும் திருவாங்கூர் விஜயம் முடிந்தபின் 21—1—1841ல் டோனாவூர் போய்ச்சேர்ந்து அங்கே 160 பேருக்கு திடப்படுத்தல் கொடுத்தார். பின் அங்கிருந்து சாத்தான்குளம், முதலூர், நாசரேத் முதலான இடங்களுக்குச்சென்று ஒவ்வொரு இடத்

திலும் நூற்றுக்கணக்கான பேருக்குத்திடப்படுத்தல் கொடுத்தபின் முற்றிலும் களைப்படைந்தவராய் 9—1—1841ல் பாளையங்கோட்டை வந்து சேர்ந்தார். மறுநாள் ஞாயிற்றுக்கிழமையன்று (10 1—1841) 565 பேருக்குத்திடப்படுத்தல் கொடுத்தார். அடுத்த ஞாயிறு (17—1—1841) அன்று ஆங்கில ஆலயத்தில் டென்ற் என்பவருக்குக் குருப்பட்டமும், நெக்லாய்ட், மூயார்ட் என்னும் இருவருக்கும் உதவிக் குருபட்டமும் கொடுத்துவிட்டு அடுத்த நாளே திருநெல்வேலியை விட்டுச் சென்றார் அத்தியட்சரின் பத்திரிக்கையில் தாம் திருநெல்வேலியில் செலவிட்ட இரண்டு வார கால நிகழ்ச்சிக் குறிப்புகளில் எஸ். பி. ஜீ. யும் சி. எம். எஸ். செய்துள்ள சிறப்பான வேலையைப் பற்றிய உவகையூட்டும் முறையில் எழுதியுள்ளார்.

இந்தியாவில் ஓர் கிறிஸ்தவ கிராமத்திற்கு விஜயம் செய்வதினால் மனதில் உண்டாகும் பாதிப்பை என்னால் வருணிக்க முடியாது. திரும்பவும் தாய் நாட்டிற்கே வந்து சேர்ந்த உணர்ச்சி ஏற்படுகிறது ஒவ்வொருமுகத்திலும் சந்தோஷமும், வரவேற்பும் தெரிகிறது கர்த்தருக்குஸ்தோத்திரம்' என்று 'வாழ்த்துதல் ஒவ்வொரு சுதேச கிறிஸ்தவரிடமும் இருந்து வெளிப்படும் போது மிகுந்த மன ஊக்கம் உண்டாகின்றது". (முதலூர் 5—1—1841).

"நான் திருநெல்வேலியில் பார்த்த ஆலயங்களில் நாசரேத் ஆலயமே மிகச்சிறந்ததும் மிகப் பெரியதுமானது ஆலய அம்சமும் பொருந்தியது சபையினரும் மிகவும் ஒழுங்குடையவராயிருந்தனர்" (பாளையங்கோட்டை 9-1-1841) காமெரர் ஐயரவர்களும் அவரது மனைவியும் செய்த இருபது வருஷ ஊழியத்தின் விளைவாக நாசரேத்தும் சுற்றுவட்டாரங்களும் வியக்கத்தக்க அளவில் வளர்ச்சிபெற்றிருந்தன. மிடில்ட்டன் அத்தியட்சருடைய விஜயத்தின் பின் ஒரு மாதத்திற்குள் காமெரர் ஐயர் ஒரு கூடை நிறைந்த விக்கிரகங்களை எஸ். பி ஜீ. சங்கத்திற்கு அனுப்பிவைத்தார். அவை ஐந்து கிராமங்களின் மக்களால் தாங்கள் தங்களுடைய முந்திய மத வழிபாடுகளைத் துறந்துவிட்டதின் அத்திதாட்சியாக அவரிடம் கொடுக்கப்பட்டவை. அப்பொழுதிருந்து சபைடசன் கணக்கான அடுத்துள்ள கிராமங்களில் விரிவடைந்தது. எல்லாம் ஒருங்கே ஒன்றாய் இணைந்த கிறிஸ்தவ சமுதாயமாய் விளங்கிற்று. இப்பொழுது நாசரேத்துக்கு விஜயம் செய்பவர் சிறு கிராமங்களில் கூட கோபுரங்களையும் ஏகமாய் மக்களை ஆராதனை செய்ய அழைக்கும் கோவில் மணிச் சத்தங்களையும் கேட்கக் கூடிய இந்த அனுபவம் இருதயத்தை

மிகவும் சந்தோஷப்படுத்துவதாய் இருக்கும் பிள்ளையன் மனையிலும் ஆசட்டைக்குளம் வாழையடி, மூக்குப்பீரி பிரகாசபுரம் ஒய்யான்குடி முதலிய இடங்களிலும் கவனத்தைக் கவரக் கூடிய ஆலயங்களையும் காணலாம். இப் பகுதியிலுள்ள கிராமப்புறத்து மக்களின் கிறிஸ்தவ ஜீவியத்தின் மதிப்பையும் சாட்சியையும் எடுத்துக் காட்டுவதாய் இது அமைந்துள்ளது

றினியூ ஐயரவர்களால் 1820 தோற்றுவிக்கப்பட்டு 1826 மறைந்துபோன நாசரேத்திலுள்ள பெண் பாடசாலையைப் 1843-ல் புத்துயிர்பெறச் செய்த பெருமை கேமரர் ஐயரவர்களின் மனைவியாரையேசாரும் அவ்வம்மையார் 1848—ல் அப்பள்ளியில் மாணவர் உறைந்து வாழும் விடுதி ஒன்றையும் ஏற்படுத்தித் தந்தனர். மறு வருடமே 15—9—1849-ல் அகாலமரணமடைந்தனர்

கேமரர் ஐயரவர்களின் பணியின் இறுதிப்பாகம் சற்றுக் கசப்புள்ளதாகவே அமைந்தது. கீர்த்திபெற்ற உபதேசியார் சுவாமி அடியான் என்றவராலும், இளமைத்துடிப்பும் திறமையும் வாய்ந்த ஆசிரியர் அருமைநாயகம் என்பவரின் விவாக விவகாரத்தில் [illegible] ஐயரவர்களின் குறுக்கிடுதலின் காரணமாகவும் விரும்பத்தகாத ஒரு பிளவு சபையில் ஏற்பட்டுவிட்டது. மூக்குப்பீரியிலும், பிரகாசபுரத்திலும், மற்றும் சிலகிராமஙகளிலும் பெருமளவில் பிரிந்து சென்ற மக்கள் தாங்களாக ஒரு சுதேச சபையை நிறுவினர். பின் 1857-ல் பிரகாசபுரத்தில் இந்து ஏக ரட்சகர்சபைக் கோவில் என்ற ஓர் ஆலயத்தையும் கட்டினர். அதில் யூத வழிபாட்டு முறையின்பற்றப் பட்டது. 1858-ல் கேமரர் ஐயர் தஞ்சாவூருக்கு மாற்றப்பட்டார். 1862-ல் ஓய்வு பெற்றுத்தரங்கம்பாடியில் தங்கியிருந்தது 2 9-1891ல் மரணமடைந்தார்.

பிரசித்திபெற்ற டாக்டர் G U. போப் அவர்களின் சகோதரரான ஹென்றிபோப் ஐயர் கேமரர் ஐயரவர்களின் இடத்தில் நியமிக்கப் பட்டார். ஆனால் ஒரு வருடம் 'முடியுமுன்னரே உதகமண்டலத்தில் தம் சகோதரர் டாக்டர் G.U போப் அவர்களால் புதிதாக ஆரம்பிக்கப் பட்டுள்ள பள்ளியில் பணியாற்றும்படி தம் வேலையை ராஜினாமா செய்துவிட்டார் 1836 ல் உதவிக்குருவாக இந்தியாவிற்கு வந்து 8—1—1837 ல் குருப்பட்டம் பெற்ற தாமஸ் பிரதர்ட்டன் ஐயரவர்கள் தஞ்சாவூரில் நியமிக்கப்பட்டார். 1837-ல் அவர் சாயர்புரத்திலுள்ள குருபயிற்சி 'சாலைப்பொறுப்பில் அமர்த்தப்பட்டார். 1859-ல் நாசரேத் மிஷன் பொறுப்பு அவரிடம் ஒப்படைக்கப்பட்டது, புனித

வாழ்க்கை நடத்தியவரும் எபிரேய பாஷையில் விசேஷித்த பாண்டித்யம் பெற்றவருமான அவரது சேவை வேதாகம மொழி பெயர்ப்பு வேலைக்கு இன்றியமையாததாகியது. அவரது சகோதரி திருமதி. ஸ்கார்பரோ அம்மையார் நாசரேத்திலுள்ள மகளிர் பள்ளியை விருத்திசெய்து 1—4—1869-ல் சர்க்காரின் உதவித் தொகையைப் பள்ளி பெறும்படியாகச் செய்தார். ஐயரவர்கள் 1869 மார்ச் மாதத்தில் கடுமையான சுகவீனமடைந்து பின் சிறிது தேறிய பின், அயராது உழைத்து 28-6-1869-ல் மறுமைக்குள்ளானார் மரணத்திற்கு முந்தின நாளில் அவர் தமது பிரசங்கத்தின் கடைசி வார்த்தைகள் "நல்ல போராட்டத்தைப் போராடினேன், ஓட்டத்தை முடித்தேன்" என்பதாம். சபையார் பெரிதும் துக்கம் கொண்டாடினர் அவருடைய உடல் கோவில் காம்பவுண்டினுள் நல்லடக்கம் செய்யப்பட்டது.

எடின்பரோ பல்கலைக்கழகத்தின் தங்கப்பதக்கம் பெற்ற மருத்துவராகப்பட்டம் பெற்றவராகவும், ஏற்கனவே இடையன்குடியிலும், ராமநாதபுரத்திலும் பணியாற்றியவரும் 1866-ல் மருத்துவப் பயிற்சிக்காகத்தாய்நாடு சென்று திரும்பியவருமாயிருந்த கனம் டாக்டர் ஸ்ட்ரெச்சன் பிரதர்ட்டன் ஐயரவர்களுடைய ஸ்தானத்தில் 1870-ல் நியமிக்கப்பட்டார். திருநெல்வேலியின் மருத்துவப் பணியின் ஸ்தாபகர் இவரே. 1870-ல் இவர் நாசரேத்தில் ஒரு சிறிய மருத்துவ மனையை நிருபணம் செய்தார். கால்டுவெல் அத்தியட்சரின் சகோதரியான திருமதி ஷெப்ஹெர்ட் இவரது உதவியாளராக அங்கே பணியாற்றினர். மருத்துவமனை ஆரம்பத்திலிருந்தே பொதுமககளிடையே மிகுந்த ஆதரவு பெற்றதாயிருந்தது. 40-லிருந்து 50 மைல் தூரமுள்ள இடங்களிலிருந்து வியாதியஸ்தர் வந்து சுகம் பெற்றனர். வளர்ந்து பெருகிக்கொண்டு வந்த சபையின் அபிவிருத்திக்கு இவர் பெரிதும் உதவியாக விருந்தார். 1872-ல் ஆலயம் விஸ்தரிக்கப்படவும் ஆழ்வார்திருநகரியுடன் ஒரு நல்ல ரஸ்தாவினுல் நாசரேத் இணைக்கப்படவும் இங்கு ஒரு தபால் ஆபீஸ் ஏற்படுத்தப்படவும் நல்ல அகலமான ரஸ்தாக்களுடனும் விளங்கவும் ஏற்பாடு செய்தார். சென்னையிலுள்ள சான்தோம் என்ற இடத்திற்கு மாற்றப்பட்டதன் விளைவாக 31—3—1876 நாசரேத்தைவிட்டுச் சென்றார். தாயகம் திரும்பிய காலத்தில் இரங்கூன் அத்தியட்சராக அபிஷேகம் பெற்றார் இரங்கூனில் 20 வருட காலம் அத்தியட்சராகப் பணியாற்றியபின் 1902-ல் இங்கிலாந்து திருப்பிச்சென்று 2—5—1906-ல் மரணமடைந்தார்.

## XXXXXIII

1876 லிருந்து 1908 வருடம் வரை சிறந்த உக்கிரமணப் பொறுப்போடு பணியாற்றிய கனம் ஆர்தர் மர்காசியஸ் ஐயர் அவர்களின் ஊழியத்தின் பயனாக நாசரேத் முன்னைக்காட்டிலும் இன்னமும் அதிகமான முக்கியத்துவம் பெற்றது. அன்னாரை நவீன நாசரேத்தின் சிற்பி எனலாம். S.P.G. சங்கத்தின் சரித்திராசிரியர் சி.எப். மாஸ்கோ நாசரேத்தைப்பற்றி பின்வருமாறு குறிப்பிடுகிறார். "சென்னை அத்தியட்சாதனத்தில் நாசரேத் மிக வெற்றிகரமான சுவிசேஷப்பிராந்தியமாக முன்னாளிலும் இப்போதும் அதிமுக்கியமான பெரிய பகுதியாக விளங்குகின்றது." 24 வயதுள்ள இளைஞனாக நாசரேத்துக்கு வந்த மர்காசியஸ் தன்னுடைய பணியில் முழு மூச்சுடன் ஈடுபட்டு ஏற்கனவே அமைந்துள்ள அப்பணித்தளத்தை விசாலமடையச் செய்து புதிய அம்சங்களில் அதிக உபயோகமுள்ள ஒன்றாக விருத்திசெய்தார். அருகாமையிலுள்ள ஆழ்வார்திருநகரி யுடன் நல்ல தொடர்பு கொண்டு அங்குள்ள உயர்ஜாதி இந்துக்களில் அநேகர் கிறிஸ்துவண்டைவர உதவினார். அவர்களில் இருவர் அவரால் குருமாராகப்பணிப்படுத்தப்பட்டனர். அவர்களில் ஒருவர் கனம். A.N. சத்தியநாதன் மற்றொருவர் கனம். பட்டாபிராமன் என்பார். சுறுசுறுப்பு நிறைந்த அவரது பணியில் சுவிசேச பிரபல்யம் மிகச் சிறந்த இடம் பெற்றிருந்தது. நாசரேத் சபையின் மக்களிடையே சிறந்த பாரம்பரியங்கள் அவர்கள் வாழ்க்கையோடு இணையவும், நல்ல பழக்கவழக்கங்களுடன் கூடிய சபைப்பாங்கும் நிலைத்து நிற்கவும் செய்தார்.

அவரால் நிறுவப்பட்டு பூரணப் படுத்தப்பட்ட நிறுவனங்களும் பின் சந்ததியார் அவரை நினைவில் கொள்ளத் தூண்டுகிறது. டாக்டர் ஸ்டரச்சன் அவர்களால் நிறுவப்பட்ட மருத்துவப் பணி கனம்மர் காசியஸ் அவர்கள் காலத்திற்குப் பின் சீண தசை அடைந்தது மர்கா சியாஸ் அதைப் பொறுப்பில் எடுத்துக் கிடைக்கக் கூடிய சிற்சில மருந்துகளை எடுத்து பரிசுத்த லூக்கா ஆஸ்பத்திரியாக பரிசுத்த லூக் காவின் திருநாளன்று 1892ம் வருடத்தில் (அக்டோபர் 18ம் நாளில்) பிரதிஷ்டை செய்தார். மேலும் 14-11-1878 அன்று தொழில் நிறுவன சாலையும் அதை ஒட்டிய அநாதை விடுதியும் அவரால் திறக்கப்பட்டது 1877ம் ஆண்டில் நடந்த கடும் பஞ்சத்தில் அநாதைகளாக விட்டு விடப்பட்ட சிறுவர்களுக்கு சென்னை ராஜ்யத்திலேயே ஒரு ஒப்பற்ற நிறுவனமாக விளங்கியது 1877ல் பெண்களுக்கான பரிசுத்த யோவான் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியையும் திறந்து வைத்தார். 1886ல் பெண்களுக்கு ஏற்படுத்தப்பட்ட பரிசுத்த யோவான் உயர்நிலைப்பள்ளி

சென்னை மகாணத்திலேயே முதலாவதாக ஏற்படுத்தப்பட்டது ஆகும். ஆண் பிள்ளைகளுக்கான உயர் நிலைப்பள்ளி 1889 வரை நிறுவப்படாமல் இருந்து நிறுவப்பட்டபின் தூத்துக்குடியில் உள்ள கால்டுவெல் உயர்நிலைப் பள்ளிக்கு போட்டியாகும் என்று கருதிய கால்டுவெல் அத்தியட்சர் 1892ல் அதை மூடிவிட ஏற்பாடு செய்தார். (1930ல் தான் ஆண்களுக்கான மர்காஷியஸ் உயர்நிலைப் பள்ளி ஏற்படுத்தப்பட்டது ) 1 4-1884 ல் நாசரேத் (S. P G.) கிறிஸ்தவ மரணஉதவி நிதிச் சங்கத்தையும் ஸ்தாபித்தார். நாசரேத்துக்கு விஜயம் செய்த அநேகர் அங்குள்ள ஒருங்கிணைந்த கிறிஸ்தவ சமுதாயத்தின் அமைப்பைக் கண்டு பெரிதும் உவகை எய்தினர். அவ்வாறு விஜயம் செய்தவர்களில் 1893ல் விஜயம் செய்த அதி மேன்மை தங்கிய இந்தியா' பர்மா, இலங்கை மேத்திராணியார் இ. ரா. ஜாண்சன் அவர்களால் கனம் மர்காஷியஸ் ஐயரவர்களுடைய பணி அத்தியாட்சாதினத்தின் முதல் அத்தியட்சரான மார்லி அத்தியட்சர் அவர்கள் காலம் வரைக்கும் நீடித்தது பொருத்தமான இடத்தில் மீதமாயுள்ள அவர்களுடைய இறுதி காலப் பணியின் வரலாறு இடம் பெறும்.

எஸ். பி. ஜி. யின் மற்றொரு முக்கியமான வளம் பொருந்திய தளம் முந்தின நூற்றாண்டின் நாற்பதாம் வருடங்களில் திகழ்ந்த சாயர்புரம் ஆகும். எஸ். பி சி கே சங்கத்தாருடன் மிகத் தோழமை கொண்டிருந்த கிழக்கிந்தியக் கம்பெனி உத்தியோகஸ்தரான ஒரு ஆங்கிலோ இந்தியச் சபையினரான சாயர் என்பவருடைய பெயர் அவருக்கு நன்றியறிதலான, ஞாபகர்த்தமாக இடப்பட்டது. துன்புறுத்தப்பட்ட கிறித்தவர்கட்காக தாம்பிரபரணி ஆற்றின் வடபுறத்தில் 150 ஏக்கர் நிலம் வாங்கி அந்த அமைதியான, சமாதானமான இடத்தில் அவர்களைக் குடியேற்றினர். 1814ல் அந்தக் கிராமமானது சாயர்புரம் என்ற பெயர் பெற்றது.

எஸ். பி. ஜி சங்கத்தாரின் இரு நூற்றாண்டு அறிக்கையில் (1900) திரு. சாயர் அவர்களால் ஆற்றப்பட்டுள்ள இந்த சிறந்த பணி சிறந்த இடம் பெற தகுதி உடையதாய் இருந்தது இந்த ஏ'ற் பா டு செய்யப்பட்டிருக்காவிடின் அந்த இடங்களில் ஏற்றப்பட்டுள்ள சுவிசேஷ விளக்கு அணைந்திருக்கக் கூடும் அங்குள்ள முதல் கிறிஸ்தவர்கள் ஒன்று சேர்ந்து 1825 லேயே தங்களுக்கென்று ஒரு சின்ன ஆலயத்தையும் 10 மாணவர் கொண்ட ஒரு பள்ளியையும் அமைத்துக் கொண்டனர். பெரும் தீரம் உள்ள இளைஞரான டாக்டர் ஜி. யு போப் 1842ல் வந்த பின் தான் சாயர்புரம் மிஷினரி

சரித்திரத்தில் விசேஷித்த முக்கியத்துவம் பெற்றது. சுதேச மிஷனரி மாருக்கு ஒரு பயிற்சி நிலையம் அத்தியாவசியமானது என்று கண்டு 1844ல் பிரசித்தி பெற்ற சாயர்புரம் குரு பயிற்சி நிலையம் என்னும் ஸ்தாபனத்தை நிறுவினார். நூற்றுக் கணக்கான இந்திய குருமார் ஆசிரியர்கள் உபதேசிமார்கள் முதலோர்க்கு வளரும் பண்ணையாக அமைந்தது. இந்த ஸ்தாபனத்தின் உயர்ந்த நிலை இங்கிலாந்தில் உள்ள ஆக்ஸபோர்டு பல்கலைக்கழகத்தின் கவனத்தை ஈர்த்து இந்த நிறுவனத்திற்குத் தகுதியான ஒரு நூல் நிலையத்தை தனக்கென்று ஏற்படுத்திக் கொள்ளுமாறு பொருள் உதவிகளையும் செய்தது.

டாக்டர் ஜி. யு. போப் அவர்களின் முயற்சிகள் கல்வித் துறையில் போலவே திருச்சபைத் துறையிலும் பெரிதும் ஈடுபடுத்தப் பட்டன. அருகாமை உள்ள கிராமத்திற்கும் சுவிசேஷ ஒளியை எடுத்துச் செல்லவும் சபையின் மக்கட்கானச் சேவை புரியவும் தன்னால் கிறிஸ்தவக் கொள்கையில் பயிற்றுவிக்கப்பட்ட உபதேசி மார்களை ஏற்படுத்தினார். 1846ல் சரித்திர முக்கியத்துவம் பெற்ற சகல பரிசுத்தவான்களின் ஆலயத்தை முன்னுள் ஒரு இந்து ஆலயம் இருந்த இடத்தில், சுப்ரமணிய புரத்தில் கட்டினார். இதில் பெரிய எதிர்ப்பையும் அவமானத்தையும் அவர் ஏற்க வேண்டியதாயிற்று. சாயர்புரத்தித்தில் 1857-ல் கனம் எச். சி. ஹக்ஸ்டபுள் அய்யர் அவர்களால் பரிசுத்த திரித்துவ ஆலயத்திற்குச் சாயர்புரத்தில் அடிக் கல் நாட்டப்பட்டது. இந்த ஆலயததின் வேலை தொடர்ந்து கனம் ஷேரக் அய்யர் அவர்களால் செய்யப்பட்டு 1887 நவம்பர் 11-ம் தேதி சிவப்பு செங்கற்களால் ஆகிய அழகிய ஆலயமாக மேன்மை தங்கிய மேத்திராணியார் ஜான்சன் அவர்களால் பிரதிஷ்டை செய்யப் பட்டது. எஸ். பி. ஜி. சங்கத்தின் கிறித்தவ முயற்சிகளின் முக்கிய மான அம்சமாக மருத்துவத்தின் சுவிசேஷ வேலை பரீட்சாத்தமாக சாயர்புரத்தில ஆரம்பிக்கப் பட்டது. 1854-ல் கனம் எப். சி ஹக்ஸ்டர் அய்யரவர்களால் ஆரம்பிக்கப்பட்ட இது ஒரு சிறு சிகிச்சை ஸ்தலம் பரி சுத்த. ராப்பேல் ஆஸ்பத்திரியாக முடிவுற்றது. பின்னால் வந்த மிஷனரி மாராகிய கனம் ஏர்ன் ஷா, கனம் பிரதர் டன் போன்றவர்கள் தங்களு டைய சபைப் பணியின் மத்தியிலும், குருத்துவப் பயிற்சி மனைப் பணியின் மத்தியிலும் ஆஸ்பத்திரி முன்னேறுவதற்கான முயற்சி யிலும் பங்கெடுத்துக் கொண்டார்கள். கனம் ஆடம்ஸன் அய்யர வர்கள் காலத்தில் இந்த ஆஸ்பத்திரி பொதுமக்களின் பெரும் ஆதரவைப் பெற்றது. 1877 முதல் 1879 வரை நடத்த பெரும் பஞ்சத்தின் விளைவாக கொள்ளை நோய்களின் கோரத்தைத் தவிர்ப்

பதிலும் இந்த ஆஸ்பத்திரி பெரும் சேவை புரிந்தது. 1881-ல் இந்த ஆஸ்பத்திரியானது இந்தியத் தலைவர்களின் நடத்துதலுக்கு உட்பட்டது. டாக்டர் ஏ. ஜோசப் பொறுப்பு ஏற்று 1896 வரை சிறந்த ஊழியம் செய்தார். டாக்டர் போப் ஏற்படுத்திய குரு பயிற்சி நிலையமானது ஒரு கல்லூரியாக மலர்ந்து 1880-ல் சென்னைப் பல்கலைகழகத்தின் இணைவு பெற்றது. கனம் ஸாராக் அய்யரவர்களே அதன் முதல் முதல்வர். ஆனால் கால்டுவெல் அத்தியட்சரவர்களோ அக் கல்லூரியை உயர்நிலைப்பள்ளியோடு சேர்த்து தூத்துக்குடிக்கு மற்றி சாயர்புரத்தை ஒரு மத்திய நிலைப்பள்ளியாக விட்டுவிடுவதை உசிதம் எனக் கருதினர் (1883-ல்.)

சாயர்புரத்திலிருக்கையில் தம்முடைய பணியை வடக்கிலுள்ள புதுக்கோட்டைக்கும் புதியம்புத்தூருக்கும் கிடைக்கச் செய்தார். சாயர்புரம் ஆலயம் கட்டும் சங்கத்தாரால் புதியம்புத்தூரின் முதல் ஆலயம் 844ல் கட்டப்பட்டது. அங்கு உறைந்து வாழ்ந்த முதல் மிஷனெரி 1னம் கேயர்ன் ஸ்ஆவார். 1856 முதல் 1873 வரையுள்ள அவர்காலத்தில் அங்குள்ளசபை ஸ்திரமாக ஸ்தாபிக்கப்பட்டது. இப்பொழுது அங்குள்ள பரிசுத்த யோவான் ஸ்நானகன் ஆலயம் 1982 ல் கட்டப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டது. 1848ல் புதுக்கோட்டையில் ஒரு ஆலயம் கட்டப்பட்டது அங்குள்ள மிக வேகமாய் வளர்ந்து வந்த சபையின் பொறுப்பு அப்பொழுது சாயர்புரத்தில் மிஷனெரியாக இருந்த கனம் அடால் பஸ் அய்யரவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆனல் கனம் கெயர்ன்ஸ் அய்யரவர்கள் காலத்தில் தான் பல துறைகளிலும் சபை விருத்தியடைந்தது. கனம் சாமுவேல் எசுவடியான் அய்யரவர்கள் சபையின முதல் சுதேச குருவாகப் பொறுப்பேற்றனர். புதியம்புத்தூரிலிருந்து சபை நாகலாபுரம் வரை பரவியது. அப்போதிருந்து நாகலாபுரம் ஒரு கிறிஸ்தவ கண் காணிப்பு நிலையமாக அமைந்தது. அத்தலம் மிகவும் பின்னடைந்ததும், ஸ்திரநிலை பொருதநுமான பிரதேசம்.

திருநெல்பவலி ஜில்லாவின் தெற்குக் கோடியிலுள்ள இடையன்குடி எஸ் பி. ஜி. சங்கத்தின் பேர் பெற்ற மற்றெரு பணித்தலம் ஆகும். அங்குள்ள இடையர்களின் குடியிருப்பால் அப்பெயர் வழங்கப்பட்டது. இத்தலம் கால்டுவெல் அத்தியட்சரவர்களின் முயற்சியாலேயே அமைக்கப்பட்டதாகும். இந்தக் கிராமமானது முதலில் கெரிக் சத்யநாதன் என்பவர்களின் ஆதிக்கம் பெற்றிருந்தது இங்குள்ள ஆதிக்கிறிஸ்தவர்கள் போதுமான மேற்பார்வை இல்லாத காரணத்



அருள்பெருந்திரு
ராபர்ட் கால்டுவெல்
1879—1891

னால் மறுதலித்து மீண்டும் இந்துக்களானுர்கள் இழந்து போனதைத் திடவும் ரட்சிக்கவும் என்ற பணியில் சிதைந்து சிதறிக் கிடைந்த இடிந்திருந்த சபையைத் திரும்பிக் கட்டும்படியாக கனம் ராபர்ட் கால்டுவெல் அய்யரவர்கள் பொறுப்பேற்றனர். வியக்கத் தருந்த நிலையில் சபை எழுச்சி அடையும் படியாக ஞானத்துடனும் ஆர்வத்துடனும் கடின உழைப்பின் காரணமாக அந்தக் கிராமம் முழுவதுமே கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டது. 1853 ல் ஹாங்காங் அத்தியட்சர் அச்சபைக்கு விஜயம் செய்த பொழுது அங்குள்ள ஆலயங்கள் பள்ளிக் கூடங்கள் இவைகளின் எழுச்சியைக் கண்டு ''இது ஒரு விதக் கிறித்தவக் குடியேற்றமாய்த் தெரிகிறது'' என்றார். அவருடைய சொந்த உழைப்பாலும், அவரது மேற்பார்வையாலும் பரிசுத்த திருத்துவ ஆலயம் அவரது 33 வருட உழைப்பின் மத்தியில் கட்டப்பட்டுள்ளது அவர் 1880 ல் உதவி அத்தியட்சராக ஆன பின் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அந்த ஆலயத்தின் இசை ஒலிக்கும் மணிகள் கால்டுவெல் அத்தியட்சரின் குடும்பத்தாரின் நன்கொடை. கிராதி அறையின் சித்திர மயமான ஜன்னல் அக்காலத்தில் சென்னை ராஜ்ய கவர்னராக இருந்த நேப்பியர் பிரபுவின் நன் கொடையாகும். பிரதிஷ்டை சந்தர்ப்பத்தில் பாடுவதற்கென ஆங்கிலத்தில் இருந்த ''The Church's one Foundations' என்ற ஞானப்பாட்டைத் தமிழில் ''சபையின் அஸ்திபாரம் சீர் ஏசுகிறிஸ்து தாப'' என்னும் ஆரம்பத்துடன் மொழி பெயர்த்தார். 28-8-1891 ல் கொடைக்கானலில் மரணமடைந்த பின் அவர் கட்டி பிரதிஷ்டை செய்து பணியாற்றிய ஆலயத்தின் கிராதி அறையின் அடியில் நல்லடக்கம் செய்தது மிகவும் பொருத்தமானதே. கனம் சார்ஜென்ற் அய்யரவர்களோடு கனம் கால்டுவேல் அய்யரவர்களும் 11-3-1877 உதவி அத்தியட்சர்களாக அபிஷேகம் பெற்ற பின் கால்டுவெல் அத்தியட்சரவர்கள் தூத்துக்குடி வந்து சேர்ந்து 1883 வரை அதைத்தன் தலைமை ஸ்தானமாக வைத்துக் கொண்டார். சாயர்புரத்திலுள்ள குரு பயிற்சி பள்ளியைத் தூத்துக்குடிக்கு மாற்றிக் கொண்டு வந்தபின் அது கால்டுவெல் கல்லூரியாகத் திகழ்ந்தது. சார்ஜென்ட் அத்தியட்சரவர்கள் மரணமடைந்த பொழுது சி. எம். எஸ். பகுதிகளின் மேற்பார்வையும் சில மாதங்களாகக் கால்டுவெல் அத்தியட்சரவர்கள் வசமிருந்தது 1891ல் ஏற்பட்ட மரணம் ஒரு சகாப்தத்தின் முடிவாய் அமைந்தது அதன் போது எஸ். பி ஜி.; சி. எம். எஸ். என்ற இரு பணித்தலங்களும் ஒன்றுக் கலக்க அனுகூலமான சூழ்நிலை உருவாகி ஒரே அத்தியட்சாதீன அமைப்பிற்கு அடிகோலிற்று.

---



அருள்பெருந்திரு
சாமுவேல் மார்ளி
1896—1903

# சாமுவேல் மார்லி அத்தியட்சர்

## இவரது காலம் 1896 — 1903 ஆகும்.

1841-வது ஆண்டில் திருநெல்வேலி பிராந்திய சபையில் 30,000 அங்கத்தினர் இருந்தனர். அத்தியட்சர் ஆளுகை தேவைப்பட்டது. அத்தியட்சர் நியமிக்க இங்கிலாந்து நாட்டுப்பார்லிமெண்டு இதற்கென்று ஒரு தனிச்சட்டம் இயற்றவேண்டுமென்பது அக்காலச் சம்பிரதாயம். சாத்தியநிலை ஏற்படாத காரணத்தால் இந்திய சபைகள் அனைத்திற்கும் அத்தியட்சராயிருந்த பிஷப் ஜாண்சன் என்பார் நெல்லைப்பகுதியில் பணியாற்றிய டாக்டர் கால்டுவெல் டாக்டர் சார்ஜெண்ட் ஆகிய இருமிஷனரிகளையும் சென்னை அத்தியட்சருக்கு உதவி அத்தியட்சர்களாக 1877-இல் நியமித்தார். நியமனத்தில் கால்டுவெல் அத்தியட்சர் S. P. G சபைகளையும், சார்ஜெண்ட் அத்தியட்சர் C.M.S. சபைகளையும் கண்காணித்தனர். அக்காலத்து C. M. S, S. P. G. ஆகிய இருசபைகளுக்குள்ளும் ஐக்கிய நிலை இல்லை வேறுபட்ட கருத்தும், பகைமை உணர்ச்சியுமே காணப்பட்டது. இரு சபைகளின் மிஷனரிமார் மற்றப்பிராந்திய வழியில் கூடத் தம் குதிரையில் செல்லமாட்டார். C. M. S. காரர் குதிரை S. P. G காரர் புல்லைத்தின்றது என்று கூறிக்கொள்வர். இவ்வேறுபாடு சபை வளர்ச்சிக்கும் ஐக்கியத்திற்கும் பெரிய தடையாய் இருந்தது. இந்நிலைகண்ட ஜாண்சன் அத்தியட்சர் நெல்லை ஜில்லாவில் ஒரு அத்தியட்சரின் ஆளுகையைக் கொண்டுவர எண்ணினர். ஆனால் முன்கூறியபடி பார்லிமெண்ட் அதிகாரம் பெறுவது கூடாததாயிருந்தது. இந்நிலையில் சென்னை அத்தியட்சர் தமது அத்தியட்சாதினத்தின் ஒரு பங்கை மற்றொரு அத்தியட்சாதினமாக்க இசைந்தார். நெல்லைவாழ் குருக்களும் நியமனம் பெறும் அத்தியட்ச ஆளுகைக்குள் அடங்கியிருப்போம் என வாக்களித்தனர். இம்முடிவானது சாமுவேல் மார்லி என்பவரை 1896ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 28ஆம் நாள் சென்னை அத்தியட்சாலயத்தில் அத்தியட்சராக்கிற்று. நெல்லை அத்தியட்சாதினத்திற்கு அவர் வரும் போது அவரின் வயது 55 ஆகும். இவர் 1875 இல் இந்தியா வந்து 3 ஆண்டு செகந்தராபாத்தில் இராணுவ சேப்ளன் ஆகப் பணியாற்றி 1878-இல் சென்னை அத்தியட்சர் சேப்ளன் ஆகி 18 ஆண்டு நற்பணி புரிந்தவர் ஆவார். ஆகவே இவர் 21 ஆண்டுகள் இந்நாட்டு மக்களோடு அனுபவம் உடையவர். சென்னை அத்தியட்சரே அக்கால நெல்லைச்சபைக்கும் அத்தியட்சராக இருந்தமையால் சேப்ளன் ஆக இருந்தகாலத்தில் 18 ஆண்டு தமிழ் மக்கள்பால் அனுபவர் உடையவர்.

1898-ஆம் ஆண்டு பெப்ரவரி திங்களில் பாளையங்கோட்டை பரிசுத்த திருத்துவ ஆலயத்தில் தம் குருக்களைக்கூட்டிப் போதனை சுட்டளையாசச்சொற்பொழிவொன்று ஆற்றினர். அவர் நிகழ்த்திய உரையில் அக்காலசபை மக்களின் பண்பு முக்கவழக்கங்கள், பிடித்திருந்த தப்பறைக்கொள்கைகள் ஆகிய அத்தனையும் பதிந்து கிடத்தன. அன்று 90 குருக்கள் வருகை தந்தனர். அக்காலநெல்லை கிறிந்தவ மக்கள் தொகை சுமார் 60000 ஆகும். இவர் ஊழியம் ஏற்று 15 மாதங்களில் 4258 பேருக்குத்திடப்படுத்தல் கொடுத்தார். இந்நாட்டிலுள்ள மக்களுக்கு ஏற்ற ஆராதனை முறைமைகள் இது வரை ஏற்படுத்தப்படவில்லை

1899 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 11, 12, 13 ஆகிய நாட்களில் சர்ச் மிஷன் சங்க (C. M. S) நூற்றாண்டு உற்சவம் பாளையங்கோட்டையில் வெகுவிமரிசையாய் நடைபெற்றது. இச்சங்கம் 1799 ஆம் ஆண்டு ஏப்ரல் 12-ஆம் நாள் இலண்டன் மாநகரில் ஆரம்பமானது. நூற்றாண்டு விழாவுக்கு அன்று பரி. யோவான் நடுநிலைப் பள்ளியாக இருந்த இடத்தில் பெரிய பந்தல் ஒன்று அமைக்கப் பட்டது. அதன் நீளம் 210 அடி அகலம் 120 அடி உயரம் 15அடி ஆகும். கண்ணைக்கவரும் தோரணங்கள் பல பலநிறவிளக்குகள் பரவித்தொங்கின. 'கிறிஸ்துவுக்கு இந்தியா'' 'தேவனுக்கென்று பெரியகாரியங்களை முயற்சி'' ''தேவனிடத்திலிருந்து பெரிய காரியங்களை எதிர்நோக்கு,'' ''சிறுபிள்ளைகள் என்னிடத்தில் வருகிறதற்கு இடங்கொடுங்கள்''என்ற பல வாக்கியங்கள்பொருத்தப்பட்டிருந்தன. பந்தல் தூண்களில் சுவாட்ஸ், இரேனியஸ், பெட்டிட், டக்கர், ராக்லாண்டு, தாமஸ், சாப்டர், சார்ஜெண்ட் முதலிய மிஷனரிப் பெரியார்களின் பெயர்கள் எழுதப்பட்ட பலகைகள் தொங்கின. பந்தலின் மையத்தில் விக்டோரியா சக்கரவர்த்தினியின் படமும் இராஜவிருதுக்கொடியும் தொங்கவிடப்பட்டிருந்தன.

பாளையங்கோட்டை திருத்துவ ஆலயத்தில் திருவிருந்து ஆராதனைநடைபெற்றது. மகாகனம் மார்லி அத்தியட்சர் ஆங்கிலத்தில் பிரசங்கித்தார். தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. திருவிருந்தில் சேர்ந்தவர் 604 எனக்கணக்கிடப்பட்டது.

ஸ்தோத்திர ஆராதனைக்கு முன்கூடிய கூட்டத்தில் திருநெல்வேலி சபையார் சர்ச்மிஷன் சங்கக்கமிட்டியாருக்கு எழுதிய வாழ்த்து பத்திரம் அற்றைக் காலத்து சென்னை உயர நீதிமன்ற நீதித்தலைவர் சா. டேவிட் தேவதாஸ் அவர்களால் வாசித்தளிக்கப்பட்டது. அன்றைய நிகழ்ச்சியில் B.A. பட்டதாரிகள் 10 L. T., 4, B. L., 4, M. L. I ஆக 19 பேர் தம்பட்டத்து ஆடை

கனை அணிந்து நெல்லைச்சபைப் பிரதிநிதிகளாக எழுந்து நின்று காட்சியளித்தனர். இன்று நம் அத்தியட்சாதினத்தில் பட்டதாரியின் எண்ணிக்கை அளவிட கூடாதது என்பது நமது பெருமைக்குரியதாகும். வாசித்தப்பத்திரத்தைச் சந்தனப் பெட்டகத்தில் அடைத்து இங்கிலாந்துக்கு அனுப்பக் கனம் கார் ஐயரிடம் ஒப்புவித்தனர். பத்திரத்தின் உள்ளடக்கம் 1898-இல் சர்ச்மிஷன் சங்கத்தைச்சேர்ந்த கிராமங்கள் 1028, கோவில்கள் 1028 உபதேசிமார் 190. பள்ளி ஆசிரியர் 407, மாணவர்கள் 48225 இந்திய குருக்கள் 48 ஆகும்.

நூற்றாண்டு விழாவுக்கு மூன்றாண்டு முயற்சிகள் எடுக்கப்பட்டன. பல ஆராதனைகள் பல கூட்டங்கள் ஆயத்தமாக சபைகளில் நடத்தப்பட்டன. காணிக்கையின் ஒரு பங்கை இங்கிலாந்து C. M. S. சங்கத்தாருக்குத் தோத்திர காணிக்கையாக அனுப்பி வைத்தனர் மிஞ்சல் தொகை ரூ 35000ஐக்கொண்டு இன்று நம் கண்ணுக்குத் தோன்றும் நூற்றாண்டு மண்டபத்தைக் கட்டினர். அடிகல் நாட்டு விழாவுக்கு 60 குருக்கள் பவனி வர மகாகனம் அத்தியட்சர் அடிக்கல் நாட்டினர். விழாவுக்கு மதுரை அமெரிக்கன் மிஷனிலிருந்தும், நெல்லையின் கீழ்ப்பாகம் வளர்ந்திருந்த S. P. G. சபைப்பிரதிநிதிகளும் நெல்லைக்குத்தெற்கேயுள்ள இலண்டன்மிஷன் ஐரோப்பிய மிஷனரி பிரதிநிதிகளும் பங்குகொண்டனர். அன்று மக்கள் கொடுத்தக் காணிக்கை பெருமைக்குரியது. எல்லாசபைப் பிரதிநிதிகளும் சேர்ந்து விசுவாச அறிக்கை செய்தனர். பிற்றைக் கால சபை ஐக்கியத்திற்கு அன்றே வித்திடப்பட்டது.

நெல்லை அத்தியட்சாதீனம் இங்கிலாந்திலிருந்து 200000 ரூபாய் பெற்று வந்தது. மேலைநாட்டு சுவிசேஷ சங்கங்கள், பிற நாட்டுச் சபைகள் இன்னும் தாங்கள் ஆதரவைப்பெற்று வாழ வேண்டும் என்ற எண்ணம் நீங்கிச் சுய ஆதரவு பெறவேண்டும் என்ற எழுச்சியை உண்டாக்கிற்று. ஆகவே 1830-இல் ஒவ்வொரு கிறிஸ்தவக் குடும்பமும் ஒரு பணம் ( மூன்றணை நான்கு பைசா ) காணிக்கையாகக்கொடுக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. அதன்படி 1832-இல் வந்ததொகை ரூ 95/ ஆகும் ஆனால் தலைவர்களுக்குள் ஏற்பட்ட அபிப்பிராய பேதங்களால் இம்முயற்சி நின்று போயிற்று. ஆயினும் 1865-இல், இம்முயற்சி புத்துயிர் பெற்று ஆலயங்கள் பல கட்டப்பட்டன. C. M. S. ஹோம் காரியதரிசி ஹென்றிவென் என்ற பக்தர் உலகிலுள்ள எல்லா C. M. S. சபைகளும் சுய ஆதரவு பெற்று சுய ஆளுகை ஏற்பட எண்ணினார். சுய ஆதரிப்புக்குரிய கவுன்சில் ஸ்தாபிக்கப்பட்டது சுயபரிபாலனமே முடியாது என்று நம் நாடார் பலர் அநேக நியாயங்களைக்காட்டி

வாதாடினர். ஆயினும் கவுன்சில் ஏற்படுத்தப்பட்டது அக்காலத்தில் சுய ஆதரிப்புக்கு ஏற்பட்ட இடையூறுகள் பல. ஐரோப்பிய மிஷனரிகளும் இந்திய மக்களின் மீது நம்பிக்கையற்றிருந்து இம்முயற்சிக்கு எதிர்ப்புக் கொடுத்தனர். இடையூறுகள் மத்தியிலும் C. M. S. சபைகளில் காணிக்கைகள் விருத்தியடைந்தன.

| | தலைக்கு | ரு அ பை |
|---|---|---|
| 1876 - 81 | ,, | 0 - 3 — 10 |
| 1881 — 87 | ,, | 0—4 — 0 |
| 1888 — 93 | ,, | 0 - 4 — 2 |
| 1893 — 99 | ,, | 0—5 — 0 |

இது கொஞ்சம் வளர்ச்சிதான் என்னும் திருப்திகரமான வளர்ச்சியன்று. சுய ஆதரவு பெறவேண்டும் என்ற கருத்தை 75 ஆண்டுகளுக்கு முன்னமே கனம் ஹீபர் அத்தியட்சர் கூறியிருக்கிறார் என்பதும் இங்குக்குறிப்பிடத்தக்கதாகும்.

## இவர் காலத்தில் விசேஷ கிறிஸ்தவ தமிழர்கள்:-

இரட்சணிய யாத்ரிகம் பாடித்தந்த கிருஷ்ண பிள்ளையும் ஒருவர். இவர் ஒரு நெல்லைவாசி, என்பதில் நமக்கொரு தனிப் பெருமை உண்டு. பாலியத்தில் வைணவ மதத்தைச் சார்ந்தவர். தமிழில் பாண்டித்தியம் உடையவர். ஆரம்பத்தில் சாயர்புரம் S. P. G. கல்வி நிலையத்தில் தமிழ் வித்துவானாக பணியாற்றினார். அங்குள்ள மிஷனரி துரை சுக்ஸ்டபின் என்பாரின் நற்பண்புகளை இவர் வியந்து, கிறிஸ்துவையும், கிறிஸ்தவத்தின் உயரிய கொள்கைகளையும் ஆர்வத்துடன் ஆராய்ந்தார். கிறிஸ்தவ மதத்தைப்பற்றிச் சில சந்தேகங்களும் இவருக்கு உண்டு. ஆனால் டாக்டர் W. C. தனுக்கோடி ராஜூ இவரின் சந்தேகத்தை தெளிவுபடுத்த ஏசு சுவாமியைத் தம் இரட்சராக ஏற்றுக்கொண்டு தமது முப்பதாவது வயதில் திருமுழுக்குப்பெற்றார். அவர் திருநெல்வேலி C. M S. கல்லூரி, சென்னை பிரசிடென்சி கல்லூரி, திருவனந்தபுரம் மகாராஜா கல்லூரி ஆகிய இடங்களில் தமிழ் வித்துவான் ஆகப்பணிபுரிந்தார் இவர் இயற்றிய இரட்சணிய யாத்ரிகம் என்ற நூல் 1896 ஆம் ஆண்டு சென்னை கிறிஸ்தவ இலக்கிய சங்கத்தாரால் பிரசுரிக்கப் பட்டது. இந்நூல் எக்காலத்தும் எம்மதத்தினராலும் பெரிதும் பாராட்டப்பெற்று வருகிறது. இரட்சணிய மனோகரம், இரட்சணிய சமய நிர்ணயம் என்ற நூல்களையும் ஆக்கித்தந்தவர். இவர் 1900 ஆண்டு இறையடி சேர்ந்தார்.

**கனம் S. பால் ஐயர்:—**

இவர் நாசரேத்திற்கு அருகிலுள்ள பாட்டக்கரைகிராமம் கனம் தானியேல் பவுல் ஐயரின் மகன் ஆவார். 1840ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் பக்திமானும் சாதுரியப்பிரசங்கியுமாவார். இவர் கிராமப்பள்ளி பயின்று 12-வது வயதில் மெஞ்ஞான புரத்தில் கல்விகற்று தமது 17வது வயதில் பாளையங்கோட்டையில் உள்ள பிரப்பராண்டி கல்விச்சாலையில் மகாகனம் சார்ஜெண்ட் அத்தியட்சரிடம் வேதசாஸ்திரம் கற்றார் 1863-இல் உபாத்தியாயராகவும், உபதேசியாராகவும் பணியாற்றினார். பிரசங்கத்தில் வல்லுநர். 1865-இல் சென்னை சென்று கனம் W. T. சத்தியநாதன் ஐயரிடம் மூன்று ஆண்டு உபதேசியாராகப் பணிபுரிந்தார். சென்னையில் பள்ளி விசாரணை உபாத்தியாயராக 6 ஆண்டு செயலாற்றி 1876-இல் குருவானார். 1892-இல் சாட்சியாபுரம், வாகைக்குளம் ஆகிய இரண்டிற்கும் சர்க்கிள் குருவானார். இந்துக்கள் ஸ்தல யாத்திரை செய்து தத்தம் கடவுளை வழிபடுவது போன்று கிறித்தவர்களும் ஒன்று கூடி உற்சவம் நடத்த ஆர்வம் கொண்டு ஆலோசனை கூறினார். அதின் பயனால் 1891-இல் சாட்சியாபுரத்தில் தவச உற்சவப்பண்டிகை ஆரம்பிக்கப்பட்டது. இவ்வாரம்பம் நெல்லைப்பகுதியின் பல இடங்களில் தவச உற்சவம் நடத்த ஊக்கம் ஊட்டியது. இன்று நாம் அத்தியட்சாதீனத்தின் பல பாகங்களிலும் சிறப்புடையதோர் பண்டிகையாக இது நடைபெற்று வருகிறது. இவர் எழுதிய புத்தகங்கள் 18 மொழி பெயர்த்த நூற்கள் 29. ஆத்ம நேசரின் அம்மகத்துவம் என்ற பக்திநூல் இவரின் படைப்புகளில் ஒன்றும். இவரது திறமைகண்டு பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ராவ்சாகிப் என்ற பட்டம்கொடுத்து பெருமைப்படுத்தியது இப்பெரியார் 1900 ஆண்டு மார்ச் திங்கள் 11ஆம் நாள் இறையடி சேர்ந்தார்.

**கூலெவயின்சன் அம்மையார்:—**

இவர் இங்கிலாந்து நாட்டவர். பெருஞ்சீமாட்டி. இளமையில் ஒரு நடிகையாக விருப்பமுற்றிருந்தார். பெற்றோரின் விருப்பமும், தெய்வசித்தமும் அவரை ஒரு மிஷனரி ஆக்கிற்று. இவர் பஞ்சாபில் உள்ள அமிர்தசரஸ் என்ற நகரில் ஒரு பெண் கல்லூரியில் பணிபுரிந்து சுகவீனத்தின் காரணத்தால் இந்நாடு விட்டு இங்கிலாந்து சென்றார். பூரணசுகம் பெற்றபின் பாளையங்கோட்டை சாரா டக்கர் கல்லூரி ஆசிரியையாகப் பணி ஏற்றார். இவர் ஆசிரியப்பணியோடு, சமுதாய சேவையாகப்பெண்களுக்குத் தையல் கற்றுக்கொடுத்தார். கற்க வந்த பெண்களில் செவிட்டு ஊமைப்பெண் ஒன்று ஆகும். அவளிடத்து மிகவும் பரிவு

கொண்டார் கற்றுக் கொள்ளவரும் பெண்களுக்குக் கடவுள் உபதேசம் கொடுப்பார். அந்த ஊமைப்பெண் சில விஷயங்களை அறிந்தும் அறியாமலும் உபதேசத்தை ஆவலோடு கவனிப்பாள். கடவுள் செய்தியை இவள் பூரணமாக அறிந்து கொள்ள முயற்சித்தாள். இந்நிலையில் மீண்டும் மூன்று ஊமைப்பெண்கள் தையல் வகுப்பில் சேர்ந்தனர். அவரின் நலன் கருதிய அம்மையார் 1897-இல் ஒரு சிறு பள்ளியை ஆரம்பித்துப் படங்களையும் எழுத்துக்களையும் காட்டி விஷயங்களை அறிந்து கொள்ளக்கொடுத்தார். இது கண்டு பலர் இப்பள்ளியில் சேர்ந்தனர். ஒரு பங்களாவை வாடகைக்குப் பொருத்தி ஊமையரின் பள்ளியைச்சற்று விரிவாக்கினர். மாணவிகளின் தொகை பெருகவே இன்றைக்கு இருக்கும் பிளாரன்ஸ் சுவென்சன் செவிடர் பாடசாலையைப்பல கட்டங்களுடன் பெரிதாக்கி 1900-ஆம் ஆண்டு ஒரு கல்வி நிலையமாக்கினர். தம் பொருள் அத்தனையையும் அதற்கு அர்ப்பணித்தார். செவிடர்களுக்குக் கற்பிக்கும் பயிற்சி பெற்ற ஒரு ஆங்கில மாதுவை ஆசிரியையாக அமர்த்தினர். 1919-இல் இவர் இங்கிலாந்து சென்று தமது 94வது வயதில் காலமானர். இன்று இப்பள்ளி 1 முதல் 10 வகுப்பு வரை அரசு உதவியுடனும், K.N.H ஆதரவுடனும் உயரிய நிலையில் நடைபெற்று வருகிறது. கல்விப் பயிற்சி முடிந்த மாணவர்களுக்கு மூன்றாண்டு தொழிற் கல்வி அளிக்கப்படுகிறது. இன்றைய கணக்குப்படி 404 மாணவர்கள் பயில்கின்றனர். தொழிற்கல்வியில் 60 மாணவர்கள் உண்டு.

**S. P. G சங்கத்தின் இரண்டாவது நூற்றாண்டு :—**

இஃது மார்லி அத்தியட்சர் காலத்தில் இவர் நடத்திய இரண்டாவது நூற்றாண்டுப் பெருவிழாவாகும். இது 1901-ஆம் ஆண்டு பெப்ரவரித் திங்கள் 4-ஆம் நாள் திங்கட்கிழமை சாயர்புரத்தில் வெகுசிறப்பாய் நடைபெற்றது. தோத்திர ஆராதனைக்கு வந்த மக்கள் 1500 பேர். திருவிருந்தில் பங்கெடுத்தவர் 485 ஆகும். பந்தலில் கூடியவர்கள் சுமார் 3000 எனக் கணக்கிடப்பட்டுள்ளது. பல இடங்களில் இருந்தும் மக்கள் கட்டை வண்டிகளில் வந்து இறங்கினர். பிள்ளைகள் ஆராதனையில் 1000 பேர் வந்திருந்தனர். மகாகனம் சாமுவேல் மார்லி அத்தியட்சர் வருகைதந்து கூட்டங்கள் நடத்தித்தந்தார். நாசரேத் கனம் W. பெரியநாயகம் ஐயர், சென்னை V. ஞானமுத்து ஐயர் ஆகியோர் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். C. M. S கனம் E. S. கார் ஐயர். கனம் J ஹாரிஸ் ஐயர் கூட்டத்தில் பங்கெடுத்துக் கூட்டத்தைச் சிறப்பித்தனர் சாயர்புரத்தில் கல்விகற்ற பழைய மாணவராகிய திவான்பகதூர் A. S. அப்பாசாமிப் சிறப்புரையாற்றினர். 1701 முதல் 1901 வரை

உள்ள S. P. G. சங்கத்தின் சரித்திரம் ஆங்கிலத்தில் வெளியாயிற்று. அதில் சாயர்புரத்தில் நடந்த இருநூற்றாண்டு விழா வெகுவாய் விவரிக்கப்பட்டுள்ளது. அங்கு நிகழ்ந்த உற்சவம் பண்டைய கூடாரப் பண்டிகையை ஒத்ததாகும். 1901ம் ஆண்டு பெப்ருவரித் திங்கள் 4ம் நாள் திங்கள்கிழமையாகும். மக்கள் விழாவுக்கு நடந்தும், கட்டை வண்டிகள் ஏறியும் பெருங்கூட்டமாக வந்து கூடினர். தூரத்தில் இருந்து வந்தவர்கள் வெள்ளிக்கிழமையில் புறப்பட்டு ஞாயிற்றுக்கிழமையில் பிரயாணம் செய்யாது தங்கித் திங்கட்கிழமையில் வந்து சேர்ந்தனர். ஓய்வு நாளில் பிரயாணம் செய்யாத ஒரு நிலை மக்கட்குள் இருந்ததாகத் தெரிகிறது. நாசரேத்தில் இருந்து 400 பேர் கால் நடையாய் வந்தனர். விழாவில் பங்கெடுத்தவர்கள் 5000 பேர் எனக் கூறப்படுகிறது. 20 இந்திய குருக்கள் 8 ஆங்கிலேய குருக்கள் கலந்து கொண்டனர். இவ்விழா வினைப்பற்றிக் கனம் ஜென்றிவிளேர் டோனுல்ட்ஸன் என்பவர் "சாயர்புரத்தில் விழாவுக்குக் கூடின மக்கள் விசேஷ பண்பு பொருந்தியவர்கள்" எனக் கூறுகிருர். இங்கிலாந்து தேசத்தில் ஆலயங்கள் பல. அதில் கூடும் மக்களில் பெண்களே அதிகம். ஆனால் இங்கு ஆண்களே பலர் வந்தனர் எனப்பெருமைப்படக் கூறுகிருர். அநேக தப்பறைக் கொள்கைகளும், விகற்பமான சடங்காசாரங்களும் நிறைந்த இந்திய நாட்டிலே திருச்சபை செழித்திருப்பதும் அதின் ஜீவியம் ஒரு தனிச்சிறப்புடையதாய் இருப்பதும் கவனிக்கத் தக்கதாகும். கிறிஸ்தவத்தால் சிலாக்கியம் பெற்ற இந்த திருச்சபை மக்கள் அதனைத் தங்களுடையதாக மட்டும் வைத்துக் கொள்ளாது பிறரும் இதனை அனுபவிக்க சுவிசேஷ வாஞ்சையோடிருப்பது போற்றற்குரியதாகும் எனவும் கூறினர்.

## இந்திய மிஷனெரி சங்கம்

நெல்லை திருச்சபை மக்கள் கொண்ட சுவிசேஷ வாஞ்சை 1903ம் ஆண்டு பெப்ருவரி மீ 12ம் நாள் இந்திய மிஷனெரி சங்கத்தைத் தோற்றுவித்தது. இதற்கு ஊக்கம் காட்டியவர் மகாகனம் மார்லி அத்தியட்ச ரென்ருல் மிகையாகது. திவான்பகதூர் A. S. அப்பாசாமி சங்கத்தலைவராக்கப்பட்டுத்தமது ஆயுள் முழுவதும் அப்பணியினைச் செய்து வந்தார். திரு V. S. அசரியா சங்கக் காரியதரிசி. அவ்வாண்டிலே சங்கத்திற்கு வசூலான தொகை ரூ. 1287 என்ருல் மக்களின் சுவிசேஷ வாஞ்சை தான் என்னே என்பது காணக் கிடக்கிறது. 1904ம் ஆண்டு மருதகுளம் S. பாக்கியநாதன், முதல் மிஷனெரியாகத் தோரணக்கல்லுக்கு அனுப்பப்பட்டார். 1906ம் ஆண்டில் 33 பேர் ஞானஸ்தானம்

பெற்றனர். ஞானஸ்நானம் கொடுத்தவர் சென்னை அத்தியச்சர் மகாகனம் ஒயிட்கேட் என்பார் திரு V. S அசரியா Y. M. C. A ஊழியத்தை விட்டு 1903ம் ஆண்டு தாமுமொடு மிஷனெரியாகச் சென்றார். ஆரம்பகாலத்தில் நிஜாம் நாட்டில் ஊழியத்தடை உண்டு. கோவில், பள்ளிக்கூடம் இவைகள் கட்ட நிலம் வாங்குவது கூடக்கஷ்டமாயிருந்தது. கஷ்டங்கள் மத்தியிலும் சபை வளர்ந்தது. திரு V S. அசரியா 1912 ஆண்டில் இதின் அத்தியச்சரானார் 1939ம் ஆண்டு தோர்ணக்கல் அத்தியச்சாலயம் கட்டப்பட்டுப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. பிரதிஷ்டையின் போது நிஜாம் தமது கஜனாவில் இருந்து ரூபாய் மூவாயிரத்திற்கு ஒரு காசோலை அனுப்பி வைத்தார் என்றால் ஊழியர்களின் சேவை நிஜாமை எட்டியதெனலாம்.

இன்றைய பதின்காவது பொதுச்செயலர் மறை திரு ஜேசன் தர்மராஜ். முந்தியவர்கள் தத்தம் காலத்தில் சீரிய பணியாற்றியவர்களே. அதில் சாலச்சிறந்தவர்கள் மறைந்த மறை திரு V. ஜோசப் ஆபிரகாம், மறை திரு S. T பால்ஞானையா, மறை திரு E. P. ஞான சிகாமணி ஆவர். கனம் V ஜோசப் ஆபிரகாம் ஐயர் ஒரு பட்டாதாரி பிரசங்கத்தில் வல்லுனர், பலகிளைச்சங்கங்களை ஆங்காங்கு ஸ்தாபித்து வருவாயைப் பெருக்கியவர். இவரது திட்டங்களைத் தீவிரமாக்கியவர்கள் கனம் S T பால்ஞானையா அவர்களும் கனம் E. P. ஞானசிகாமணி ஐயரவர்களுமாவர். நிற்க வேறு நற்பணிகளையும் இவ்விருவரும் ஆக்கிக் கொடுத்தவராவர் சங்கப் பொன்விழாவைக் கனம் V. ஜோசப் ஐயாவர்களும், 60ம் ஆண்டு நிறை விழாவைக் கனம் S. T. பால்ஞானையா ஐயரும் மகாகனம் அசரியா அத்தியச்சரின் நூற்றாண்டு விழாவைக் கனம் E. P. ஞான சிகாமணி ஐயரும் திறம்பட நடத்திக்காட்டிய பெருமை கொண்டவர்கள்.

**கனம் மார்லி அத்தியச்சரின் தனிச்சிறப்புகள்:**

இவரது 7 ஆண்டு கால சேவையில் நெல்லை திருச்சபை மக்கள் அவரின் அன்புக்குரியவரானார்கள். ஏழை என்றும் பணக்காரரென்றும் பாகுபடுத்தாது அவர்கள் வீடு சென்று ஏற்படும் பிரச்சனைகளைத் தீர்த்து வைப்பவர் 26 புதிய ஆலயங்கள் இவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டன. இவர் அக்காலக் கிறிஸ்தவ மக்களிடம் காணப்பட்ட நாள் பார்த்தல், சகுனம், ஜோசியம் பார்த்தல் இவற்றைக் கண்டித்துணர்த்தினார். சீதனம் வாங்குதல் கல்யாணத்தில் ஆடம்பரச் செலவுகள் செய்தல் இவற்றையும் கண்டித்து நல்லாலோசனை கூறிவந்தார். ஜாதித்துவேஷம், குடி இவற்றையும் கண்டித்தார்.

கனம் மார்லி அத்தியச்சர் தம் பணியினின்று ஓய்வெடுக்க விரும்பினார். இது கேட்டு மக்கள் கவலைகொண்டனர். சென்னை அத்தியட்சர் மகாகனம் ஒயிட்கெட் ஆங்கில தேசம் சென்றமையால் கமிஷனியாக இருந்த ஆர்ட்டீக்கன் கனம் உல்லிம்ஸ் மகாகனம் அத்தியச்சரிடமிருந்து சார்ஜை வாங்கச் சென்னையிலிருந்து பாளையங் கோட்டைக்கு வந்தார். 1903 ஆம் ஆண்டு அக்டோபர் 23ம் நாள் பிரிவு உபசாரம் அளிக்கப்பட்டது. பிரிவு உபசார விழாவுக்கு 75 குருக்களும் மற்றும் உபாத்திமார் உபதேசிமார்களும் வந்திருந்தனர். அன்று காலை 8மணிக்குத்திருத்துவ ஆலயத்தில் திருவிருந்தாராதனை நடைபெற்றது. ஆர்ச்டீக்கன் கனம் உல்லியம்ஸ் தமிழில் ஆராதனை நடத்தினார். இவர் தமிழ் பேச்சுத் திறமையுடையவர். அத்தியச்சர் 1 கொரிந்தியர் 2ம் அதி. 2ம் வசனத்தின் பேரில் பிரசங்கித்தார். கனம் ஞானக்கண் ஐயர் மொழி பெயர்த்தார். ஆராதனை முடிந்த பின் இந்திய, ஆங்கில குருக்கள் அனைவர்க்கும் அத்தியட்சர் வீட்டில் காலை ஆகாரம் கொடுக்கப்பட்டது, மாலை 4-30 மணிக்குப் பூரணமாய் கட்டுமான வேலை முடியாத நூற்றுண்டு மண்டபத்தில் பிரிவு உபசார விழா நடைபெற்றது. சுமார் 2000 கிறிஸ்தவர்கள் வந்தனர் ஆர்ச்டீக்கன் தலைமை தாங்கினார். கனோன் மர்காஷிஸ் ஐயரால் பிரிவு உபசாரப்பத்திரம் படிக்கப்பட்டது. பி. ஆர். அன் சன்ஸ் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்ட அழகிய வெள்ளிக்கோப்பை ஞாபகச்சின்னமாகக் கொடுக்கப்பட்டது. வருகை தந்திருந்த கனம் மர்சாஷிஸ் ஐயர். திரு அப்பாசாமிபிள்ளை, கனம் கெம்பர் ஐயர், கனம் ஞானக்கண்ஐயர் ஆகியவர்கள் அத்தியச்சரின் பண்புகளைச் சிலாகித்துப் பேசினார்கள். கூட்ட முடிவில் கனம் ஆர்டில் பங்களாவில் தேனீர் விருந்தளிக்கப்பட்டது. விழா முடிவடைந்தது.

——

# வில்லியம் அந்தியச்சர்

## இவரது ஆட்சிக் காலம் 1905 — 1914 ஆகும்.

இவர் அத்தியச்சராகுமுன் செல்லீன பரி. ஜியார்ஜ் அத்தியச் சாலயத்தில் ஆர்ச் டீக்கனாக இருந்து நிறைந்த அனுபவம் பெற்ற வர். இவரில்லாது அத்தியச்சாதீனத்தில் யாதொரு நிர்வாகமும் நடைபெறாது. இத்தகைய மதிப்புக்குரியவராயினும் தற்பெருமை யற்றவர். குழந்தை உள்ளம் படைத்தவர். ஆடம்பர வாழ்க் கையை விரும்பாதவர். நிர்வாகத்தில் தன் அதிகாரம் வேண்டு மென்று விரும்பாதவர். ஆனால் இவரது உயரிய பண்புக்கு மாறாக C. M. S., S. P. G. குருக்கள்மார் அதிகாரத் தன்மையிலே காணப் பட்டனர். இவர் ஆர்ச்டீக்கனாக இருந்த காரணத்தால் கிடைத்த உபகாரச் சம்பளத்தையும் அத்தியச்சராகப் பெற்ற ஊதியத்தையும் தமக்கென்று சேமித்து வைக்காது ஈகைப் பெரியாராகக் காணப் பட்டனர். மாணவ மாணவிகளுக்குக் கல்விக்கென்று பெருந் தொகை கொடுத்தவர். இவரது ஈகையால் உயர்வுற்றோர் பலர். குருமாரின் குடும்பத்திடத்தும் அவர்கள் பிள்ளைகளிடத்தும் அலாதி அன்பும் அனுதாபமும் கொண்டவர். பிறர் தேவையைத் தம் தேவையெனக் கருதி வாரி இறைத்து மக்களின் முன்னேற்றங் கண்டு மகிழ்பவர்.

1905ம் ஆண்டு ஜூலைத் திங்கள் அவரது திருமண வெள்ளி விழா வந்தது. அவர் இந்தியாவுக்கு வந்து 30 ஆண்டுகள் நிறைவு பெற்றிருந்தது. தம் திருமண வெள்ளிவிழாவை வெகு சிறப் பாகக்கொண்டாடினார். பாளையங்கோட்டை திருத்துவ ஆலயத்தில் அன்று ஒரு தோத்திர ஆராதனை நடைபெற்றது. அவ்வாராதனையில் அத்தியச்சரின் தனிச் சிறந்த நண்பரும் அவரின் பரீட்சகக் குருவு மான கனம் P. G. சிமியோன் ஐயரவர்கள் I கொரிந்தியர் 12, அதி. 28b. வசனத்தின் பேரில் பிரசங்கம் செய்தனர். அவ்வாராதனை அத்தியட்சர் அபிசேக ஆராதனை போல் நடைபெற்றது. இருசபை (C. M. S. S. P. G.) குருக்கள்மாரும் பங்கெடுத்தனர். இவ்விரு பிரிவினரும் ஒன்று சேர்ந்து பங்கெடுத்த முதல் சம்பவம் இதுவே. வந்தவர்களுக்கு விளையாட்டுண்டு. தேனீர்ப்பானம் மாலையில் கொடுக்கப்பட்டது. இவ்வைபவத்திற்கு ரூ. 1000 செலவு செய்தார். இதன் உட்கருத்து பிறரை மகிழ்விக்க வேண்டுமென்பதே.

C. M. S. சபையில் குரு அபிஷேகங்களும், திடப்படுத்தலும், ஆலயப் பிரதிஷ்டைகளும் மட்டுமே செய்ய இவருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. வேறு எந்தவித அதிகாரமும், இச்சபை



அருள்பெருந்திரு
ஆர்தர் A. வில்லியம்ஸ்
1905—1914

யில் இல்லாதது அதிக வருத்தத்தைக் கொடுத்தது. தனது அத்தி யட்ச ஆளுகையில் செயலில் இருந்த பல நிபந்தனைகளும் கட்டுப் பாடுகளும் இவரை வருத்தின. இது சுவிசேஷ ஊழியத்தில் ஒரு மந்த நிலையை உருவாக்கிற்று. இரட்சாபெருமானின் சுவிசேஷத்தை எங்கும் அறிவித்து அவரின் இராஜ்யத்தை முன்னேற்றுவதே S.P.G. C. M. S. ஆகிய இரு சபைகளின் இலட்சியம் ஆனால் இதை மறந்து C. M. S. சபையார் வேத ஆதாரத்தையும் சுவிசேஷ பிர சங்கத்தையும் மட்டும் வற்புறுத்தினர். S.P.G. சங்கத்தார் கொள்கை முறையான ஆராதனைகளையும், 39 வேதசித்தாந்தப் பிரமாணங் களில் அடங்கிய திருச்சபை கொள்கைகளையும் முக்கியப்படுத்தி வந்தனர். நிற்க இரு சபைகளின் தலைவர்களும் வேறுபட்ட மன நோக்குடையவர்களே. S. P. G. மிஷனெரிமார்கள் பாளையங்கோட் டையில் C. M. S. மிஷனெரிமார்களின் பங்களாவில் தங்குவார்கள். ஆனால் ஆலயத்திற்குள் வரார். இதுபோன்றே C. M. S. சங்கமிஷ னெரிமார்களும். இந்நிலை திருநெல்வேலி திருச்சபை வளருவதற்குப் பங்கமிழைத்தது

இந்நிலை நீடிக்க விரும்பாத அத்தியட்சர் 1908இல் ஒரு முயற்சி எடுத்தார். இரு சங்கங்களின் தலைவர்களையும் ஒரு சங்கமாகக் கூட்டச்செய்து சபைகளின் பொதுநலத்துக்கடுத்த விஷயங்களை ஆலோசிக்க விருப்பமுற்றிருந்தார். மக்களும் இவ்வைக்கியத்தை விரும்பினர். இந்நிலையில் மகாகனம் மெற்றிராபாலிட்டன் பாளையங் கோட்டைக்கு வருகை தந்திருந்தனர். இவர் முன் ஒரு முடிவெடுக்க 1908ம் ஆண்டு ஜனுவரித் திங்கள் 28ம் நாள் செவ்வாய்க்கிழமை நூற்றுண்டு மண்டபத்தில் கூட்டம் நடைபெற்றது. ஏற்கனவே இந்நோக்கத்தை தெரியக்காட்ட கனம் A. S. அப்பாசாமி, கனம் C. P ஞானக்கண் ஐயரவர்கள், கனம் P. G சிமியோன் ஐயரவர் கள் கையொப்பமிட்ட விளம்பரம் ஒன்று யாவருக்கும் கொடுக்கப் பட்டது. அநேகர் வந்திருந்தனர்

மகாகனம் உல்லியம் அத்தியச்சர் கூட்டத்தலைவர் கனம் C. P. ஞானக்கண் ஐயர் ஜெபிக்கக் கூட்டம் ஆரம்பமானது. கனம் P.G. சிமியோன் கூட்டக் கருப்பொருளாகிய ஐக்கியத்தைப் பற்றிப் பேசினார் வருகை தந்திருந்த கனம் மெற்றிரா பாலிட்டனும் இந்நோக்கத்திற்கு இசைந்தார். நம் அத்தியச்சர் உற்சாகங் கொண்டு 'கர்த்தாவே எங்களெல்லாரையும் ஒன்றாக்கியருளும்' என்று ஒவ்வொரு நாளும் ஜெபிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

பின்வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1) சபைகள் ஐக்கியப்படுவது தேவ நாமத்திற்கு மகிமையும் சபை வளர்ச்சிக்கு அனுகூலமானதாகும்.

2) இவ்வாரம்ப ஐக்கியம் வளர்வடைய குறைந்தது ஆண்டுக்கு ஒரு முறையாகிலும் ஐக்கிய சம்பந்தக் கூட்டம் கூட வேண்டும்.

3) அத்தியச்சரே தலைவர். சபை கனதனவான்கள் அங்கத்தினர்கள். தேவை ஏற்படின் அங்கத்தினர்களைக் கூட்டிச் **சேர்க்கலாம்.**

இத்தீர்மானப்படி 30 அங்கத்தினர் கொண்ட ஒரு குழு உருவானது. அவர்களின் தீர்மானப்படி 1908ம் ஆண்டு ஏப்பிரல் 2ம் நாள் முதற் கூட்டம் பாளையங்கோட்டையில் நடைபெற்றது. திருவிருந்தாராதனையில் மகாகனம் உல்லியம் அத்தியட்சர் பரி. யோ. 17ம் அதி. 21ம் வசனத்தை ஆதாரமாகக்கொண்டு ஐக்கியம் பற்றித் தெளிவுபடப் பேசினர்.

கூட்டத் தீர்மானங்கள் :-

1) அத்தியச்சாதீன மெங்கும் பொதுவான ஜெபபுத்தகம் தமிழாக்கம் செய்யப்பட்டு உபயோகத்தில் இருக்க வேண்டும்.

2) இரு மிஷன்களிலுமுள்ள (S. P. G. C. M. S.) குருக்களில் C. M, S, இல் உள்ளவர்கள் S. P G. சபைகளிலும் S. P. G. சபையிலுள்ளவர்கள் C. M. S. சபைகளிலும் சென்று ஆலய ஆராதனைகளில் பங்கெடுத்துப் பிரசங்கிக்க வேண்டும்,

3) அத்தியச்சாதீன முழுமையிலுள்ள கிறித்தவப் பிள்ளைகளுக்கு ஆரம்பக்கல்வி கற்றுக் கொடுக்கப்பட வேண்டும் இரவுப்பாடசாலைகள் நடத்தப்பட வேண்டும்.

4) யாவரும் இந்திய மிஷனெரி சங்கத்தை ஆதரிக்க வேண்டும்

5) சபையார் சுவிசேஷப் பிரசங்கங்கள் செய்ய வேண்டும். தன்னார்வ சுவிசேஷ பிரசங்கக் குழுக்கள் உருவாக வேண்டும்.

6) அத்தியச்ச சரக சங்கம் ஸ்தாபிக்கப்படுவதின் அவசியத்தை அத்தியச்சர் யோசிக்கக் கேட்டல்.

7) அத்தியச்சாதீனத்தின் ஒழுங்கின் ஆதரவுக்குட்பட்டு கிறித்தவரின் உபயோகத்திற்கு ஒரு பத்திரிகை நடத்தப்படவேண்டும்.

இக்கூட்டத்தில் கனம் V. S. அசரியா அத்தியச்சர் தாம் கண்ட ஜப்பானிய திருச்சபையைப் பற்றி ஒரு கட்டுரை வாசித்தார். கட்டுரை இறுதியில் நமது நாட்டில் அத்தியச்சர்ஆளுகை இல்லாத பிரஸ்பிற்றீரிய சபைகள் தம் ஐக்கியத்தில் இந்திய பிரிஸ்பிற்றீரிய சபையாகவும், சபை ஆளுகைச் சபைகள் (Congregationalists) தென் இந்தியாவின் சபை ஆளுகைச்சபை என ஐக்கியப் பட்டிருக்க ஒரே சபை ஆளுகையும், ஒரே வேதசித்தாந்தங்களையும் கொண்டிருக்கும் C. M. S. S. P. G. ஆகிய இரு சபைகளும் ஐக்கியப் படாமலிருப்பது விசனத்திற்குரியதெனக் கூறினார். இவ்விரு சபைகளும் என்று ஒருமைப்பட்டு 'இந்துதேச திருச்சபை' என்று அழைக்கப்படுமோ என்று ஏங்கிக் கூறினார்: என்றாவது ஒருநாள் ஐக்கியப்பட்டு அச்சபை இந்திய அத்தியச்சாதீன திருச்சபை என்றழைக்கப்படும் என்று தீர்க்கமாகக் கூறினார். அவ்வைக்கிய சபை இந்தியர்களும் ஐரோப்பியர்களும்சேர்ந்த சபையாய் விளங்கும். அதில் வேதசித்தாந்தங்களும், ஒழுங்குகளும், சிட்சை விதிகளும் இங்கிலாந்து திருச்சபைக்கு ஒத்திருப்பினும் இந்நாட்டுக்கேற்ப சித்தாந்தங்களும், ஒழுங்குகளும் மாறுபட்டே இருக்கும். இச்சபை விசாரணையில் அத்தியச்சரும் குருக்களும் சபைப் பிரதிநிதிகளும் கொண்ட சினட் சபை ஒன்றிருக்கும். அத்தியட்சர் ஐரோப்பியராகவும் காலமாற்றத்தில் சுதேசியாகவும் இருக்கலாம். எந்நாட்டினர் அத்தியச்சரோ அவரின் கீழ் இந்தியன் என்றோ மேல் நாட்டினரென்றோ இல்லாது கட்டுப்பட்டிருப்பார்கள். சபை சுய ஆதரவு பெற்றிருக்கும் என்று தீர்க்கதரிசனமாகக் கூறினார். மேலும் உருவாகும் புதிய சபை மிஷனெரி சபையாகவும் இருக்கும். அது எங்கும் திரிந்து, ஏன்? கடல் கடந்து கூட சுவிஷேசத்தைப் பரப்பும்'' என்று பெருமைப் படக் கூறினார்.

கனம் P. G. சிமியோனும் கனம் G. H. லாம்ப் ஐயரும் சங்கத்தின் கௌரவச் செயலர்கள். இவ் வைக்கிய ஆரம்பம் 17 ஆண்டுகளுக்குப் பின் திருநெல்வேலி அத்தியச் சாதீனமாகும் நிலைக்கு உயர்த்திற்று. இப் பெருமை அன்று வித்திட்ட நம் அத்தியட்சர் கனம் வில்லியம் அவர்களையே சாரும்.

இவர் பிரசங்கிப்பதில் சமர்த்தர். பிரசங்கங்கள் ஆழ்ந்த கருத்துக் கொண்டவை. அவரது பிரசங்க நடையும் சொற்களும் ஈர்ப்புடையவை. அவரின் தொனியும் பொருளும் மக்கள் உள்ளத்தைக் கவரும். இவர் ஒரு சிறந்த பக்தர். இவரது திறமை 1910ம் ஆண்டு சென்னை சர்வகலாசாலை கழகத்தின் பட்டமளிப்பு விழாவில் பிரசங்கிக்கும் வாய்ப்பை உருவாக்கிற்று. அத்தியட்சரின் மனைவி பற்றி ஒரு சுருக்கம். அம்மையார் தெய்வ பத்தி மிகுந்தவர்.

பெருஞ் சிமாட்டி. அத்தியட்சரின் ஈகைக்கு இவரது செல்வமே ஈடு செய்தது. சுகக் குறைவின் நிமித்தம் வீட்டிலே தான் இருப்பார். அமைதியான வாழ்க்கை உண்டு.

**கண் தெரியாதார் பள்ளி:-**

1888ம் ஆண்டு A. J. ஆஸ்குவித் என்னும் ஆங்கில அம்மையார், சாரான் தக்கர் கல்லூரித்தலைவி. ஒரு நாள் ஒரு குருட்டுப்பையன் அம்மையிடம் வந்தான். அவன் மீது பரிவு கொண்டு அவனுக்குக்கல்வி கற்றுக்கொடுக்க விரும்பினர். கண் தெரிந்த பிள்ளைகளோடு சேர்த்து கற்றும் கொடுத்தார். 1888இல் வகுப்பு ஆரம்பமாயிற்றெனலாம். மாணவரின் வருகை கூடிற்று ஆகவே ஒரு வகுப்பறையாக 1890இல் வளர்ந்தது. அரசு அங்கீகாரமும் கிடைத்தது. இவர் (Moom) மூம் முறையில் கல்வி பயிற்றுவித்தார். (Taylor Frame) டெய்லர் பிரேம் என்ற குருத்தொகைச் சட்டத்தை துணைக்கருவியாகக் கொண்டு கணிதம் கற்பித்தார். பிறபாடங்கள் வாய்மொழியாய் கற்றுக்கொடுக்கப்பட்டது. தொகை பெருக ஆண்களுக்கான வகுப்பு வெளியே ஒரு வாடகைக்கட்டிடத்திலும் பெண்களுக்குக் கலாசாலை உள்ளேயும் தனித்தனியாக நடைபெற்றன. பின்னர் பண்ணைவிளையில் ஒரு கிளை ஆரம்பிக்கப்பட்டது. 1900இல் இப்பள்ளி சாரான் தக்கர் கலாசாலையின் ஒரு பகுதியாயிராது தனி ஒரு ஸ்தாபனமாக விளங்க அம்மையார் விரும்பினர். தற்போது இருக்கும் பள்ளியின் நிலமானது வாங்கப்பட்டு 1908இல் முதல் கட்டிடம் கட்டி முடிக்கப்பட்டது 1910இல் சகல ஒழுங்குகளும் பூரணமாக முடிவுபெற்றது பண்ணைவிளையிலுள்ள கிளைப்பாடசாலை மூடப்பட்டு இத்துடன் இணைக்கப்பட்டது. ஆரம்பத்தில் மூன்று வகுப்புகள் மட்டுமே இருந்தன. இரு பாலரும் ஒன்றுகக்கல்வி கற்றனர். தங்குவது தனிஇடமே. பள்ளி ஐந்து வகுப்புடையதாயிற்று. C. M. S. சங்கத்தாரே இதை ஆதரித்தனர். அரசுமானியமும் கிடைத்தது. தற்போது விருத்தியடைந்து 405 மாணவமாணவியரைக் கொண்டுள்ளது. மாணவர்களுக்கு அறிவுப் பாடங்கள், தொழிற்பயிற்சி கொடுக்கப்படுகிறது தேறிய மாணவன் நெசவு கைத்தொழிற் சாலையில் பணிபுரிகிறுன். மூத்தூர் என்னுமிடத்தில் கண்தெரியாதார் புனர் வாழ்வு நிலையம் அமைக்கப்பட்டுள்ளது பெப்ருவரித் திங்கள் 24ம் நாளைக் கபோதகர் ஞாயிருக அத்தியட்சாதீனம் கொண்டாடுகிறது. கனம் வில்லியம் அத்தியட்சர் இப்பள்ளிக்கு ஆதரவு கொடுத்து வளர்த்தார் எனலாம்.

அத்தியட்சர் காலம் அடங்கிய 1912ம் ஆண்டு அத்தியட்சர் அசரியாவின் பட்டாபிசேகம் நடைபெற்றது. இவர் 1874ம் ஆண்டு ஆகஸ்டு மீ 17ம் நாள் வெள்ளாளன் விளையில் கனம்

வேதநாயகம் ஐயரவர்களுக்குப் பிறந்தார். இவரின் பெற்றோருக்கு நீண்ட காலம் மகப்பேறு இல்லை. ஜெல் அத்தியட்சர் இக்குறை கண்டு அம்மையாரைப்பார்த்து உமக்கொரு ஆண் மகன் பிறப்பான் என்றார். மகன் அசரியா பிறந்தார். அருகில் உள்ள மெஞ்ஞானபுரத்தில் மெட்ரிக்குலேஷன் பரீட்சையில் முதல்வராகத் தேறினர். கனம் பார்ட்டன் ஐயர் ஒரு மிஷனெரி பிரசங்கம் செய்து முடித்து, அங்குள்ளவர்களைப்பார்த்து யார் மிஷனெரியாகப்போக விருப்பம் என்றார். அன்றய மாணவனாகிய அசரியா, தான் செல்ல விருப்பமிருந்தும் செல்ல இயலாத நிலையில் அவ்வூழியத்திற்குத் தன் கை காப்புக்களையும் கால் தண்டைகளையும் காணிக்கையாகக் கொடுத்தார்.

C. M கல்லூரியில் F. A. கற்கும் பொழுது (Christian Brotherhood Association) கிறித்தவ சகோதரக்கழகம் என்ற மன்றினை ஆரம்பித்தார். அக்கழகம் ஜீவதண்ணீர் என்ற பத்திரிகையைப்பிரசுரித்தது. இன்று இல்லாது போயிற்று.

இவர் பாளையங்கோட்டை C. M. S. ஹைஸ்கூலில் ஆசிரியப் பணியாற்றினர். B. A. பட்டதாரியாக முயற்சித்தார். சுகவீனம் காரணமாக முடியாது போயிற்று. சென்னை (YMCA) வாலிப கிறிஸ்தவ சங்கக்காரியதரிசியானர். பின் இந்தியா முழுமைக்கும் (Associate) இணைக்காரியதரிசியானர். பின் (Student Volunteer Movement) மாணவத்தன்னார்வ தொண்டர் இயக்கத்திற்குக்காரிய தரிசியும், உலக மாணவ கூட்டணிக்கு (World's Student Federation) உபதலைவராகவும் சிறப்புப்பணியாற்றினர்.

1903ம் ஆண்டு இந்திய மிஷனெரி சங்கம் ஏற்படுவதற்குச் சிரத்தை எடுத்தவர். பின்னர் அதின் காரியதரிசியானர். திருநெல்வேலி சபை சம்பந்தமான பல கமிட்டிகளில் அங்கம் வகித்தார். 1905இல் நேசனல் மிஷனெரி சங்கத்தின் செயலரானர். இவர் தோர்ணக்கல்லுக்கு இந்திய மிஷனெரி சங்க மிஷனெரியாகச் சென்றார். இவர் ஜப்பான், இங்கிலாந்து ஸ்காட்லாந்து, பலஸ்தீன முதலிய நாடுகள் சென்று வந்தவர். இவர் எழுதிய நூல்கள் பல. இவரது மனைவியார் ஊழியத்திற்கு உறுதுணையாயிருந்தவர் மாதர் ஐக்கிய கூட்டத்திற்கு இந்திய காரியதரிசி. கனம் அசரியா ஐயருக்குக் கிடைத்த நிறைந்த அனுபவமும் அறிவும் அவரைத்தோர்ணக்கல் அத்தியட்சராக்கிற்று இவர் அங்கு இந்திய கலைமுறையில் அத்தியசசாலயத்தைக்கட்டிவைத்துள்ளார். 'தமிழ்ச் சபைத்தீபிகை' என்றமாதப்பத்திரிகையை ஆரம்பித்து நடத்தியவர்

**கனம் உவாக்கர் ஐயர்:-**

இவர் கேம்பிரிட்ஜ் கலாசாலேயில் கணக்குப்பரீட்சையில் முதல் வகுப்பில் தேறியவர். இந்துக்களுக்குள் நல்லதொரு சுவிசேஷகன் வேண்டுமென்று திருநெல்வேலி சபையார் C. M. S சங்கத்தாரைக் கேட்க அவர்கள் திறமை வாய்ந்த கனம் உவாக்கர் ஐயரை நெல்லேக்கு மிஷனெரியாக அனுப்பிஞர்கள். இவர் தமிழில் பாண்டித்தியம் பெற்றிருந்தார். கம்பராமாயணத்தின் சுவை கண்டவர். இவர் 1885 முதல் 1897 வரை நெல்லேச்சபைகளின் நிர்வாகியாயிருந்தார் வெகு கண்டிப்புடையவர். நன்னெறி தவறி யோருக்குச் சிட்சை கொடுப்பார். இவ்வூழியம் இவருக்குத்திருப்தி அளிக்காத காரணத்தால் அதை விட்டு ஆத்மீகப்பணி செய்ய டோஞவூரைத்தமது தளமாகத் தெரிந்து கொண்டார்.

டோஞவூரில் குமாரி A. W. கார்மைக்கேல் அம்மையார் நடத்திய அஞதைப்பிள்ளேகளின் நிலேயம் ஏற்படக்காரணமா யிருந்தவர் கனம் உவாக்கர் ஐயர்தான் என்ருல் அது மிகை யாகாது.

இவர் ஆவிக்குரிய கூட்டங்கள் நடத்துவதில் அதிக ஆர்வங் கொண்டவர். இவர் வேனிற்கால விடுமுறையில் கொடைகானல் சென்ற காலங்களில் இந்தியர்களே, ஆவிக்குரிய கூட்டங்கள் நடத்த வேண்டுமென்று திட்டம் செய்து 1901ம் ஆண்டில் டக்கர் அம்மாள் புரத்தில் முதல் கண்வென்ஷன் கனம் S G. மதுரம் ஐயரவர்களின் தலேமையில் நடைபெற்றது. இவரது தமையஞர் கனம் J.D. ஞாஞயுதம் ஐயரவர்கள் இதற்குத் துணைபுரிந்தவராவார். 1903-ம் ஆண்டில் இந்திய மிஷனெரி சங்கம் ஆரம்பிப்பதற்கு ஊக்க மூட்டியது இந்த ஆவிக்குரிய கூட்டமே. ஆண்டுதோறும் திருவிதாங்கூரில் நடக்கும் மராமன் கண்வென்ஷனில் இவர் முக்கிய பேச்சாளர். குருத்துவ மாணவர்க்கு ஊக்க மூட்டி பயிற்சி யளிப்பார். நம் பிராந்தியத்தில் அவர் செய்த ஊழியம் பாராட்டத் தக்கது. பண்ணைவிளேயிலும் சீரிய பணியாற்றியவர்.

இவர் 1912ம் ஆண்டு மசூலிப்பட்டணத்திற்குப் பிரசங்கம் செய்யப்போனபொழுது திடீரென்று விஷபேதி கண்டு இறந்து போஞர். வயது 53 ஆகும்.

**பாலியர் நேசன் தோற்றம்:-**

இப்பத்திரிகை நம் அத்தியட்சர் காலத்து உருவானது. இதன் ஆரம்பம் ஒரு விசித்திரமானது. மதுரை மண்டபச்சாலேயில் ஒரு போர்டிங் பள்ளி. அதின் தலேவர் ஓர் நெல்லேவாசி. சுவிசேஷ

வாஞ்சை உள்ளவர். விடுதியில் உள்ள மாணவர்கள் பல சுபாவ முடையவர்கள். அவர்களை அடக்குவது அரிது. ஆசிரியர் இந்நிலை கண்டு வெகுவாய் மனம் நொந்தார். ஊழியத்தைப்பற்றி மன வெறுப்புங்கொண்டார். அன்றொரு நாள் பள்ளிக்குச்செல்லும் வழியில் ( Bombay Guardian ) பாம்பே கார்டியன் என்ற பத்திரிகையை நடந்தே வாசித்துச்சென்ருர். "Lord Radstoke in Bombay" பாம்பேயில் பிரபு ரட்ஸ்டாக் என்ற தலைப்பைக் கண்டு வாசித்தார். அதில் எனக்கு இங்கிலாந்தில் உலகியல் வசதிகள் பல உண்டு. ஆனால் என் ஆத்துமாவில் திருப்தி இல்லை. ஒருநாள் என் இதயத்தைக் கர்த்தராகிய இயேசுவுக்கு அர்ப்பணித்தேன் அன்று முதல் என் உள்ளச்சந்தோஷம் நிரம்பி வழிகிறது இப்பாக்கியமே என்னை இந்நாட்டுக்கு கொண்டு வந்தது. என் போன்று நீங்களும் உங்களை இயேசுவுக்கு ஒப்படைத்தால், பிரதிஷ்டை செய்தால் பாக்கியவான்களாயிருப்பீர்கள்' என்றிருந்தது. அதை வாசித்த அவரின் நடைநின்றது. சிந்தித்தார். ஏசுவே ராட்ஸ்டாக்கைப் போன்று நானும் என்னை உமக்கே உடைமையாக்குகிறேன்' எனச்செபித்தார். உள்ளம் மாற்றம் பெற்ருர், உவகைகொண்டார். உபாத்திமைத் தொழில் இனிதாயிற்று இவரது சுபாவ மாற்றங்கண்ட மாணவர்கள் வியந்து அவர்களும் மாற்றம்பெற்றனர். 'மன்னவன் எப்படியோ அப்படியே மன்னுயிரும்' என்பதுபோன்று ஆசிரியரும் மாணவரும் உயரிய மன :மாற்றமடைந்தனர். நாட்கள் சென்றன. பாளையங் கோட்டை C M, S. அலுவலகத்தில் உதவி எழுத்தராக நியமனம் பெற்ருர். ஓய்வு நேரத்தில் C. M. S. பள்ளி மைதானத்தில் விளையாடிக்கொண்டிருக்கும் மாணவர்களிடம் கிறிஸ்தவ உபதேசம் கொடுத்தார். பிள்ளைகள் அதை ஏற்கவில்லை. மனதில் ஒரு பாரம் உண்டாயிற்று. சாரள் பள்ளி ஆசிரியர் S. G. மதுரத்திடம் தம் துயரைக்கூறினர். இவரும் தமக்கு அந்நோக்கம் உண்டு. அது சித்தி பெற ஜெபிப்போம் என்ருர்,

அதின்படி திரு R. V. ஆசீர்வாதம் ஆசிரியர், G. தேவதாசன் ஆசிரியர், வாலிபர்கள், பாலியர்கள் ஆகியோர் டக்கர் அம்மாள்புரம், தரிசனமலை முதலிய இடங்களில் கூடி 6 மாதங்கள் ஜெபித்தனர். இறுதியில் ஆரம்பிக்க உறுதி கொண்டு அதன் தலை

2

வராக இருக்குமாறு சாலோமோன் ஞானி என்றவக்கீலிடம் கேட்டனர். அவரும் ஒப்புக்கொண்டார். ஆகவே 1891 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 20ம் நாள் 'Osborne' அஸ்போன் பள்ளியின் முதல் கூட்டம் ஆரம்பமானது. இந்நன்னுள் 7வது எட்வர்ட் அரசர் பிறந்த நாளாகும். ஜாண் தேவசகாயம் ஆசிரியர் இது தேவையில்லை, பள்ளியில் வேதபாடம் கற்றுக்கொள்கிறோம். அதுவே போதுமானது என்று எதிர்ப்புக்கூறினுர். ஆனுல் அன்றுகனம் கார். கனம் உவாக்கர் ஐயரவர்கள் சங்கத்தை ஊக்குவித்தனர். ஓராண்டு கழிந்த பின் கனம் A.N.C. ஸ்ஞேர்ஸ் ஐயர் இதற்குத்தலைவர் ஆனுர். பின் (Scott Price) கனம் ஸ்காட் பிரையஸ் இரண்டாவது தலைவர். முன்கூறிய மண்டபப்போர்டிங் ஆசிரியர்களாகிய திரு. சாலோமோன் பாக்கிய நாதன் குருவாக அபிஷேகம் பெற்று இச்சங்கத்தின் செயலராஞர். இச்சங்கமே பாலியர் நேசன் என்ற பாலியர் பத்திரிகையை உருவாக்கிற்று. பல் பிராந்தியங்களிலும் இவ்வூழியம் செவ்வனே நடைபெற மெஞ்ஞானபுரம் திரு. லூக்கா ஜாண் ரூ 14 சம்பளத்தில் ஊழியனுக நியமனம் பெற்றுர். ஆகவே இச்சங்கம் 1891ம் ஆண்டு ஜூன் மீ 20உ ஆரம்பிக்கப்பட்டது. சம்பளம் நீங்கலாக 1891 இல் சங்க இருப்பு ரூ. 48 ஆகும். இதில் மாதம் அவருக்குப்படி ரூ 4 போக இருப்பு சரி. இவரின் நியமன ஆண்டின் இறுதியில் ரூ 300 கையிருப்பாயிற்று. 1892ம் ஆண்டில் பாலர் மனமகிழ் பண்டிகை ஆரம்பமானது. அடுத்த வருஷத்தில் மருதகுளம் தேவசகாயம் டேவிட் உபதேசியார் பாலியர் ஊழியனுகவும் அதற்கு அடுத்த ஆண்டு ஆபிரகாம் உபதேசியாரும் நியமனம் பெற்று மூவரும் சேர்ந்து நெல்லை மாவட்டம் முழுவதும் ஊழியம் செய்தனர். 20 நாட்கள் வெளியூரிலும் 10 நாட்கள் தங்கும் இடத்திலும் பணி செய்தனர். 1903 ம் ஆண்டுக்குள் 3500 பாலியர் நேசன் அச்சாயிற்று. அவை இந்தியாவின் சில இடங்களுக்கும் கொழும்பு, பர்மா, மலேசியா முதலிய இடங்களுக்கும் அனுப்பப்பட்டன.

மனமகிழ்ச்சிப் பண்டிகையில் வரும் மாணவர்களுக்கு ஒரு நேரம் பூர்த்தியான சாப்பாடு கொடுக்கப்பட்டது இவ்வழக்கம் இன்றுமுள்ளது. கடாச்சபுரத்தில் இப்பண்டிகைக்கு விருந்தினரை அழைப்பதும் மூன்று நாட்கள் கொண்டாடுவதாயுமுள்ளது. முதல்

மனமகிழ்ச்சிப் பண்டிகை பாளையங்கோட்டையில் நடைபெற்றது காணிக்கை வரவு ரூ 250 என்பது ஆச்சரியப்படத்தக்கது. இவ் ஊழியத்திற்கு உறுதுணையாயிருந்தவர்கள் கனம் பட்டர் பிரான் ஐயர். கனம் S. G. மதுரம் ஐயர் என்பது குறிப்பிடத்தக்கது. R. T. ஆர்ச்சி பால்ட் துரை பல சமயங்களில் வந்து ஊழியம் செய்தார். ஊழியத்தில் குணப்பட்டவர்கள் 'வான வீரர்' என்ற ஒரு சங்கத்தை ஆரம்பித்தனர். இவ்வூழியத்தால் இயேசுவை ஏற்றுக்கொண்டவர்கள் பலர்.

சிறுவர்களுக்குள் ஊழியம் செய்ய Voluntary Preachers for children's Work) 'சிறுவர் ஊழியத்திற்கு தன் ஆர்வ பிரசங்கிமார்' என்ற குழு ஆரம்பமானது. பல கிராமங்களில் தங்கி ஊழியர். செய்தனர் இதில் பட்டதாரிகள் பலர் உண்டு. இதில் இதில் S. G மதுரம் ஐயர் வெகு ஊக்கம் காட்டியவர். இரவு நேரங்களில் சபையாருக்கும் தாய்மார்களுககும் சுவிசேஷம் அறிவித்தார்கள். (Band of Hope) நம்பிக்கையின் குழு என்று ஒருகுழுவை ஆரம்பித்தார்கள் பின் இப் பெயருக்குப் பதிலாக திருநெல்வேலி பாலியர் பக்தி விருத்தி சங்கம் என்று பெயரிடப்பட்டது இதுவே இன்று திருநெல்வேலி திருமண்டலப் பாலியர் சங்கம் என்று இயங்கி வருகிறது. இன்று சிறுவர் சிறுமியருக்கு வேத அறிவு பெற ஆண்டுதோறும் திருமறை பந்தயத் தேர்வுகள் நடத்தப்பட்டுப் பரிசுகள் வழங்கப்படுகின்றன. மாதந்தோறும் வேத வினு விடை மூலம் பிள்ளைகள் உற்சாக மூட்டப்படுகின்றனர். பாலியர் சங்கத்தின் வளர்ச்சிக்கு ஆயுள் காலச் சந்தா ரூபாய் 100 கொடுத்துப் பலர் அங்கத்தினர் ஆகின்றனர். நான்கு ஊழியர் பணி புரிகின்றனர். கனம் வில்லியம் அத்தியட்சரின் காலத்தில் நம் திருமண்டலம் பல துறைகளில் முன்னேற்றம் அடைந்துள்ளது.

—— ——

# கனம் உவாலர் அத்தியட்சர்

இவரது ஆட்சிக்காலம் 1915 — 1922 ஆகும். இவர் 1871ம் ஆண்டு டிசம்பர் திங்கள் 8 ம் நாள் பிறந்தார். தந்தை உவாலர் பண்டிதர் ஆவார். கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் கல்வி பயின்று 1894 ம் ஆண்டு குருவானார். 1897 இல் C. M. S மிஷனெரியாக நம் நாடு வந்தார். அலகபாத் நகரின் பரி பவுல் வேத சாஸ்திர கல்விச் சாலைத் தலைமையை ஏற்றார். 1907 ல் காசி நகரில் கே. நாராயன் கல்விச் சாலைத் தலைவரானார். 1909 ல் ஐக்கிய மாகாணத்தின் C. M. S. காரியதரிசியாக்கப் பட்டார். 1913 ல் இவரது திறமை கண்டு இந்திய வேலைகளைத் தனிப்பட லண்டனில் மேற்பார்க்கும் ( C. M. S. Salisbury Square ) சங்கத்தின் செயலர் ஆக்கப்பட்டார். 1910 ல் லெட்சுமணபுரி அத்தியட்சாதினத்தின் கனோனாகி 1915 ல் நவம்பர் 28ம் நாளில் கல்கத்தா நகரின் பரி. பவுலின் ஆலயத்தில் நெல்லை அத்தியட்சராக அபிசேகம் பெற்றார். C. M. S. சங்கத்தாரால் அனுப்பப்பட்டு மிஷனெரிகளாக இருந்து அத்தியட்சரானவர்களில் இவர் ஐம்பத்தேழாவதானவர். தரிசன ஆகமத்தின் பேரில் ஓர் விளக்க உரை எழுதியுள்ளார்.

இவர் 1915 ல் இவர் பிறந்த நாளான டிசம்பர் 8 ம் நாள் பாளையங்கோட்டை வந்து சேர்ந்தார், நூற்றாண்டு மண்டபத்தில் வரவேற்பளிக்கப்பட்டது. இவர் பதவி ஏற்கு முன்னரே இரு முக்கிய ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

(1) சேப்ளன். வேறு பணிகள் செய்யாது சேப்ளன் உத்தியோகத்தை மட்டும் செய்ய வேண்டும்.

(2) C. M. S. ஜில்லா ஆலோசனை சங்கத்தின் அத்தியட்சரே தலைவர். இவ்வதிகாரம் C M. S. சங்கத்தாரால் பிறப்பிக்கப்பட்ட தாகும். முன்னுள் இரு அத்தியட்சர்களுக்கும் இந்த உரிமையில்லை.

திருநெல்வேலி சபைகளின் நிலை :—

C. M. S. , S.P.G. ஆகிய இரு சபைகளும் அயலார் போன்று தத்தம் சபைகளை நடத்தி வந்தார்கள். இருவருக்கும் பொதுவான ஒரு அமைப்பு இல்லாததால் அத்தியட்சர் இரு சங்கங்களின் பிரதிநிதிகளையும் ஒரே ஆலோசனை சபையாக வைத்துக் கலந்து ஆலோசிக்கக் கூடாத நிலை இருந்தது.

C. M. S. சபைகள் ஜில்லா ஆலோசனை சபையின் ஆதீனத்திற்குள் இருந்தன. விசாரணை முதலாளி ஆங்கிலேயரே. மேற்



அருள்பெருந்திரு
ஹென்ரி வாலர்
1915—1922

கூரிய ஆலோசனை சபைக்குத் தனிக் காரிய நிருவாக அதிகாரம் இருந்தது. S. P. G. சபைகள் 4 தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றுக்கும் ஒரு ஆங்கிலவிசாரணைக்காரர். பெயரவில் ஒரு ஆலோசனை சங்கமும் உண்டு. பொதுவான அமைப்பு கிடையாது. சங்கம் கூடும் போது தேர்தல் முறையில் தலைவரைத் தெரிந்து கூட்டம் நடத்துவர். விசாரணைத் தலைவர்கள் சபைக் காரியங்களைச் சுயேட்சையாகவே நடத்திக் கொள்வர். இவர்கள் சென்னை அத்தியட்சாதீன ஆலோசனை சபைக்குக் கட்டுப்பட்டுக் கணக்கு கொடுக்க வேண்டும். இரு சபைகளுக்கும் தனித்தனி வேத சாஸ்திரக் கல்வி ஸ்தாபனங்கள் இருந்தன. C. M. S. சபையாருக்கு 'நற்போதகம்' என்ற பத்திரிக்கை உண்டு. ஆனால் S. P. G சபையாருக்குப் பத்திரிக்கைகள் கிடையா.

இப் பிரிவுபட்ட தனித்தனி ஆளுகை, அத்தியட்சரை வெகுவாக வருத்திற்று. ஒரு ஐக்கிய நிலைமை உருவாகத் தம் முதற் கடிதத்தில் "C, M, S., S P. G. ஆகிய இரு சபைகளும் ஒரு ஐக்கியத்திற்குள் கொண்டு வரப்பட வேண்டும். ஐக்கியமே நம் ஊழியத்திற்குச் சக்தி வாய்ந்ததோர் ஆயுதம். கிறிஸ்துவில் ஒருமைப்பட்ட நம் வாழ்க்கை புறமதத்தினருக்கும் உலகுக்கும் ஒரு எடுத்துக்காட்டாக இருக்க வேண்டும். ஆனால் நாமோ பிரிந்து நிற்கின்றோம். பூரண ஐக்கியம் உண்டாக ஆரம்பத்தில் சபைக் காரியங்களை ஒன்றுபட்டு நிர்வாகிக்க வேண்டும். இவ்வைக்கியம் ஜெபத்தின் வல்லமையினால் மட்டும் கிட்டும்'' என்று எழுதியிருந்தார். அந்நோக்கோடு தம் இல்லத்திலேயே ஒரு சிற்றாலயத்தை அமைத்தார். இதில் அவர் தனி ஜெபங்களும் அத்தியட்சரின் வேலைக்காரருக்குக் குறிப்பிட்ட ஒரு நேரத்தில் ஆராதனையும், நடுப்பகலில் அத்தியட்சாதீன முழுமைக்கான ஜெபமும் கொடுக்கப்பட்டன. இந்த ஆலயம் கட்டப்படுவதிலேயே இரு சபைகளில் உள்ளவர்களைப் பிணைத்தார். நன்கொடையாளரின் பெயர்கள் பலகையில் எழுதப்பட்டு அவர்களுக்காக விண்ணப்பம் செய்யப்பட்டது. சுவர்கள் பலகைகளால் மூடப்பட்டிருந்தன. அது ஸ்தாபனங்களின் கொடையாகும்.

சபைப் பிள்ளைகளின் கல்வி சகாய நிதிக்கென்று தாமே ரூபாய் 50 மாதந்தோறும் கொடுத்தார். இரு சபைகளும் இதில் பயன் பெற இதன் மூலம் அய்க்கியப்பட ஒரு கழகம் ஏற்படுத்தப்படல் வேண்டும். அதன் தலைவர் அத்தியட்சரே. சேப்ளன் அக்கழகத்தின் செயலரும் பொக்கிஷத்தாருமாக இருப்பார். S. P. G., C.M.S. ஆகிய இரு சபைகளும் தெரிந்தெடுக்கும் 4 குருக்கள் 4 சபைப் பிரதிநிதிகள் அதின் அங்கங்கள். சகாயநிதி

சம்பந்தமாய் அத்தியட்சாதீனம் 8 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அதன் குருக்கள் சபை முக்கியஸ்தர் யாவரும் கல்வி சகாய நிதி திரட்ட வேண்டும். அத்தியட்சர் ரூபாய் 450 கொடுத்தார். திடப்படுத்தல் குருபட்டாபிசேகம் — இவற்றின் காணிக்கை இந்நிதியில் சேரும். S. P. G., C. M. S. ஆலோசனை சபைகளும் ஆண்டு தோறும் ஒரு தொகை கொடுக்க வேண்டும். கிடைக்கும் தொகையில் 2/3 நடுத்தரப் பள்ளி மாணவர்களுக்கும் 1/3 உயர்தர பாடசாலை மாணவர்களுக்கும் கொடுக்கப்பட்டது.

சகாயம் பெறும் மாணவன் பரீட்சையில் தவறினால் ஒரு வருஷம் மட்டும் தவணை கொடுக்கப்படும். புதிய கிறிஸ்துவப் பிள்ளைகளின் மனுக்கள் பிரத்தியேகமாகக் கவனிக்கப்பட்டன. கல்லூரி மாணவர்களுக்கு C. M. S., S. P. G சபைகள் தாங்களாகவே பண உதவி செய்ய வேண்டும். இவ்வொழுங்கே நம் அத்தியட்சாதீனத்தின் கல்வி சகாய நிதி கழகமாக இன்று செயல்பட்டு வருகிறது.

ஊனை முற்றோரிடத்தும் பிச்சைக் காரரிடத்தும் கருணை கொண்டவர்.

1916 ம் ஆண்டில் அத்தியட்சாதீனரால் வருடப் பத்திரிக்கை ஒன்று பிரசுரமானது. இது அத்தியட்சர் நிருபம், சுற்றுப் பிரயாணம், அத்தியட்சாதீன செய்திகள் அடங்கியதாகும். C. M. S. சபை நடத்தி வந்த நற்போதகத்தில், ஜெல் அத்தியட்சர் வேதாகம பரீட்சை பாடங்கள் பேரில் வியாக்கியான விளக்கங்கள் வெளியிடப்பட்டன. பின் காலத்தில் இவ் இரண்டு பத்திரிக்கைகளும் ஒன்றாக நற்போதகத்தில் அடங்கிற்று. S. P. G., C M. S. ஆகிய இரு சபைகளுக்கும் பொதுவான ஒரு ஜெபப் புத்தகம் வெளியிடப்பட்டது.

S. P. G. C. M. S ஆகிய இரு சபைகளின் அமைப்பின்படி இருசபைக்கும் பொதுவான ஏற்பாடு அமைப்பது கூடாதாயிற்று ஒரு பகுதியில் இருந்து மற்றொரு பகுதிக்குக் குருக்களை மாற்ற முடியாது. இந்நிலை மாற்றமடைய அத்தியட்சர் 1916 இல் ஆலோசனைத்தலைவர் யாவரையும் சேர்த்து ஒரு ஆலோசனைச் சங்கம் ஏற்படுத்தினார். அத்தியட்சாதீன காரியங்கள் எல்லாவற்றையும் ஒன்றுபடுத்தும் ஒருதிட்டத்தை இவ்வாலோசனை சங்கத்தில் ஆலோசித்தார். குருக்களைப் பகுதிவிட்டுப் பகுதிக்கு மாற்றும் திட்டம் தீட்டப்பட்டு ஒப்புக்கொள்ளப்பட்டது. இரு சங்கங்களும் ஒருமைப்பட நாலு திட்டங்களை வெளியிட்டார்.

[1] சபை ஊழியரின் சம்பள விபரம். ஆரம்பக்கல்வி கற்ற வருக்கு ரூ 8 சம்பளமாக இருந்தது. அது ரூ 15 ஆக்கப்பட்டது. மத்தியபாடசாலைக்கல்வி கற்றவருக்கு 11இல் இருந்து ரூ 20 ஆக்கப்பட்டது. உயர்தரப் பாடசாலை கல்வி உடையவருக்கு ரூ 16 இல் இருந்து 30 கொடுக்கப்பட்டது.

[2] மத்திய பாடசாலையில் படிக்கும் சபைஊழியரின் பிள்ளை களுக்கு அந்தந்தப்பகுதி சபை பண நிதியில் இருந்து கல்வி சகாயம் செய்ய வேண்டும்.

[3] கல்வியைக்குறிப்பாகக் கொள்ளாது திறமை, சிறந்த பணி இவற்றைக்கொண்டு சபை ஊழியருக்குக் குருப்பட்டம் கொடுக்கப்பட வேண்டும்.

[4] பள்ளி ஆசிரியர்களிடமிருந்து பத்தில் ஒன்று பிடிக்கப் பட்டது, ஆசிரியர்களின் விருப்பத்திற்கு விடப்பட்டது.

இரு சபைகளும் ஒரே ஐக்கிய அமைப்புக்குள் வர அத்தி யட்சர் இடையருது ஜெபித்து வந்தார். அதற்கு உழைத்தும் வந்தார். தாம் கொடுக்கும் கட்டளை உபதேசங்களிலும் இதை வற்புறுத்தியே வந்தார்.

சுவிசேஷ ஊழியத்தில் ஆர்வங் கொண்டவர். அத்தியட்சா தீனத்தில் நடைபெற்று வந்த இரு சங்கங்களின் சுவிசேஷ ஊழி யத்தில் அதிக சிரத்தை கொண்டார். இரு சங்கங்களிலும் உள்ள பிரசங்கிமார்களை 1917ம் ஆண்டு ஏப்ரல் திங்களில் கூடிவரச் செய்து ஆவிக்குரிய கூட்டங்கள் நடத்தினர். நிற்க இவர்கள் பிரசங்கத்தில் வல்லுனர்களும் வாழ்க்கையில் சிறந்தவர்களாகவும் காணப்பட கனம் E. A. L மூர் ஐயர், கனம் P. N. தெய்வநாயகம் ஐயர் ஆகியவர்களைக் கொண்டு கூட்டம் நடத்தச்செய்தனர். அத்தியட்சரின் சேப்ளனும் சுவிசேஷ ஊழியத்தின் சிரத்தை கொண்டவர். குருக்களுக்குத் தாம் எழுதிய முதலாவது நிருபத்தில் "அத்தியட்சாதீனத்தின் சுவிசேஷ பிரசங்க முயற்சி" என்று தலைப் பிட்டு சுவிசேஷ ஊழியத்தில் பற்பல முறைகளைக் கையாண்ட போதிலும் நோக்கம் ஒன்ருக இருக்க வேண்டும். அந்நோக்கம் சித்தி பெற ஜெபம் பிரதானமானது பிரசங்கிப்பவர் கிறிஸ்துவின் போதனைகளை அறிந்திருத்தல் வேண்டும். இல்லையேல் அவரது பிரசங்கம் திட்ட மற்றதும் பலமற்றதும் பயனற்றதுமாகும் என்ருர். ஆரம்பிக்கப்பட்டு 'நடந்து வரும் இந்திய மிஷனெரி சங்கத்தில் தாம் பெருமை கொள்வதாகவும் அதனை ஆதரிக்க வேண்டும்" என்றும் கூறினர். தாம் எழுதிய இரண்டாம் நிருபத்திலும் சுவிசேஷ

ஊழியத்தை வற்புறுத்தியுள்ளார். 1927ம் ஆண்டு அக்டோபர் திங்கள் 11ம் நாளில் குருக்களுக்குக்கொடுத்த கட்டளை உபதேசத்தில் குருக்களாகிய நாம் சுவிசேஷத்திற்கென்றே அழைக்கப்பட்டிருக்கிறேம். சுவிசேஷம் ஒழுங்கான திட்டங்களோடு செயல்பட வேண்டும். எங்கு அவசரம் இருக்கிறதெனக்கண்டு ஊழியரை அங்கு அமைத்து ஸ்திரமான ஊழியம் செய்யவேண்டும் என்று வலியுறுத்திக் கூறினர். அத்தியட்சர் செல்லும் இடத்தில் அத்தியட்சருடன் சேர்ந்து சுவிசேஷ ஊழியம் செய்வார். ஆகவே சுவிசேஷ ஊழியம் வெகு கருத்துக் கொண்டதாயிருந்தது. கல்வி பயிலும் மாணவர்களின் பெற்றேரை ஆசிரியர் அணுகி சுவிசேஷம் அறிவிக்கப்பட குருக்கள் ஆசிரியர்களை உற்சாகப்படுத்த வேண்டும்.

திருநெல்வேலி C. M. S சங்கத்தின் கொண்டாட்ட நிகழ்ச்சியில் வகுக்கப்பட்ட திட்டங்களில் சுவிசேஷ ஊழியம் ஒன்றாகும்.

[1] ஒவ்வொரு குரு தொகுதியிலும் ஒரு பிரசங்கி.

[2] நெல்லை அம்பாசமுத்திரம் போன்ற பட்டணங்களில் நிலையான ஒரு பிரசங்கியார் இருக்க வேண்டும்.

[3] சார்ஜன்ட் அத்தியட்சர் போதக பயிற்சி சாலையில் பயிலும் மாணவருக்கு விசேஷமானதும் நடைமுறைக்கேற்றதுமான போதனை கொடுக்கவேண்டும்.

[4] புதிதாய் மார்க்கத்தில் சேருவோர் வசிப்பதற்கான வீடுகள் கட்டிக் கொடுக்கப்படல் வேண்டும்.

அத்தியட்சர் தமது ஊழியத்திற்குப் பிரயாண வசதிகளைப் பெரிதாக எண்ணுபவரல்லர். இக்காலபிரயாண வசதி போன்று அக்காலத்தில் பிரயாண வசதி கிடையாது. இவருக்குச் சொந்தமான காரும் கிடையாது. இவர் சில சமயங்களில் குதிரையிலும், ;காரிலும் சில சந்தர்ப்பங்களில் நடந்தும்கூட செல்வதுண்டு. அவர் அடைந்துள்ள பல பிரயாணக் கஷ்டங்களில் ஒன்றை மட்டும் கண்டு கொடுப்பது ஊழியத்தில் எத்தனை ஆர்வங் கொண்டவர் என்பதை உள்ளங்கை நெல்லிக்கனி போன்று விளங்குவதாகும். பாளையங்கோட்டையில் இருந்து இடையன்குடி செல்ல வேண்டும். வாடகை கார் ஒன்று அமர்த்தப்பட்டது. 10 மைல் தூரம் சென்றது திடீர் கோளாறின் காரணமாக கார் நின்று போயிற்று. பழுது பார்க்கப்பட்டு கார் ஓடிற்று. ஆனல் மீண்டும் 3 மைல்களுக்கொரு தடவை பழுது பார்க்க வேண்டியதிலை ஏற்பட்டது. காலை 8-30 மணிக்கு புறப்பட்ட அத்தியட்சர் மாலை 1-30 மணிக்கு பரப்பாடியை நெருங்கினர். ஒரு மைல் தூரத்திற்கு

அப்பால் நின்றுவிட்ட காரை விட்டுவிட்டு அத்தியட்சரும் சேப்ளனு மாக எரிக்கும் வெயிலில் பரப்பாடி குருவானவர் வீடு வந்து சேர்ந்தார்கள். குருவானவர் அதிர்ச்சியடைந்தார். ஐயோ! அத்தியட்சரின் முன் வைக்க ஆகாரம் இல்லை. அத்தியட்சருக்கோ பசி. அங்கும் இங்கும் ஓடினார், காய்ந்த சில பிஸ்கட்களைக் கடையில் இருந்து கொண்டு வந்தார். அம்மையார் காப்பி கொண்டு வர இரண்டையும் அருந்தி ஒருவாறு பசி தீர்த்துக் கொண்டார்கள். இதற்குள் ரிப்பேரான கார் வந்து சேர்ந்தது. பிரயாணத்தை ஆரம்பித்தார்கள். இடையன்குடிக்கு 2½ மைல் தூரம் இருக்கும் போது கார் செல்ல மறுத்து விட்டது. இருவரும் இந்த 2½ மைல் தூரத்தையும் நடந்தே தீர்த்தனர். இதுபோன்று எத்தனையோ கஷ்டங்கள் அவர் குறிப்பில் உண்டு இதில் அமைக்க இடம் போதாது.

## மக்கள் கல்வியில் ஆர்வங் கொண்டவர்கள்

திருநெல்வேலி C. M. கல்லூரியானது அக்காலத்தில் C. M.S சங்கத்தாரால் நடத்தப்பட்ட ஒரே கல்லூரியாகும். இதனைச்சர்வ கலா சமூகத்தார் உயர்தரக்கல்லூரியாக்கக் கேட்டனர். ஆனால் தாய் சங்கத்தார் பண நிலை குறைவின் காரணத்தால் இவ்வேண்டுகோளை ஏற்காது அதனை ஒரு உயர்தரக் கல்விச்சாலையாக ஆக்க எண்ணங்கொண்டனர் ஆனால் C. M. S ஜில்லா ஆலோசனை சங்கத்தார் கல்லூரியில் தேவையை மனத்திற்கொண்டு தம் பண ஆதரவில் அதனை ஒரு இரண்டாந்தரக் கல்லூரியாக நடத்தத் தீர்மானங்கொண்டனர். இது கண்ட தாய் சங்கத்தார் கல்லூரிக்கு குறைந்த ஒரு தொகையையும் தம் ஆதரவில் ஆங்கிலேயத் தலைவரையும் அதற்குக் கொடுப்பதாக ஒப்புதலளித்தனர். இம் மாற்றம் கல்லூரியின் விசாரணைப்பொறுப்பு ஐரோப்பியரை விட்டுச் சுதேசிகளுக்கு மாற்றப்பட்டது. இப்பெருமை நம் வாலர் அத்தியட்சரைச் சார்ந்ததாகும். இதற்கு உறுதுணையாயிருந்தவர் சென்னை C. M. S சங்க காரியதரிசியாகிய கனோன் செல் ஐயராவர்.

அக்கால C.M.S, S. P. G ஆகிய இரு சபைகளும் சபை ஊழியர் பயிற்சிக்கென்று தனித்தனி பயிற்சிச்சாலைகளை நடத்தி வந்தனர். C, M S சங்கத்தார் சார்ஜன்ட் அத்தியட்சரால் ஆரம்பிக்கப்பட்ட பயிற்சி சாலையை உடையவர்கள் சிறிது காலத்திற்குமுன் இது பழைய பேட்டைக்கு மாற்றப்பட்டிருந்தது. S. P. G. சபையாருக்கு இப்பயிற்சிசாலை நாசரேத்தில் இருந்தது. இருசபைகளும் குருப் பயிற்சி மாணவரைத் தமக்கென்று சென்னையிலுள்ள வேத சாஸ்திரக் கல்லூரிக்கு அனுப்பி வந்தனர். நம் அத்தியட்சர்

1921இல் இரண்டையும் ஒன்றுக்கி இட்பயிற்சி சாலையை நாசரேத்தில் அமைத்து வைத்தனர். இது அத்தியட்ச ஸ்தாபனமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. இதில் சபை ஊழியருக்கு இரண்டு வருடப்பயிற்சியும், திருச்சபையில் நற்பணி செய்வோரையும் குருத்துவப்பணிக்கு வரம் பெற்றோரையும் தெரிந்தெடுத்து (Selection Board) 3 வருடப்பயிற்சி கொடுத்தனர். இதுவே பிந்தியக்காலத்தில் திருமறையூர் வேத சாஸ்திரக்கல்லூரியாயிற்று. பின் 1969இல் இது அரசடிக்கு C. S. I. கல்லூரியாக மாற்றப்பட்டது.

விவாகத்திற்கு 3 அறிக்கைகள் வாசிக்கவேண்டுமென்பது ஆங்கிலத்திருச்சபையின் ஒழுங்காகும். மக்கள் அவசரபட்டு மணவறைகளில் பெரியவர்களைக்கொண்டும் ரிஜீஸ்டர் கலியாணங்கள் செய்தும் வந்தனர். இக்காரணத்தால் சபைக்குப்புறம்பாக சலும் மீண்டும் சபையில் சேர்ப்பதும் ஒரு தனிப்பிரச்சனையாயிற்று. இதனை மகாகன அத்தியட்சர் சபைக்குத் தெரிவித்துச்சில மாற்றங்களைக் கொடுத்தார். திருநாட்களில் ஓலை வாசிக்கலாம் என்ற சட்டம் பிறப்பிக்கப்பட்டது. மூன்று ஓலைகளுக்கும் 8 நாட்கள் இடைவெளிபோதுமானது. ஜெபப் புஸ்தகத்தில் நிருப வாக்கியம் சுவிசேஷ வாக்கியம் உள்ள திருநாட்களில் ஓலை கூறலாம். ஓலைகள் பதிவுப்புஸ்தகத்தில் பதிவுசெய்யப்பட்டுக் குருவானவர் அல்லது அவரது அதிகாரம் பெற்றவர் கையொப்பமிட்டிருக்க வேண்டும்.

கனம் வாலர் அத்தியட்சர் C. M. S சபைகளிலும் ஆலய ஆராதனைகளிலும் பாடகர்கள் அங்கி அணியும் அமைப்பைக் கொண்டு வந்தார். எதிர்ப்புகள் உண்டு. எனினும் 1920ம் ஆண்டு பெப்ருவரி திங்கள் 8ம் நாள் பாளையங்கோட்டையில் நடைபெற்ற குருப்பட்டாபிசேக ஆராதனையில் பாடகர்கள் அங்கி அணிந்து அருமையாகப்பாடிய பாடல்கள் மக்களைப் பரவசம் அடையச் செய்தது. அங்கி அணிதல் நிரந்தரமாயிற்று.

**அத்தியட்சாதீன** ஆலோசனைச்சபை அமைத்தல்: இது வரை நெல்லை அத்தியட்சாதீனத்திற்கு அத்தியட்சாதீன ஆலோசனைச்சபை கிடையாது. இரு சபைளிலும் வாக்காளர்களால் தெரிந்து கொள்ளப்பட்ட பிரதிநிதிகளைக்கொண்டு 1917 அக்டோபர் மாதத்தில் ஒரு சங்கத்தைக் கூட்டினர். அத்தியட்ச ஆலோசனை சபை அமைப்புப்பத்திரத்தை இச்சபை அங்கீகரித்தலைஒரு நிறுவாக சபை ஏற்படுத்தி அதைக்கொண்டு அத்தியட்சாதீன ஆலோசனை சபையையும், அதின் உட்பிரிவான கழகங்களையும் சட்ட முறையாக உண்டாக்கலாமென்று ஆலோசனை கூறினர் அப்படியே 1917ம் ஆண்டு அக்டோபர் மாதம் 11ம் நாள் தம்

அதிகார முறையான சந்திப்பை நடத்தவும் குருக்கள் சங்கம் கூட்டவும் ஒழுங்குசெய்தார். 80 குருக்களும் 11 உதவி குருக்களும் பாளையங்கோட்டையில் கூடினர் பரி திருத்துவ ஆலயத்தில் காலை 7-30 மணிக்குப் பரி. நற்கருணை ஆராதனை நடைபெற்றது. பகல் 2 மணிக்குச் சங்கம் கூடியது. அத்தியட்சர் அதன் தலைவர் குருக்கள் தம் சந்தேகங்களைக் கேட்டு தெளிவு படுத்திக் கொள்ள சமயம் கொடுக்கப்பட்டது. மாலை ஆராதனையுடன் அன்றைய கூட்டம் முடிவடைந்தது. அடுத்தநாள் வெள்ளிக்கிழமை காலை 7-30 மணிக்கு பரி. நற்கருணை ஆராதனையுடன் அத்தியட்சாதீன சங்கம் ஆரம்பமானது கூட்டம் நூற்றுண்டு மண்டபத்தில் காலை 10 மணி-க்குக் கூடிற்று. 93 குருக்களும், குரு தொகுதி ஸ்தானங்கள் தெரிந்தெடுக்கப்பட்ட 135 சபை அங்கத்தினர்களும் வந்திருந்தனர். அத்தியட்சாதீன ஐக்கியத்தில் பிரீதி கொண்ட 40 பார்வையாளர்களும் வந்தனர். அத்தியச்சாதின ஆலோசனை சபையின் அமைப்புப் பத்திரம் சபைமுன் வைக்கப்பட்டது சிலதர்க்கங்கள் நடைபெற்றன. இறுதியில் சில மாறுதல்களுடன் அமைப்பு அங்கீகரிக்கப்பட்டது. அமைக்கப்பட்ட அத்தியட் சாதீன ஆலோசனை சபைக்குக் கனம் W. E. எவான்ஸ் ஐயர் குரு காரியதரிசியாக தெரிந்தெடுக்கப்பட்டார் திரு G தேவதாசன் சபையார் சார்பாகக் காரியதரிசியானுர். (Lay Secretary) பின்னர் மாகாண ஆலோசனை சபைக்கு நாலு குரு பிரதிநிதிகள் தெரிந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் கனம் E.A.L. மூர் கனம் W. E எவான்ஸ், கனம் S. G. மதுரம் கனம் A. ஞானக்கண் ஆகியோர் ஆவர். சபைப்பிரதிநிதிகளாக திரு. அன்புடையான், திரு G தேவதாசன், திரு. G. S. ஆபிரகாம் திரு. G. தங்கசாமி ஆகிய நால்வர் தெரிந்தெடுக்கப்பட்டார்கள்.

பின்னர் நிர்வாகசபை அமைக்கப்பட்டது. அத்தியட்சர் தலைவராகவும் கனம் L. I. G. S. ப்ரைஸ் பதில் தலைவராகவும் ஆயினர் கனம் W. E. எவான்ஸ் திரு G. தேவதாஸ் நிர்வாக சபையின் அங்கத்தினர் கனம் G. S. மதுரம் ஐயர் அத்தியட்சாதீன பொக்கிஷதாரராக அத்தியட்சரால் நியமனம் பெற்றுர். பொக்கிஷதார் என்ற முறையில சபையின் அங்கமாஞர். 12 குருக்களும் 25 சபையாரும் தெரிந்தெடுக்கப்பட்டு அங்கமாயினர். 5 குருக்கள் 5 சபையார் அத்தியட்சரால் நியமனம் பெற்று அங்கமாயினர். கடவுளின் கிருபையால் நல்முறையில் நிர்வாக சபை உருவாயிற்று.

1918 ஏப்பிரலில் 7ம் நாள் நாசரேத்தில் முதல் நிர்வாக சபை கூடிற்று அத்தியட்சாதீன ஆலோசனைச்சபையின் சட்டதிட்டங்கள் முதன்மையாய்ப் பரிசோதனை செய்யப்பட்டன. C. M. S, S. P. G. சங்கங்களின் சொத்துக்கள் அத்தியட்சாதின பொக்கிஷ ஆளுகை

சங்கத்திற்குள்ளானது. (Diocesan Trust Association) இது வரை ஐரோப்பியரே கண்காணித்துவந்தனர். இச்சங்க அமைப்பின் ஒப்புதலை இரு தாய்ச்சபையும் ஏற்க ஆவன செய்ய அத்தியட்சர் கேட்டுக் கொள்ளப்பட்டார். சுவிசேஷவித்தாலியா இயற்றத்தீர்மானமாயிற்று. ஐரோப்பியவிசாரசணைக்குழுவின் கீழ் இருந்தமூக்குப்பேரி நாசரேத், ஜில்லாவில் இருந்து பிரிக்கப்பட்டு இரண்டும் தனித்தனி சேகரங்களாயின. சட்ட பூர்வ அத்தியட்சாதீன ஆலோசனை சபை 1925ம் ஆண்டு மகாகனம் றப்ஸ் அத்தியட்சரின் காலத்தில் தான் கூடிற்று. ஆனால் இச் சபை பூரண உருவெடுக்க அடிகோலியவர் வாலர் அத்தியட்சரே ஆவார்.

## C. M. S. சங்க நூற்றாண்டு விழா

இவரது காலத்தில் C. M. S சங்க நூற்றாண்டு விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இவ் விழா 1820இல் கொண்டாடப்பட்டிருக்க வேண்டும் ஆனால் 1921ம் ஆண்டு பெப்ருவரி திங்கள் 22 முதல் 25ம் நாள் வரை பாளையங்கோட்டையில் நடைபெற்றது. இது கேட்ட C. M. S தாய்ச்சங்கத்தார் தமது வாழ்த்துச்செய்தியை நெல்லைக்கு அனுப்பி வைத்து விழா நல் முறையில் நடைபெற உற்சாகமூட்டினர். அச்செய்தி வருமாறு:-

" C. M. S ஊழிய நூற்றாண்டு விழாவைத் திருநெல்வேலி மக்கள் கொண்டாடச் செய்திருக்கும் ஒழுங்கினை அறிந்து மிகப்பெருமை கொள்கின்றோம். கடந்த நூறு ஆண்டுகளில் சபையின் விரிவையும் விருத்தியையும் கண்டு கடவுளைத் துதிக்கிறோம். திருநெல்வேலி அத்தியட்சாதீன ஊழியத்தை ஒரே விசாரணைக்குள் கொண்டுவர S. P. G சங்கத்தார் மனமொத்து உழைத்துவருவது அறிந்து பெரிதும் பாராட்டுகிறோம். திருநெல்வேலி திருச்சபையின் சகல ஊழியங்களையும் முயற்சிகளையும் ஏக ஐக்கிய ஏற்பாட்டுக்குள் கொண்டுவர அத்தியட்சர் எடுக்கும் பிரயத்தினங்களுக்கு இரு சங்கப்பிரதிநிதிகளும் உற்சாகமாகக் கை கொடுத்து வருவதை நன்றியோடும் மகிழ்ச்சியோடும் கவனித்து வருகிறோம். இந்திய குருக்கள் தொகை பெருகுவதையும், அவர்களின் ஆன்ம வாழ்க்கை வளர்வதையும், ஒவ்வொரு குருஸ்தானத்திலும் அதிக ஊக்கமாயும் உற்சாகமாயும் நடைபெறும் ஊழியத்தையும் அறிந்து கடவுளைப் போற்றுகிறோம். சுயப்பெருக்கத்திலும், சுய ஆதரவிலும், சுய ஆளுகையிலும் இந்தியசபைகள் எடுத்து வரும் முயற்சிகள் எங்களை மகிழ்வூட்டுகின்றன. இந்திய திருச்சபை பரிசுத்தமும் பரிபூரணமுமான சபையாக வளரவும், அதில் காணும் பலவீனங்கள் முற்றிலும் ஒழியவும் வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

நூற்றாண்டு ஞாபகமாக, எங்களுக்குரிமைப்பட்ட ஆலயங்கள், குருசுடில்சன், இதர சொத்துக்கள் அனைத்தும் பின்காட்டிய நிபந்தனையில் நெல்லைத் திருச்சபைக்குக் கையளித்து விடுகிறோம். நெல்லைச்சபையானது தன்னை ஒரு பொக்கிஷ ஆளுகைச் சங்கமாக்கிச்சட்டத்தின்படி பதிவு செய்து கொள்ளவேண்டும். எந்நோக்கோடு மேற்கூறிய சொத்துக்கள் வாங்கப்பட்டு கையாளப்பட்டனவோ அந்நோக்கோடு அவை நிர்வகிக்கப்பட்டு செயல்படுத்துவதாக வாக்குறுதி அளிக்கவேண்டும். சென்னையின் C. M. S. ஜில்லா விசாரணை சங்கத்தாரை இந்த விஷயத்தைப் பூரண ஒழுங்குக்குக் கொண்டு வர உதவி செய்யக்கேட்கிறோம்''

C. M. S சங்கத்தாரின் முதல் மிஷனெரியான கனம் ரேனியஸ் ஐயரவர்கள் 1820ம் ஆண்டு ஜூலை மீ 7ம் நாள் பாளையங்கோட்டை வந்திறங்கினார். இந் நன்னாளை மக்கள் ஒரு ஸ்தோத்திர ஜெப நாளாகக்கொண்டாடினர் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும். விழாவன்று காலை 4 மணிக்கு 100 அதிர்வேட்டுகள் போடப்பட்டன. கால் மணி நேரத்திற்குக் கோவில், பள்ளிக்கூட மணிகள் ஒலிக்க மக்கள் நித்திரை விட்டெழுந்து ஆயத்தப்பட்டனர். 4½ மணி முதல் 6 மணி வரை பலரும்பாடிக் கொண்டு கிறிஸ்தவ மக்கள் வசிக்கும் இடங்களைச்சுற்றி வந்தனர். காலை 7-30க்குப் பரி. நற்கருணை ஆராதனை ஆரம்பித்தது. 14 குருக்கள் பங்கெடுத்தனர். நூற்றாண்டு லித்தானியா வாசிக்கப்பட்டது. சுமார் 600 பேர் பரி. நற்கருணையில் பங்கெடுத்தனர் என்ற ஒரு கணக்குண்டு. கனம் ஆர்டில் ஐயர் செய்தி கொடுத்தனர். பின்னர் சிறுவர்களுக்கு ஆலயத்தில் ஓர் ஆராதனை நடைபெற்றது.

காலை 10-30க்கு நூற்றாண்டு மண்டபத்தில் யாவரும் கூட, ராவ்சாகிப் A S அப்பாசாமி பெரியார் தலைமை தாங்க, மிஷனெரிமார் 15 பேர் மேடையில் அமர, பட்டதாரிகள் தம் பட்டத்து ஆடையோடு பவனிவந்து தம் ஆசனத்தில் அமரக் கூட்டம் ஆரம்பமானது. தாய்ச் சங்கத்தாருக்கு நன்றிக்கடன் செலுத்தக் கனம் M. ஆசீர்வாதம் ஐயரவர்கள் 145ம் சங்கீதம் வாசித்து ஜெபித்தனர். தலைவர் முன்னுரை வாசித்தார். கனம் மூர் ஐயாரவர்கள் மிஷனெரிமார் செய்த சேவையைப் பெரிதும் பாராட்டிப்பேசினார். அரசு சேப்ளனான கனம் ஹௌ (Hough) ஐயரவர்கள், ரேனியஸ், ஸ்மிட், பெற்றிற் ஆகிய குருக்களும் மகாகனம் சார்ஜென்ட் அத்தியட்சரும் பள்ளிக்கூடத்து மானேஜர்களான மிஷனெரிமார் செய்த ஊழியங்களையும் எடுத்துரைத்து ஆண்டவருக்கு ஸ்தோத்திரம் செலுத்தக்கேட்டுக்கொண்டனர்.

பின்னர் கனம் P. N. தெய்வநாயகம் ஐயரவர்கள் இந்திய கிறிஸ்தவ ஊழியர்களான ஜாண் தேவசகாயம், ஞானமுத்து, மதுரேந்திரம், முத்துசாமி வேத நாயகம், வீரபாகு முதலியவர்களின் ஊழியச் சிறப்பினை எடுத்துக்காட்டினர். திரு J. அன்புடையான் கடந்த நூறு ஆண்டுகளில் பிராந்திய கல்வி அபிவிருத்தியையும் சுவிசேஷ முயற்சிகளையும் எடுத்து சிலாகித்துப் பேசினர். சுவிசேஷ ஊழியத்தின் வளர்ச்சிகளைக்காட்ட இந்திய மிஷனெரி சங்கத்தை ஆதாரமாகக்கொண்டனர் கனம் மூர் ஐயர் தாய் சங்கக் காரியதரிசி கனம் பார்ட்ஸ்லே மூலமாய் வந்த வாழ்த்துத் தந்தியைத் தலைவரிடம் கொடுக்க அது, சபையாருக்கு வாசிக்கப் பட்டது. அஃது சங். 115, 12-14 வசனங்கள் அடங்கியதாகும். கனம் R. U. ஆசீர்வாதம் ஐயரவர்கள் ஸ்தோத்திர ஜெபம் செய்த பின் காணிக்கை சேகரிக்கப்பட்டது. நூற்றாண்டு விழாக்குழுவினர் தாய்ச் சங்கத்திற்குத் தம் நன்றி கலந்த ஒரு வாழ்த்துச் செய்தி தந்தியைக்கனம் ஆர்டில் ஐயரவர்கள் மூலம் அனுப்பி வைத்தனர். கனம் ஆர்டில் ஐயர் ஆசீர்வாதம் கூறக்கூட்டம் இனிது கலைந்தது கூட்ட முடிவுக்குப் பின் திருத்துவ ஆலயத்திற்கு முன் மூன்று ஞாபகார்த்த மரங்கள் நாட்டப்பட்டன. அன்று மாலை 3 யானைகள், ஒரு ஒட்டகம், போலீஸ் பாண்ட் வாத்தியம் முன் செல்ல பெரியோரும் சிறியோரும் கொடியேந்தி நகர் வலம் வந்தனர். இரவு 8 மணிக்கு 100 ஆண்டுகளில் நம் மத்தியில் பணிபுரிந்த மிஷனெரி மார்களின் படம் சரித்திரக் கோர்வையாக எடுத்துக்காட்டப்பட்டது.

நூற்றாண்டு விழாக்கொண்டாட்டத்திற்கு எடுத்த ஆயத்தங் களை ஈண்டு கூறுவது ஏற்றதாகும். 1919 ஜூன் மாதத்தில் இருந்தே நூற்றாண்டு ஆயத்தம் ஆரம்பமாயிற்று. ஏற்படுத்தப் பட்ட ஒழுங்குகள்.

1. எல்லாச் சபைகளிலும் இதற்கென்று ஒவ்வொரு வாரமும் ஜெபக் கூட்டங்கள்.

2. எல்லா தவச உற்சவங்களிலும் இதற்கென்று ஒரு கூட்டத் தைத் தனிப்படுத்தி அதில் விசேஷமான பேரைக் கொண்டு பிரசங்கம் செய்வது

3. 1919 ஜனவரி மாதத்தின் இரண்டாம் ஞாயிற்றுக் கிழமை யிலும் ஜூலை மாதத்தின் முதலாம் ஞாயிறிலும் எல்லாச் சபைகளிலும் நூற்றாண்டு சம்பந்த விசேஷ ஆராதனைகள்.

4 14 வயது முதல் 50 வயதிற்குட்பட்டோருக்கு நூற்றாண்டு கொண்டாட்டத்திற்குமுன் எழுத வாசிக்கப் பயிற்றுவித்தல்.

5. மதுபானம் அருந்துவதும் மது விற்பனை செய்வதும் சபையில் விலக்கப்படல் வேண்டும்.

6. ஒவ்வொரு குரு ஸ்தான சபையிலும் சரியான ஒழுங்குகளுடனும், ஆடம்பரத்துடனும் சுவிசேஷபிரபல்ய வேலைநடத்தப் பட வேண்டும்.

7. நூற்றாண்டுக் கொண்டாட ஆலோசனைச் சங்கத்திற்குக் கனம் G. தேவதாஸ் ஐயர் காரியதரிசியாக்கப் பட்டு, அவர் நூற்றாண்டு கொண்டாட்டத்தை விளம்பரம் செய்து அதற்கென்று பணம் சேகரிக்க வேண்டும்.

8. நூற்றாண்டு ஞாபகார்த்த நிதியாக ரூபாய் 70,000 சேர்க்கப் பட வேண்டும்.

9. நெல்லையில் C M. S சங்கத்தார் நடத்தி வைத்த வேலைகளை நூறு பக்கங் கொண்ட ஒரு புஸ்தக ரூபமாக வெளியிட வேண்டும். திரு. பால் அப்பாசாமி இதன் பொறுப்பாளர் நியமிக்கப்பட்ட கனம் G. தேவதாஸ் ஐயர் ஒவ்வொரு சபைக்கும் சென்று விளம்பரம் செய்து பணம் பிரித்து வந்தார். C M. S. ஜில்லா விசாரணைச் சங்கக் கூட்டத்தில் விழாக் கொண்டாட ஒழுங்குகள் தீட்டப்பட்டு 1921 ஏப்ரிலில் 22 — 25 தினங்கள் விழா நாட்களாகக் குறிக்கப் பட்டன.

விழாவிற்கு ஏறக்குறைய 20,000 மக்கள் பல பாகங்களிலிருந்து கூடினர் பந்தல் இடம் கொள்ள வில்லை. இந்தியா, பர்மா, இலங்கை மாகாண திருச் சபையின் மேற்றிராணியார் பெப்ருவரி 21 ம் நாள் வந்து இறங்கினர். புகைவண்டி நிலையத்தில் அவர் பெரு மரியாதையுடன் வரவேற்கப்பட்டார். மகாகனம் V. S. அசரிய அத்தியட்சர் வர 22ம் தேதி வர அவரும் உயரிய முறையில் வரவேற்கப்பட்டார். சென்னையில் C. M. S சங்கக் காரியதரிசியாக இருந்து 50 ஆண்டுகள் நற்பணி ஆற்றி 83 வயதுமுடிந்த பெரியார் கனோன் செல் ஐயரவர்கள் வந்தார். தென் இந்தியாவின் இதர கிறிஸ்தவ சபைகளின் குருக்களும் சபைப் பிரதிநிதிகளும் பங்கெடுக்க வந்தனர். யாவருக்கும் கண்ய முறையில் வரவேற்பளிக்கப்பட்டது.

22 ம் தேதி மாலையில் ஆயத்த ஆராதனை நடந்தது. நெல்லை திருக்கவிலே, முதுமை கொண்ட கனம் D. M. பாக்கியநாதன் ஐயர் ஆராதனை நடத்தினர். திருவிதாங்கூர் மகாகனம் கீல் அத்தியட்சர் பிரசங்கம் செய்தார. 23 ம் தேதி காலை 5. 30 மணிக்குப் பரி. நற்கருணை ஆராதனை நூற்றாண்டு பந்தலில் நடை

பெற்றது. இந்திய திருச்சபை அத்தியட்சர்களும், லூத்தரன் சபை அத்தியட்சர் ஒருவரும், ஐரோப்பிய, இந்திய குருக்கள் பலரும் நற்கருணை பரிமாறினர். பிரசங்கித்தவர் மேற்றிராணியார். 5000 பேர் திருவிருந்தில் பங்கு கொண்டனர். மத்தியானம் 12 மணிக்கு மேற்றிராணியாருக்குச் சமஸ்த திருநெல்வேலி அத்தியட்சாதீன சார்பில் வரவேற்பு அளிக்கப்பட்டது. 4-30 மணிக்கு ஸ்தோத்திர ஆராதனை. அதில் பிரசங்கித்தவர் மகாகனம் தோர்ணக்கல் அத்தியட்சர் ஆவார். கடந்த ஒரு நூற்றாண்டுக் நெல்லையில் நற்பணியாற்றிய ஐரோப்பிய, இந்திய ஊழியரின் ஞாபகார்த்தமாகப் பளிங்குக்கல் சின்னம் ஒன்று மேற்றிராணியாரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. "விஸ்வாசத்தோடே சாட்சி பகர்ந்தே" என்னும் கீதம் பாடப்பட்டது. ஆராதனை முடிவில் ஸ்தோத்திர காணிக்கை படைக்கப்பட்டது. C. M. S சங்கத்தின் நெல்லை சொத்துக்கள் அனைத்தையும் நெல்லை அத்தியட்சாதீனத்திற்கு நன்கொடையாக அளிக்கும் பத்திரம் சென்னை C. M. S. பிரதிநிதியான கனம் பீச்சி துரையவர்களால் வாசித்து ஒப்படைக்கப்பட்டது.

இரவு 9 மணிக்கு அத்தியட்சாதீனத்தில் பணியாற்றிய மிஷனெரிமார்களின் படங்கள் தீப ஒளியில் காட்டப்பட்டு வாழ்க்கைக்குறிப்பு கூறப்பட்டது.

பெப்ருவரி 24ம் நாள் காலை 5 மணிக்குத் திருத்துவ ஆலயத்தில் பரி. நற்கருணை ஆராதனை நடைபெற்றது. ஏறக்குறைய 2000 பேர் பங்கு பெற்றதாக ஒரு கணக்கு. ஆராதனையில் அசரியா அத்தியட்சர் பிரசங்கித்தார். காலை 9 மணிக்குத் தாம்பரபரணி ஆற்றில் 400 பேருக்குப் பருவம் கடந்த ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. ஆராதனையில் மகாகனம் அசரியா அத்தியட்சர் பிரசங்கித்தார். பிறமதத்தினர் இக்காட்சியைகண்டு மகிழ்ந்தனர். அன்றுபகல் 2 மணிக்கு திருநெல்வேலி C. M. கல்லூரியின் புதிய கட்டிடத்திற்கு மேற்றிராணியார் அடிக்கல் நாட்டினர். இதுவே பின் பாளையங்கோட்டைக்கு மாற்றப்பட்டது. 4 மணிக்கு வெளியில் இருந்துவந்த பிரதிநிதிகளுக்கென ஒரு கூட்டம் நடைபெற்றது இதில் நம் மாணவர்கள், நம்மில் கிறிஸ்து மார்க்கம் ஸ்தாபித்த வரலாற்றுக் கதையும், மிஷனெரிமார்களின் பணிகளையும் அவர்களது முறைகளையும் நாடக ரூபமாக நடத்திக் காட்டினர். இரவு 9 மணிக்கு தஞ்சை வாழ் ராவ்சாகிப் ஆபிரகாம் பண்டிதர் கதா காலக்ஷேபம் நடத்தினர்.

பெப்ருவரி 25 வெள்ளி காலை 7 மணிக்கு C. M. S. உயர் தரக்கல்விச்சாலையின் புதுக்கட்டிடத்திற்கு மகாகனம்

மேற்றிராணியார் கல் நாட்டினர். இது 1928இல் பரிசோவான் கல்லூரியோடு இணைக்கப்பட்டது. இரவு 7-30 மணிக்கு இதர சபைப் பிரதிநிதிகளுக்கென்று ஒரு கூட்டம் நடைபெற்றது. பலர் சொற்பொழிவு ஆற்றினர். பகல் 2 மணிக்கு இந்திய மிஷனெரி சங்க முதலாளி ராவ்சாகிப் (பின் திவான் பகதூர்) பட்டம்பெற்ற A S அப்பாசாமி இந்திய மிஷனெரி சங்கத்தின் பேரால் வருகை தந்த மேற்றிராணியாருக்கு வந்தனோபசாரம் செய்து கண்ணியப்படுத்தித் தேனீர் விருந்து கொடுத்தனர். சிறுவருக்கென பந்தய ஓட்டகங்கள் நடைபெற்றன. மாலை 7 மணிக்குப் பொது வந்தனோபசாரக்கூட்டம். இதில் விழாவில் கலந்து கொள்ள வந்த பிரதிநிதிகளுக்கும், விழாக்காரிய தரிசி கனம் G. தேவதாசன் ஐயருக்கும், உதவி புரிந்த சாரணப் படைத்தலைவர் கனம் C G. ஸ்றேப்னி ஐயருக்கும் நன்றி உபசார மொழி கூறப்பட்டது. மேற்றிராணியாரின் ஆசீர்வாதத்தோடு கூட்டம் இனிது முடிவாயிற்று வந்த காணிக்கை ரூ 24,000.

விழாச்செலவு விபரம்:—

| | |
|---|---|
| விழாச்செலவு | ரூ 6000 |
| வட திருநெல்வேலி குருதொகுதி ஸ்தானங்களுக்கு ஈவு | 1600 |
| தென் திருநெல்வேலி குருதொகுதி ஸ்தானங்களுக்கு ஈவு | 5000 |
| நூற்றாண்டு மண்டபத்தளம் புதுப்பிக்க | 3000 |
| இந்திய மிஷனெரி சங்கத்திற்கு ஈவு | 1000 |
| C. M. கல்லூரி புதுக்கட்டிடத்திற்கு | 1000 |
| நூற்றாண்டு ஞாபகார்த்த கல்வி சகாய நிதி | 5600 |
| திருநெல்வேலி திருச்சபை சரித்திரம் எழுத | 500 |

விழா தற்போதுள்ள V. O. C. மைதானத்தில் நடைபெற்றது. விழாவுக்குக் கனம் P. S. பீற்றர் ஐயர், கனம் D. M. ஞானசிகாமணி ஐயர் பாளையங்கோட்டை திரு. J. பொன்னுசாமி உபதேசியார் ஆகியோர் விழாக் கீர்த்தனைகள் இயற்றிக் கொடுத்தவர்கள் ஆவர்.

அத்தியட்சர் சேவையைச் சுருங்கக்கூறின் இவர் ஓர் நல் ஆலோசனைக்காரர், திருநெல்வேலி திருச்சபை ஐக்கியத்தின் மூல புருஷர். நெல்லையை ஒரு அத்தியட்சாதீனமாக்கிய சிறந்த சிற்பி யாவர் 1925இல் தான் சட்ட பூர்வமாக்கப்பட்ட போதிலும் இவரே காரியகர்த்தர். சுவிசேஷ வாஞ்சை கொண்டவருமாவர். 1923ஜனவரி 1ம்தேதி முதல் சென்னை அத்தியட்சரானார். இவருக்கு அத்தியட்ச மன்னர் என்ற சிறப்புப்பெயரும் உண்டு.

———

# நார்மன் ஹென்ரி றப்ஸ் அத்தியட்சர்

## இவரது காலம் 1923 முதல் 1928 வரை அடங்கியதாகும்

இவர் 1879 இல் பிறந்தவர் கேம்பிரிஜ் சர்வகலா சாலையில் B. A. பட்டம் பெற்றவர். ரிட்லிஹால் வேதசாஸ்திரக் கல்லூரியில் வேத சாஸ்திரம் கற்று 1903 இல் உதவி குருப்பட்டமும் 1904 இல் குருப்பட்டமும் பெற்றார். C M S சங்க சார்பாக 1905 இல் நம் நாடு வந்து அலகபாத், ஆக்ரா முதலிய நகரங்களில் ஊழியம் செய்தார். இவரது திறமை இவரை 1918 இல் கல்கத்தா வேத சாஸ்திரக் கல்லூரியின் தலைவராக்கிற்று. மகாகனம் வாலர் அத்தியட்சர், இவரே தமக்குப் பின் நெல்லை அத்தியச்சராக வேண்டும் என விரும்பினார். 1923 இல் மார்ச்சு மாதத்தில் மேற்ராணியரால் அத்தியச்சராக நியமனம் பெற்றார்.

பரி. யாக்கோபுவின் திருநாளன்று (ஜூலை 25ம் நாள்) மேற்ராணியரால் இவர் பாளையங்கோட்டை பரி திருத்துவ ஆலயத்தில் அபிசேகம் பெறத்தீர்மானமானது. இவர் தமது அம்மையாருடனும் ஆண் மக்கள் இருவருடனும் ஜூலை மாதம் 10ம் நாள் பாளையங்கோட்டை அத்தியட்சர் இல்லம் வந்தடைந்தனர். இதுவே நெல்லையில் நடந்த முதல் அத்தியட்சர் பட்டாபிசேகமாகும். இது காரணத்தால் பெருங்கூட்டமாக மக்கள் கூடிப் பங்கெடுத்தனர் கூட்டங் கட்டுக்கடங்காதநிலை ஏற்பட்டது. பட்டாபிசேக ஆராதனைப்பாடகர் வரிசைக்குத் திரு M. D. தாமஸ் தலைவராக எடுத்து சிறப்புற ஆராதனை நடைபெற பாடகர்கள் பயிற்று விக்கப்பட்டிருந்தனர். சென்னை, தோர்ணக்கல், கொழும்பு அத்தியட்சர்கள் மேற்ராணியருடன் சேர்ந்து ஆராதனை நடத்தினார்கள். ஆராதனையில் மகாகனம் அசரியா அத்தியட்சர் தமிழில் பிரசங்கித்தார். அபிசேகம் பெற இருந்த அத்தியட்சருக்கு ஆலோசனைகளையும் ஆசி மொழிகளையும் ஆங்கிலத்தில் சொன்னார். அடுத்த இரு அத்தியட்சர்களும் றப்ஸ் அத்திட்சரை மேற்ராணியாரிடம் நடத்திச் சென்று அபிசேகம் செய்யக் கேட்க அவர் அபிஷேகம் செய்தார். அன்று மாலையில் பழைய C M.S உயர்தரப் பாடசாலையின் விளாகத்தில்மேற்றிராணியாருக்கும், புதிய நம் அத்தியச்சருக்கும் ஏனைய மூன்று அத்தியட்சர்களுக்கும் தமது குருக்களாலும் சபை மக்களாலும் மரியாதை உபசரணை நடைபெற்றது. பின் அபிசேகம் பெற்ற அத்தியட்சரை மேள தாளங்களுடன் பட்டணத்துப் பெருவழியே நடத்தி அத்தியச்சர் இல்லம் சேர்த்தனர். இவ்வைபவம் அன்றைய மக்களின் இதயத்தில் அழியா பொருளாக இருந்தது.



அருள்பெருந்திரு
நார்மன் ஹென்றி றப்ஸ்
1923—1928

**அன்றைய நெல்லை திருச்சபையின் நிலை:**

முன் காலத்தில் இருந்து வந்த C. M. S., S. P. G. ஆகிய இரு சபைகளுக்குள் இருந்த கசப்புநிலை மாறி ஆலய வழிபாட்டிலும் சபை நிர்வாகத் துறைகளிலும் ஒரு ஐக்கியநிலை ஏற்பட்டிருந்தது என்பது முந்தைய அத்தியட்சர்களின் முயற்சியும் பரிசுத்த ஆவியின் அனுக்ரகமுமே ஆகும்.

திருநெல்வேலியின் முதல் இரு அத்தியச்சர்களும் கைகளை வைக்கும் அதிகாரம் ஒன்றையே உடையவர்களாயிருந்தனர். சபை ஆளுகையில் எவ்வித அதிகாரமும் கிடையாது. C. M. S., S.P.G தாய்ச்சங்கங்களின் அதிகாரத்திற்குட்பட்டே இருந்தது. ஆளுல் வாலர் அத்தியட்சர் இந்த விபரீதத்தைத் தகர்த்து அத்தியட்சரே சபை முழுமைக்கும் அதிகாரி என்ற நிலையை உருவாக்கினர்.

சில வருடங்களுக்கு முன் இந்திய திருச்சபை பிரித்தானியா அரசின் ஆதிக்கத்திலிருந்து பிரிந்து தனிச்சபையாக இயங்கும் நிலைக்கு ஏற்பாட்டினை மும்முரமாக நடத்தி வந்தது. அப்படி இருக்க திருநெல்வேலி திருச்சபை ஆங்கில திருச்சபையின் ஒருமைப்பாட்டு களுக்குள் இருந்தும் தனக்குள் பிளவுபட்ட நிலையில் ஐக்கியவல்லமை யையும் உரத்தையும் இழந்து நின்றது. மகாகனம் வில்லியம் அத்தியட்சர் ஒரே அத்தியட்சாதீன ஆலோசனை சபையைஸ்தாபித்த போதிலும் இருசபைகளும் (S. P. G., C. M. S.) தனித்தனி ஆளு கையில் இருந்தன. ஆனல் மகாகனம் வாலர் அத்தியட்சர் தமது திறமையையும் ஞானத்தையும் கொண்டு அத்தியட்சாதீன ஐக்கிய ஏற்பாட்டைப் (Diocesanisation Scheme) பிறப்பித்தார் ஆனல் புதிய சட்டங்களுடன் நியமிக்கப்பட்ட அத்தியச்சாதீன ஆலோசனை சபை ஏற்படுத்தப்பட்டு மேற் கூறிய ஏற்பாட்டை ஸ்தாபிக்கும் முன் மகாகனம் வாலர் அத்தியட்சர் சென்னை அத்தியட்சராக நியமனம் பெற்று விட்டார். இந்த ஏற்பாட்டைப்பல சங்கடங்களின் மத்தியில் நிலைப்படுத்தும் கசப்பான உத்ரவாதம் மகாகனம் றப்ஸ் அத்தியட்சர் மேல் விழுந்தது. இது சம்பந்தமாய் ஒரு முடிவுக்குவர அத்தியட் சாதீன ஆலோசனை சபை 1923 இல் கூட்டப்பட இருந்தது. ஆனல் டிசம்பர் மாதத்தில் கடு மழைகாரணமாக கூட்டம் ஒத்தி வைக்கப் பட்டு 1924ம் ஆண்டு ஜனுவரி மீ கூட இருந்தது. அன்று அங்கத்தினர்களின் இலக்கம் குறைவாக இருந்தபடியால் 1924ம் ஆண்டு மார்ச்சு மாதத்திற்கு மாற்றி வைக்கப்பட்டது. இந்நிலையைக் கண்ட அத்தியட்சர் மனமடிவும் ஏமாற்றமும் கொண்டார். எனினும் இதனைத் தேவசித்தமெனக் கொண்டார். இரு சபைகளும், அதி ங்கவர்களும், குருக்களும் இருசபைகளின் ஒருமைப்பாட்டைத் தீர சிந்திக்ககட்வுள் கொடுத்த இடைக்காலமென எண்ணிக்கொண்டார்.

இவ்வைக்கிய சம்பந்தமாய் ஞானமும்விவேகமும் உள்ள அத்தியட்சர் தமது நிருபங்களிலும் நேரில் சபையாரிடம் பேசும் போதும், அவர் களுடைய தனி அபிப்பிராயங்களைப் பயத்திற்கும் தயவுக்கும் கட்டுப்படுத்தாது நேர்மையாகவும் தைரியமாகவும் வெளியிட வேண்டு மென்று கேட்டுக் கொண்டார்.

குறித்த நாள் வந்தது. அச்சமும் திகிலும் பிடிக்கத்தக்க சூழ்நிலை சபையில் உருவாகுமோ. நகரக்காவற் படையின் அவசியம் கூட ஏற்படுமோ என்ற எண்ணம் உருவாகிக் கொண்டிருந்தது எனினும் கூட்டம் கூடிற்று. அத்தியட்சர் தலைமை தாங்கினர். 100 குருக்கள்,147சபைப்பிரதிநிதிகள் 5 பார்வையாளர்கள் வந்திருந் தனர். அவர்களில் ஒருவர் திரு M. D. தாமஸ் ஐக்கியத்திற்கும் அதற்குமாறுனதுமான பிரேரேபணைகள் முன் வைக்கப்பட்டன.பேசும் நேரம் அளவிடப்பட்டிருந்தது. எண்ணியதற்கு மாறுக வந்திருந்தோர் கோபமின்றி நிதானத்தோடு விஷயத்தைத் தர்க்கித்தனர். தர்க்கம் முடிந்தபின் அத்தியட்சர் எழுந்து சபையின் சம்மதத்தைக் கை யுயர்த்திக்காட்டுமாறு வந்தோரைக் கேட்டார். ஐந்து பேர் மட்டும் மறுப்புக்கூறி கையுயர்த்தினர். அத்தியச்சாதீனத்தின் ஐக்கியம் அன்று பரி. ஆவியின் வல்லமையால் சித்தியாயிற்று. இரு தாய்ச் சங்கங்களும் (S. P. G., C. M. S.) ஐக்கிய ஏற்பாட்டை அங்கீ கரித்து அத்தியட்சரவர்களின் ஆசிமொழியும் பெற்றுச்சென்றனர். அத்தியச்சாதீன ஆலோசனை சபை இந்த ஐக்கிய ஏற்பாட்டை உறுதிப்படுத்தும்முன்னரே இரு தாய்ச்சங்கங்களும் தம் பிரதிநிதிகளை நம்அத்தியட்சாதீனத்திற்கு அனுப்பி சிக்கலான விஷயங்களை நேரில் கண்டு அதனைச்சரிப்படுத்திக் கொண்டு பூரணதிருப்தியுடன் ஐக்கிய ஏற்பாட்டை அங்கீகரித்தனர்.

## அத்தியட்சாதீன ஐக்கிய ஏற்பாட்டின் அம்சங்கள்

பொது ஆளுகையும், பொதுப்பண நிதியும் இவற்றின் பயனுன அனுகூலங்கள் மட்டுமல்ல சபை அங்கத்தினர்களுக்குள் (Laity) அத்தியட்சாதீனத்தைப் பற்றிய பொறுப்பும் கடமையும் ஏற்பட ஏதுவாயிற்று. குருக்களும் சபைப் பிரதிநிதிகளும் ஒன்று பட்டு சபையின் ஆளுகை, முன்னேற்றம், நிதிநிலை பிரச்சனைகள் ஆகிய இவற்றில் பங்கு கொள்ள வேண்டுமென்றநிலை உருவாகிற்று இப்புதிய ஏற்பாட்டின் சட்டத்தின்படி குரு ஆலோசனைச் சபை களும் குருத்தொகுதி ஆலோசனைச் சபைகளும் உண்டாயின. எனினும் பல கஷ்டங்களும் பிரச்சனைகளும் உண்டு. தேர்தல்களில் மிகுதியான சச்சரவுகளும் அபகீர்த்தியை உண்டாக்கும் செயல் களும் சபைகளில் காணப்பட்டன. ஆனல் காலம் செல்லச் செல்ல

ஒழுங்கும் உத்தம இலட்சியங்களும் நிலைபெற்று வரலாயின. இருசபைகளின் காரியங்களையும் மேற்பார்த்து ஆலோசிக்க மூன்று ஆலோசனை சங்கங்கள் ஏற்பட்டன (Church Councils) அவைகள் சர்ச் கவுன்சில்களென அழைக்கப்படுவதாகும். இவ்வமைப்பில் 1925 பெப்ருவரித் திங்கள் 13, 17, 20ம் நாட்களில் வட, மத்திய தென் கவுன்சில்கள் கூடலாயின. இரு சபைகளுக்கும் ஒரே பொக்கிஷதார் ஒரே காரியாலயம் இருந்தது. அத்தியட்சாதீனத்தின் பணச் செலவைச் சிக்கனப்படுத்திற்று.

இவ்வித உன்னத மாற்றம் அத்தியட்சாதீனத்தில் இருந்த போதிலும் 1924ம் ஆண்டு மார்ச் 11இல் கூடிய மகாசபையில் எதிர்ப்புக்கூறிய ஐவரும் சபைகளுக்குள் குழப்பத்தைஉண்டுபண்ண ஆரம்பித்தனர். சபை ஆராதனைகளின் பூர்வீக முறைகள் கட்டாயமாக மாற்றப்படுமென்றும். ஆலயங்களின்உள் அமைப்பு உரோமான் மார்க்க ஆலய உள் அமைப்புக்கு ஒத்து அமைக்கப்படுமென்று கூறி மக்களைத் தூண்டிவிட்டனர். இத்தூண்டுதல் சபைப் பெரியவர்களையும் ஏன் சில குருக்களையும் கூட தூண்டிற்று. ஆனால் 1924 மார்ச் 11இல் கூடிய ஐக்கிய தீர்மானத்தில் எந்த ஆலயத்திலும் பூர்வீக ஆராதனை முறை சபையின் சம்மதமின்றி மாற்றப்படுவதில்லை என்றும், சபையாரின் சம்மதமின்றியும் குருமாரின் சம்மதமுமில்லாமலும் S. P. G குருக்கள் C. M. S. சபைக்கும், C. M. S. குருக்கள் S. P. G. க்கும் மாற்றப்படுவதுமில்லை என்றும் இருந்த போதிலும் பிரிவினையில் கருத்துக் கொண்டவர்கள் இதை வெளிக் காட்டாது மாற்றத்தையே கூறி குழப்பம் கொழுந்துவிட்டெரியச் செய்தனர். அத்தியட்சர் ஆறுமாத காலம் தம் நாடு சென்றுர். அச்சமயத்தில் பிரிந்து போன சபைகள் (C. M. S. Evangelical Church) சி. எம். எஸ். சுத்தாங்க சபை என ஏற்படுத்திக் கொண்டு தங்களுக்குக் குருக்களையும் ஏற்படுத்திக் கொண்டனர். அத்தியட்சரின் விடுதிக்காலத்தில் சென்னை அத்தியட்சாலயத்தின் பிரதம குருவான H. C லோஸ்பி (Losbe) என்பவர் அத்தியட்சர் கமிஷரியாக நியமனம் பெற்றிருந்தார். அவர் செப்டெம்பர் திங்கள் 2ம 3ம் நாட்களில் பிரிந்து நின்ற ஆழ்வாநேரி சென்று குருக்களையும் சபைபிரதிநிதிகளையும் அழைத்து குருக்களின் ராஜிநாமாவை வாபஸ் பெற்றுக்கொள்ளவும் அத்தியட்சர் வருமளவும் சுத்தாங்க சபை அமைப்பை நிறுத்தி வைக்கவும் வருந்திக்கேட்டும் பயனில்லாது போயிற்று. ஐக்கிய ஏர்பாட்டை முற்றிலும் ஏற்றுக்கொண்ட பகுதிகளும் இந்தப்பிரிந்துபோன சபைகளுக்குள் இருந்தன. இவர்களுக்கென்று ஆழ்வாநேரிக்கு ஒரு குரு நியமிக்கப்பட்டார். இது பெருந்த் சச்சரவுகளையும், சண்டைகளையும் உண்டாக்கி அரசு

தியாயஸ்தலங்களுக்குச் சென்றனர். இது திருநெல்வேலி அத்தியட்சாதீன வளர்ச்சிக்கும் கிறிஸ்துவின் நாமத்திற்கும் குந்தம் விளைவித்தது. ஆழ்வாநேரி செவல் ஆகிய இரு குரு தொகுதிகளில் அத்தியட்சாதீனர்திற்கு ஆதரவு காட்டிய மக்கள் தங்களுக்கு சென்னை அத்தியட்சரின் விசாரணையே வேண்டுமென்று ஒரு விசேஷித்த வேண்டுகோள் விடுத்தனர். இதற்கு இணங்கி மகாகனம் திருநெல்வேலி அத்தியட்சர் கனம் C. T. செல்வின் ஐயரை சென்னை அத்தியட்சரின் பிரதிநிதியாக அவர்களுக்கு ஏற்படுத்தி குருக்களுக்கும் சபையாருக்கும் அடுத்த விஷயங்களைக் கவனிக்கத் திட்டம் செய்தார். இந்நியமனமும் சேவையும் கனம் G. T. செல்வின் ஐயரை நெல்லைக்கே ஏழாவது அத்தியச்சராகும் வாய்ப்பினை உருவாக்கும் பயிற்சியினைக் கொடுத்தது. இப்பிரிவினை சாத்தான் குளம் குருசேகரத்திலுள்ள தச்சன்மொழியையும் பிடித்தது. இவர்கள் தனி ஆளுகை செய்து வந்தனர். ஆனால் 1925 ஜுன் மாதத்தில் மீண்டும் அத்தியட்சாதீன ஐக்கியத்தில் சேர்ந்தனர். இவர்கள் திரும்பியது அத்தியட்சாதீன ஐக்கியத்தால் C. M. S. கொள்கையில் எவ்வித மாற்றமுமில்லை, 'விசுவாச சத்தியங்களுக்கும், உபதேசங்களுக்கும் எவ்வித பங்கமும் இல்லை என்பது மற்றவர்களும் சிந்திக்க ஏதுவாயிற்று.

அத்தியட்சர் 1924ம் ஆண்டு பெப்ருவரி திங்கள் எழுதிய நிருபத்தில் C. M. S., S. P. G. ஆகிய இரு சபைகளும் ஒன்றுபடுவதுதான் அத்தியட்சாதீன ஐக்கியத்தின் குறிக்கோள் என்று கூறிவிட முடியாது. திருநெவேலி அத்தியட்சாதீனமானது தனது குழந்தைப் பருவம் கடந்து புருஷத்துவம் அடைந்து மேலை நாட்டுச் சபைச் சங்கங்களைச் சார்ந்து நில்லாது தனித்தியங்கும் நிலைக்கு வளர்ச்சியுடையதாயிற்று என்பதே ஐக்கியத்தின் கருத்து. ஐக்கிய ஏற்பாட்டால் சிலசபைகள் பிரிந்து நின்ற போதிலும் அவர்கள் நம் C. M. S. கொள்கைகளையே அடிப்படையாகக் கொண்டுள்ளனர் எனவே அவர்கள் நம் விரோதிகள் அல்ல. அவர்களும் நம்மில்ஒருவர் என்னும் கருத்தோடு சமாதானமாய் இருக்க வேண்டுமென்றார். பிரிந்தவர் திரும்பிக்கொண்டே இருக்கிறார்கள். காலம் செல்லச்செல்ல பரிசுத்தாவியின் வல்லமை பிரிவினையை ஒழித்து ஒரே மந்தையும் ஒரே மேய்ப்பனுமாகும் நிலைக்கு ஆக்கிவிடும் என்றார்.

திருச்சபைகள் ஐக்கியமடைந்து ஒரே பொதுவான அப்போஸ்தல திருச்சபை ஆகவேண்டுமென்ற இலட்சியம் 1920ல் லாம்பத் மாளிகையில் கூடின அத்தியட்ச மகாசபையில் உதித்தது. திருச்சபை ஐக்கியத்தின் கிளர்ச்சிக்கு மகாகனம் றப்ஸ் அத்தியட்சர் எவ்வளவு பக்கபலம் அளித்தார் என்பது நமது ஆராய்ச்சிக் குரியது.

ஆங்கிலசபை அத்தியட்சர்கள் அதற்கு ஆதரவு காட்டினர். பம்பாய் பால்மர் அத்தியட்சரும் சென்னை வாலர் அத்தியட்சரும் ஐக்கிய துணிவுக்குத் தோள் கொடுத்து உதவியவர்கள் எனலாம். அத்தியட்சர் தமது நிருபங்களிலெல்லாம் நமது அத்தியச்சாதீன ஆலோசனை சபையானது திருச்சபை ஐக்கியத்தை ஒப்புக்கொள்ளவும் ஐக்கியத்தை முன்னேற்றி வைசகவும் ஊக்கம் காட்டி வந்தார் திருச்சபை ஐக்கியத்தின் காரணத்தால் ஏற்பட்ட கிளர்ச்சி சம்பந்தமாய் ஏற்படுத்தப்பட்ட பிரதிநிதிகளின் உபசங்கத்தில் (Joint Committee) அங்கமாக இருந்து நடைபெறும் கூட்டங்களில் உயரிய ஆலோசனைகளைக் கூறிவந்தார். 1926 ஆம் ஆண்டு பெப்ருவரியில் கூட்டப்பட்ட உபசங்கத்தில் நம் அத்தியட்சரும் பம்பாய் சென்னை அத்தியட்சர்களும் கலந்து கொண்டனர். இதில் இந்திய பிரதிநிதிகள் ஐக்கியப்பாட்டை யார் கைவிட்டாலும் தாங்கள் நிறைவேற்றியே தீருவோம் என்று உறுதிபடக் கூறினார்கள். ஐக்கிய திருச்சபையில் குருத்துவ அபிஷேகத்யையும், பரி நற்கருணை ஆராதனை முறைமையையும் அதில் பங்கு பெறுவதைக் குறித்தும் செய்யப்பட்ட நடவடிக்கைகள் யாவராலும் அங்கிகரிக்கப்பட்டன. மகாகனம் றப்ஸ் அத்தியட்சரின் திருச்சபை ஒருமைப்பாட்டுச் செயல் உலகமெங்குமுள்ள சபைகளின் ஐக்கியத்திற்கு அடிகோலிற்று- மேற்கூறிய உபசங்கத்தில் உருவாகிய ஐக்கிய திருச்சபைக் கப்பலைச் சின்னபின்னமாக நொறுக்கக்கூடிய பயங்கர வாதங்கள் பேதங்கள் எழும்பின. ஆயினும் இறுதியில் கப்பல் ஐக்கிய தீர்மானங்களுடன் கரை சேர்ந்தது.

## இந்திய சபை ஏற்பாடு (Indian Church Measure)

இவ்வேறபாட்டை நிலைநிறுத்துவதற்கு நம் அத்தியட்சர் விடாமுயற்சியோடும் ஊக்கத்தோடும் உழைத்தார். அதின் பலனால் 1923 அக்டோபர் மாதத்தில் கூடிய அத்தியட்சாதீன காரியநிர்வாக சபையார் இந்த ஏற்பாட்டை அங்கிகரித்தனர். 1924 மார்ச்சு மீ 11ம் நாளில் கூடிய அத்தியட்சாதீன ஆலோசனை சபையும் இவ்வேற்பாட்டை ஒப்புக்கொண்டு இந்தியாவில் உள்ள திருச்சபையானது இப்முறையினால் மட்டும் அபிவிருத்தி அடைவதற்கு சுயாதீனமும் இத்தேசத்திற் குரியதான தன்மையும் பெறக்கூடும் என்று தீர்மானித்தது. இந்திய திருச்சபை சரித்திரத்திலே உண்டான இந்த மகத்துவமான ஏற்பாடு 1930 செப்டம்பர் மாதத்தில் நிலைநாட்டப்பட்டு இந்திய திருச்சபை என்றாயிற்று.

அத்தியட்சாதீனத்தில் உண்டான புதிய சட்டங்களால் அமைந்த அத்தியட்சாதீன ஆலோசனை சபைகள், கவுண்சில்கள் அத்தியட்சாதீனத்தின் பொக்கிஷம், பணக்கணக்கு, சம்பளம்,

குருக்கள் நியமித்தல், மாறுதல் ஆகிய வெளிவிவகாரங்களைக் கவனித்து வந்தது. ஆனால் திருச்சபையின் ஆராதனை முறைகள் விசுவாசக் கொள்கைகள், சத்தியங்கள் முதலிய உள்ளான விஷயங்களைத் தனியாகக் கவனிக்க அத்தியட்சாதீன குருசங்கம் (Synod) ஏற்படுத்தப்பட்டது.

இது 1928ம் ஆண்டு மார்ச்சு மீ 13—14ம் நாட்களில் அத்தியட்சர் தலைமையின் கீழ் அத்தியட்சாதீன ஆலோசனை சபை ஆலோனைப்படி நூற்றாண்டு மண்டபத்தில் உருவானது. இதன் தலைவர் அத்தியட்சர் குருப் பட்டம் பெற்ற குருக்கள் அனைவரும் அதில் அங்கங்கள். சபைப்பிரதிநிதிகளுக்கு இதில் இடம் கிடையாது. கூடும் உதவி குருக்களுக்குச் சம்மதம் கொடுக்கும் பாத்தியதை கிடையாது. இது அத்தியட்சருக்கு ஆலோசனை கொடுக்கும் சங்கமாக மட்டும் செயல்பட்டது.

## தாழ்த்தப்பட்ட மக்களிடத்து காட்டிய கருணை

நமது அத்தியட்சர் காலத்தில் அத்தியட்சாதீனப் பகுதியில் 700 000 தாழ்த்தப்பட்ட பிறசமய மக்கள் இருப்பதாக அத்தியட்சரின் கணக்கு. இவர்களைத் திருச்சபை மந்தையில் சேர்க்க ஆவியானவரால் உந்தப்பட்டார். இவ்வுபரிய எண்ணத்தை தமது நிருபங்களிலும், ஆலோசனைச் சங்கங்களிலும் எடுத்துக் கூறினார். அத்தியட்சாதீன ஆலோசனைச் சபையானது இதை ஏற்று ஆரம்ப காலத்தில் ரூ 15,000 தேவை எனவும் பின் 5 வருடங்களுக்கு 50,000 தேவை எனவும் சபைகளுக்கு எடுத்துக்கூறி வேண்டுகோள் விடுத்தனர். அத்தியட்சர் தமது மேலைநாட்டு நண்பர்களுக்கும் எழுதி உதவிகோரினார். 1924 இல் தம் குடும்பத்தோடு 4 மாத ரஜாவில் தம் நாடு சென்றார். பிறபல கோவில்களிலும், ஸ்தாபனங்களிலும் இந்நோக்கத்தை எடுத்துரைத்தார். 1927 இல் மீண்டும் இங்கிலாந்து சென்றிருக்கையில் முயற்சித்து ஆண்டுக்கு ரூ. 6000 வரும் நிலைக்கு வழிவகுத்து விட்டார். இப்பணத்தை சேகரித்து நம் நாட்டுக்கு அனுப்பும் பொறுப்பை அவரது சகோதரன் கனம் சிற்னி றபஸ் என்பாரிடம் ஒப்படைத்தார். சென்னை அத்தியட்சர் மகாகனம் வைற்ஹெட் அத்தியட்சரும் அவரது பாரியாரும் பெருந்தொகை கொடுத்து ஊழியத்தை ஊக்குவித்தனர். பிறநாட்டு மக்கள் இத்தகைய ஆர்வம் காட்ட நம்மக்கள் தம் மக்கள் வாளா இருப்பது ஒவ்வாதெனக் கருத்துக் கொண்டு 'ரேனியஸ் வாரம்' என்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தி ஒவ்வொரு ஜுலை மாதத்தின் முதல் வாரத்தில் கொண்டாடப்பட்டது தற்பொழுது அது சுயவெறுப்பு காணிக்கையாகச் சேகரிக்கப் படுகிறது.

1926 இல் கூடிய தம் ஆலோசனை சங்கத்தார் வடதிருநெல் வேலிக்கும் தென் திருநெல்வேலிக்கும் மேற்கூறிய ஊழியத்திற்கு இரு புறதேச ஊழியரை வருவிக்க வேண்டுமென்றும், நாட்டு ஊழியர்கள் திறமை பெறும்படி கீழக்கரை கனம் ஜாண்சாமுவேல் ஐயரால் பயிற்சிக்கூடம் ஒன்று நடத்தப்படல் வேண்டுமென்றும் தீர்மானித் தார்கள். ஆரம்பத்தில் 10 பேர் பயிற்சி பெற்றனர். 1925ம் ஆண்டு தம் நாடு வந்த கனம் ஸ்டீபன் நீல் ஐயர் 1926ம் ஆண்டு இவ் வூழியத்திற்குத் தம்மை அர்ப்பணித்து தாம் அத்தியட்சாதீன வேத சாஸ்திரக் கல்லூரிக்குத் தலைவராகும் வரை இவ்வூழியத்தைச் செய்து வந்தார். ''ரேனியஸ் வாரம்'' என்ற சுயவெறுப்பு வார முயற்சியை ஊக்கத்துடன் நடத்த மல்கியா 3-10ம் வசனத்தை குருக்களுக்கும் ஊழியருக்கும் அனுப்பி வைத்தார். ஊழியத்தில் கர்த்தருடைய ஜெபத்தையும் விசுவாசப் பிரமாணத்தையும் மட்டும் அறிந்தால் ஞானஸ்நானம் கொடுக்கலாமென்ற பழக்கம் நிறுத்தப் பட்டு மக்கள் தாங்களாகவே பக்தியோடும் ஆவலோடும் ஜெபம் செய்யும் பழக்கத்திற்குள் வந்திருக்க வேண்டும் என்பதை அத்தியட் சர் வலியுறுத்தினர்

இவ்வூழியத்தின் பயனால் 1926ம் ஆண்டு ஜூலை மாதத்தில் பன்னீர்குளத்தைச் சேர்ந்த கச்சேரியில் அநேகக் குடும்பங்களுக்கும் 1927 ஜனுவரியில் கீழக்கரையைச் சேர்ந்த மாரியூரில் தாழ்த்தப் பட்ட மக்கள் 44 பேருக்கும் திருமுழுக்கு கொடுக்கப்பட்டது. பாப்பாங்குளத்திலும் வேங்குளத்திலும் அவர்களுக்கென கட்டிய கோவில்களை அத்தியட்சர் பிரதிஷ்டை செய்தார். நெல்லை வாழ் மக்கள் ஆலயம் கட்டுவதில் ஆர்வங்கொண்டார்கள். தம் அத்தியட் சர் நெல்லையை ''கோவில்கள் கட்டிக் கொண்டே இருக்கும்'' திருச்சபை என பெருமைப்படக் கூறியுள்ளார். இவரது 6 ஆண்டு ஊழியத்தில் 70 புதிய கோவில்களை பிரதிஷ்டை செய்துள்ளார். அவற்றில் சிவகாசி ராக்லன்று ஆலயமும், கைலாசபுரம் பரி. பேதுரு வின் ஆலயமும், நாசரேத் பரி யோவான் ஆலயமும் விசேஷித்த வைகள். சிவகாசி ராக்லன்று ஆலயம் 1917 ஜூன் மீ 29ம் நாள் பரி. பேதுருவின் திருநாள் அன்று கனம் வாலர் அத்தியச்சரால் அடிக்கல் நாட்டப்பட்டு, 1925ம் ஆண்டு டிசம்பர் மீ 29ம் நாள் மகாகனம் றப்ஸ் அத்தியசட்ரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. கனம் ராக்லன்று ஐயர் மரித்தும் இன்றும் பேசுகிறார் என்பதற்கு இவ்வாலயம் புறமதத்தினர் மத்தியில் எழுந்து நின்று காட்சி அளிக் கிறது. கைலாசபுரம் பரி. பேதுருவின் ஆலயம் 1925 ஏப்ரல் 14 இல் அஸ்திவாரமிடப்பட்டு மகாகனம் றப்ஸ் அத்தியச்சர் மறு வருஷத் திலேயே 1926 ஜூன் 25இல் பிரதிஷ்டை செய்தார். நாசரேத் பரி யோவான் ஆலயம் அஸ்திவாரமிடப்பட்டு பத்து ஆண்டு

களாகக் கட்டப்பட்டு 1928ம் ஆண்டு மார்ச்சு மீ 12ம் நாள் திங்கட்கிழமை மகாகனம் றப்ஸ் அத்தியட்சரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இவ்வாலயத்தைக் கட்டி முடிக்கும் திறமையும் சிறப்பும் கனேன் D. கோயில்பிள்ளை B. A. ஐயரவர்களைச் சார்ந்த தாகும். சுமார் 1 லட்சம் ரூபாய் செலவாயிற்று சபை மக்கள் கொடுத்த தொகை 20000 ஆகும். S. P. G., S. P. C. K. சங்கத் தாரும் பணம் கொடுத்துதவினர். அயல் நாடுகளுக்குச் சென்று கனம் கோயில்பிள்ளை ஐயர் பணம் பிரித்ததும் உண்டு. பிரதிஷ்டை யின் போது திரு M. S. அப்பாத்துரை அவர்கள் பத்திரம் வாசித் தனர். அன்று பரி. நற்கருணை பெற்றவர் 1500 பேராகும். இது சுமார் 4000 பேர் கூடி ஆராதிக்கும் விரிவான ஆலயமாகும். இவ்வாலயம் கண்ட அத்தியட்சர் ஓர் அத்தியட்சாலயம் 6000 பேர் கூடித்தொழும் வகையில் ஏன் கட்டக்கூடாதென்ற எண்ணம் கொண்டார். பரி. யோவான் கல்லூரி பக்கம் 5 லட்சம் செலவில் கட்டத்திட்டமிட்டார். ஆனால் வாய்க்காது போயிற்று. பரி. திருத்துவ ஆலயமே அத்தியட்சாலயமாயிற்று.

ஸ்தேவான் நீல் அத்தியட்சர் காலத்தில் பாளையங்கோட்டை நம் அத்தியச்சாதீனத்திற்கு மேல் நாட்டு ஊழியர் அவசியமெனக் கருதி தாம் 1924ம் ஆண்டில் இங்கிலாந்து சென்றிருந்த சமயம் பரி. யோவான் கல்லூரிக்கு கனம் C. W. F. பௌற் ஐயரையும், கனம் A. R. பென் ஐயரையும், சாராள் டக்கர் கல்லூரிக்கு சேம்பர்ஸ் அம்மாளையும், வைத்திய வேலைக்கு Dr. ஜோன்ஸ் அம்மாளையும் அவருக்கு உதவியாக பர்ன் அம்மாளையும் பணி செய்யத் தேர்ந்தெடுத்தார். மற்றும் பல வேலைகளுக்கு கனம் J. கிங்டன் குருவையும், கிங்டன் அம்மாள், வைல்ஸ் அம்மாள், பிரின்ஸ் அம்மாள் ஆகியோரைத் தெரிந்தார். நெல்லை நகரில் இருந்த C. M. கல்லூரியானது பரி. யோவான் கல்லூரி என 1925ம் ஆண்டு நவம்பர் திங்கள் 24ம் நாள் சென்னை மாகாண அதிபதி கோஷென் பிரபுவால் பாளையங்கோட்டையில் அடிக்கல் நாட்டப்பட்டது. 1928ம் ஆண்டு மார்ச்சு மீ 12ம் நாள் சென்னை நீதி மன்ற அதிபர் திரு M. D தேவதாஸ் என்னும் பெரியார் கல்லூரியைத் திறந்து வைத்தனர். விழாத்தலைவர் நம் அத்தியட்சர் மகாகனம் றப்ஸ் அத்தியட்சரே.

1926ம் ஆண்டு மார்ச் மாதத்தில் உலகப் பெரியார் ஜோன்ஸ் பண்டிதர் C. M. கல்லூரி வளாகத்தில் 5 நாட்கள் கிறிஸ்தவ உபநியாசங்கள் செய்ய அத்தியட்சர் ஒழுங்கு செய்திருந் தனர். அவரின் இறுதி நாள் உபநியாசம் புறமதப் பண்டிதர்கள் பலரை அழைத்தது. அதே ஆண்டு ஜூன் மீ 8ம் நாள் அத்தியட்

சாதீன குருக்களுக்கு அத்தியட்சர் தம் முதலாவதான கட்டளை உபதேசம் கொடுத்தார். அடுத்தநாள் கெஸ்விக் கிளர்ச்சியைச் சேர்ந்த கனம் J. A. பீவன் குருவும், W. B ஸ்லோன் பிரசங்கியாரும் அத்தியச்சாதீன குருக்களுக்கும் ஆங்கிலம் தெரிந்த சபையாருக்கும் ஆவிக்குரிய கூட்டங்கள் நடத்தினர். இதுவும் அத்தியட்சர் செய்து கொண்ட ஏற்பாடாகும்.

### வைத்திய பணி

இதுவரை C. M. S. பகுதிகளில் வைத்திய ஸ்தாபனம் ஒன்றுகூட இல்லை. இதனை ஒரு பெருங்குறையாக அத்தியட்சர் எண்ணினார். 1926ம் ஆண்டு மே மாதத்தில் குருத்தொகுதி பிரபுகர்களும், நண்பரும், சபையாரும் சேர்ந்து மெஞ்ஞானபுரத்தில் மருத்துவச்சாலை ஒன்றை ஏற்படுத்தினர். Dr. A C. மதுரம் அவர்களின் முயற்சியால் இரணசிகிச்சை அறை ஒன்றும் நோயாளிகளின் படுக்கை அறையும் கட்டி மூடிக்கப்பட்டு ஜுன் 26ம் நாள் டீப்ஸ் அத்தியட்சரால் திறந்து வைக்கப்பட்டது. இன்று இவ் வைத்தியசாலை இல்லாது போயிற்று மருத்துவப்பணி முன்னேற்றசாரபாக 1927ம் ஆண்டு மார்ச் 10, 11 ஆகிய நாட்களில் நடைபெற்ற அத்தியட்சாதீன மகாசபையில் வைத்திய ஊழிய நிர்வாக சபை என்ற ஒரு புது அமைப்பு ஏற்படலாயிற்று.

1926ம் ஆண்டு டிசம்பர் மீ 21ம் நாள் பரி. திருத்துவ ஆலயத்தில் மகாகனம் டீப்ஸ் அத்தியட்சர் ஸ்தேவான் நீல் என்ற வாலிப ஊழியருக்கு உதவி குருப்பட்டம் கொடுத்தார். ஆல்பேகல்லூரித் தலைவர் கனம் W. E. S. ஹாலந்து பண்டிதர் ஆராதனையில் பிரசங்கித்தார். தமக்குப் பின்னுல் தம் அத்தியட்ச ஆசனத்தில் வீற்றிருப்போருக்கு குருத்துவப் பணியில் சேர்க்கும் அபூர்வ சமயம் டீப்ஸ் அத்தியட்சருக்குக் கிடைத்தது. 1927ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் லாசேன் நகரில் நடைபெற்ற அகிலலோக திருச்சபை மகாநாட்டிற்கு இந்திய திருச்சபையின் பிரதிநிதிகளாக தோர்ணக்கல திருநெல்வேலி அத்தியட்சர் ஆகிய இருவரும் பங்கெடுக்கும் வாய்ப்பு பெற்றனர்.

### வேதாகம மொழி பெயர்ப்பு

1923 இல் தமிழ்ப் பாஷை நிபுணர்களும், வல்லுனர்களும், பலபிரிவான தமிழ்ச்சபை பிரதிநிதிகளும் ''ஐக்கிய மொழி பெயர்ப்பு'' (Union Version) வேதாகமத்தில் குறைபாடுகள் உண்டெனக்கருதி மீண்டும் மொழி பெயர்க்க வேண்டுமெனக் கருத்துக் கொண்டனர். வேதாகமச் சங்கத்தாரும் இதற்கு இசைந்து தமிழ்ப்பாண்டித்தியம் பெற்ற டேனிஸ் சபையைச் சேர்ந்த L. R லாசன் என்னும் வேத

சாஸ்திரப் பண்டிதரையும், பாளையங்கோட்டை வாசியும் தமிழ் புலமையும் கொண்ட P. S. துரைசாமிப்பண்டிதரையும் நியமித்து, இவர்கள் மொழி பெயர்ப்பை மேற்பார்வையிடவும், பரீட்சிக்கவும் எல்லா சபைகளிலிருந்தும் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளு மடங்கிய ஒரு விரிந்த சங்கத்தை ஏற்படுத்தினர். அனுபவம் முதிர்ந்த வயது சென்றவரான கனம் D. S. தாவீது ஐயர் நமது பிரதிநிதியாகப் பணி ஏற்றனர். இம்மொழி பெயர்ப்பை விரும்பா தோர் வேதாகமத் தூய்மையைப் பழுதுபடுத்தும் முயற்சி நடக்கிற தென வதந்தி எழுப்பி அபிப்பிராயப் பேதங்களை உண்டு பண்ணினர்.

இது கண்ட நப்ஸ் அத்தியட்சர் மக்கள் மனதைச் சாந்தப் படுத்த வெளியாகும் மொழிபெயர்ப்பை மக்கள் உடனுக்குடன் வாசித்து தத்தம் கருத்துக்களை தைரியத்தோடு எடுத்துக்காட்ட அவகாசம் கொடுத்தார். நிற்க கனம் D S. தாவீது ஐயரையும் வேதாகமச் சங்கப் பிரதிநிதி A. C. கிளேற்றன் பண்டிதரையும் திட்ட வட்டமானதும் உண்மையான விஷயங்களையும் நற்போதகத்தில் அப்போதைக்கப்போது எழுதி மக்களுக்குத் தெளிவுபடுத்தும் ஏற்பாட்டையும் அத்தியட்சர் செய்து வைத்தார்.

### அத்தியட்சர் காலத்திய திவான்பகதூர் A. S அப்பாசாமி

திருநெல்வேலி திருச்சபை ஆதிப்பிதாக்களில் ஒருவர் இவர் 1840ம் ஆண்டு குலசேகரன் பட்டிணத்தில் ஒரு சைவ மதக்குடும் பத்தில் பிறந்தவர். இவரது இயற்பெயர் சுடலையாடும்பெருமாள். இவரது தாய் தந்தையர் இந்து மதத்தில் அதிக வைராக்கியம் கொண்டவர்கள். குலசேகரன் பட்டிணத்தில் உள்ள C. M. S. கல்விச் சாலையில் கல்வி பயின்றார். பின்னர் பாளையங்கோட்டை யில் சுபோதகரான குருக்ஷாங் துரை நடத்திவந்த கல்விச்சாலையில் இவருடன் ஆறு மாணவர்கள் இப்பெரியாரின் உத்தம வாழ்க்கை யிலும் அன்பிலும் ஈர்க்கப்பட்டு இயேசு பெருமானின் தொண்டர் ஆயினர். அவர்களில் ஒருவர் பாளையங்கோட்டை வாசியும் தமிழ் வித்துவானுமான முத்தையாபிள்ளை என்பார் இவர் கிருஷ்ணபிள்ளையின் தம்பியாவார். இவர் தன் தமையனை கிருஷ்ணபிள்ளையைக் கிறிஸ்துவண்டை கொண்டு வரும் கருவி யானார். இவர் கிறிஸ்தவராக சாயர்புரம் கல்விச்சாலையில் தமிழ்ப் பண்டிதராய் பணி செய்த காலத்தில் அவரிடம் அப்பாசாமி கல்வி கற்கச் சென்றார். இவரது கிறிஸ்தவ வாழ்க்கையும் அப்பாசாமியை வெகுவாய்க் கவர்ச்சித்தது. 1871 ஜுலை 11ம் நாள் சென்னை சிந்தாரிப்பேட்டை சீயோன் ஆலயத்தில் ஞானதீட்சை பெற்றார்.

பின் கல்வி கற்று ஒரு வழக்கறிஞர் ஆனார். இறைவர் இவருக்கு பெருஞ்செல்வத்தைக் கொடுத்திருந்தார். ஆயினும் இவர் மனச் செருக்கு கொள்ளாது பணம் இறைவன் தந்ததெனவே எண்ணுவார். தெய்வ அருள் பெற்றவர். தம் செல்வத்தை ஏழைகளுக்கும், இனத்தவருக்கும், புது ஆலயங்களுக்கும், பொதுஸ்தாபனங்களுக்கும், சமூக முயற்சிகளுக்கும் அள்ளிக்கொடுத்தவர். இவரது பெரும் சேவைக்காண்டு 1919ல் ராவ்சாகிப் பட்டமும், 1923 இல் திவான்பகதூர் என்ற பட்டத்தையும் அரசு அவருக்கு வழங்கிற்று.

இவர் இந்திய மிஷனெரி சங்க ஆரம்பத்திற்கு ஆதிபுருஷர்களில் ஒருவர். தம் பொருள் கொண்டு தெலுங்கு நாட்டு ஊழியரைத் தாங்கினார். ஊழியத்தில் பலர் விசுவாசியிருந்து ஊழியம் செய்ய வேண்டுமென்ற நோக்குடையவர். இவர் தமது முதுமைக்காலத்தில் ஐம்புலன்களையும் அடக்கிச் சமாதி நிலையில் கடவுளுடன் அமர்ந்திருப்பார். இப்பழக்கத்தை புஸ்தக ரூபமாக மக்களுக்கு வெளியிட்டார். பிறருக்குப் புகட்டியும் வந்தார்.

இவர் 1926ம் ஆண்டு கொடைக்கானலில் இருக்கையில் ஏப்ரல் 13ம் நாள் பரம வீடடைந்தார். அவருக்கு வயது 78 ஆகும்.

**அத்தியட்சரின் தனிச்சிறப்பு**

பிரசங்கத்தில் வல்லமையும், சாதுரியமும், திறமையுமுள்ளவர் சந்தர்ப்பத்திற்கேற்ற வேதவாக்கியங்கள் எடுத்து புதிய கருத்துக்களோடு மக்களைக் கவர்ச்சிக்கும் முறையில் பிரசங்கிப்பார். உரத்த தொனியுடையவர். தமிழ் வாசிக்கத் தெரிந்தவர் ஆராதனைகளைத் தடுமாட்டமின்றித் தமிழில் நடத்துவார். இவர் ஒரு பந்தாட்டவீரர். திடகாத்திரமுள்ளவர். அத்தியட்சாதீன 100 குருஸ்தானங்களையும் தம் ஐந்து வருட காலத்தில் இரண்டு மூன்று தடவை சந்தித்தார். ஏழு குருப்பட்ட ஆராதனை நடத்தி 33 பேரை குருக்களும் உதவிக் குருக்களுமாக்கினார். 198 திடப்படுத்தல் ஆராதனை நடத்தி 9548 பேரைத் திடப்படுத்தினார். ஒரு கணக்கின்படி அத்தியட்சாதீனத்துக்குள் 40,000 மைல்களும் அத்தியட்சாதீனத்திற்கு வெளியே 20,000 மைல்களும் பிரயாணம் செய்தவர். இவர் ஓர் அன்பர். யாவருடனும் பழகக்கூடியவர். இப்பண்பே சபைப் பிரிவினையின் பிளவை விரிவாக்காமல் குறைத்தது எனலாம். 1928ம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில், காந்தர்புரி பிரதம அத்தியட்சரிடமிருந்தும் இந்தியா மேற்றிராணியாரிடமிருந்தும் கட்டளை கிடைக்க அதைத்தெய்வ அழைப்பென ஏற்று ரங்கூன் அத்தியட்சப் பதவியை ஏற்றார். பின் இவ்வத்தியட்சாதீனத்தை விட்டு அத்தியட்சப் பதவியையும் நீத்து செஷஸ்டர் அத்தியட்சாலயத்தின் தலைமை குரு (Dean) ஆனார். இவரது ஊழியத்திற்கு உறுதுணையாயிருந்தவர் வெப்ஸ் அம்மையார் ஆவர். இவர் தாய்மார் சங்கத்தின் தலைவியாக இருந்து அரிய பல பணியாற்றியவர்.

—0—

# வெஸ்றரன் அத்தியட்சர்

## *இவரது காலம் (1929 — 1938)*

**சபை நிலை:—**

இவர் ஊழியத்தை ஆரம்பித்த காலம் நம் அத்தியட்சாதீனத்தின் ஒரு நெருக்கடியான காலம் எனலாம். S. P. G., C. M.S. ஆகிய இரு சபைகளும் தமக்குள் உள்ள பிரிவினை நீங்கி ஐக்கியப்பட்ட ஒரு காலமாயினும் இவ் விணைப்பால் ஒரு பிரிவினையும் உண்டாயிற்றென்று நாம் முன் அறிந்துள்ளோம். இது நீடித்துக் கொண்டே இருந்தது. பிரிவினை சபைகள் உள்ள சர்க்கிள்களில் மக்களுக்குள் மனக்கசப்பும், சண்டை சச்சரவுகளும் மலிந்து கிடந்தது. சபைகள் வளர்ச்சியடையாது சிக்குண்ட ஒரு காலம். மேலை நாட்டு மிஷனெரி மார்களின் உதவித் தொகையும் குறைக்கப்பட்ட காலமாகும். இந்நிலையில் ஆண்டவர் கிருபையால் நெல்லை அத்தியட்சாதீனம் சுபிட்சமடைய பக்தர் மகாகனம் பிரடெரிக் வெஸ்றரன் நியமனம் பெற்றார். அவர் சகோதர மன்றத்தின் தனி வாழ்க்கையில் பெரிது ஈடுபட்டவரெனினும் தாம் பெற்ற இப் பொறுப்பான ஊழியத்தைத் தமது பக்தி, சாந்தம், ஞானமாகிய வரங்களால் சிறப்புறச் செய்தார். சங்கடங்கள் மத்தியிலும் நெல்லை அத்தியட்சாதீனத்தை மலை மீதுள்ள விளக்காய் விளங்கச் செய்தார்.

மகாகனம் அத்தியட்சரின் பக்தி, அக்கால சடங்காசாரங்களைக் கடந்து நின்றதாகும். இரு சபைகளும் (C M.S., S.P.G.) தத்தம் சித்தாந்தங்களிலும் வழிபாடுகளிலும் மட்டும் பெருமை கொள்ளாது ஐக்கியமே பெரிதென எடுத்துக் கூறி வந்தார். ஐக்கியத்தால் ஏற்பட்ட பலாபலன்களை மக்கள் அறிய நற்போதகத்தில் எழுதி வந்தார். நெல்லை அத்தியட்சாதீனம் மேலை நாட்டு உதவிகளுக்குக் கையேந்தி நிற்காமல் சுய நிறைவில் நிலைபெற அத்தியட்சர் மக்களை ஊக்குவித்தார். சபைப்பிரிவால் 1930 ல் மூடிக் கிடந்த ஆழ்வாநேரி சர்க்கிள் கொங்கந்தான்பாறை சபை ஆலயம் திறக்கப்பட்டது. இவரது சீரிய பணியால் ஆனதாகும். இவர் சட்ட நிபுணர் பரம்பரையில் தோன்றியவர். சட்டமும் அறிந்தவர். பிரிந்த சபைகளைச் சேர்ப்பதும், ஆலயத்தைத் திறப்பதும் சட்டம் ஈடு செய்யாது கிறிஸ்துவின் அன்பே வல்லது எனக் கருத்துக்கொண்டு இரு பிரிவினரும் நெருங்கிப் பழகி அன்பு கொண்டு இணைய வேண்டுமெனக் கூறி வந்தார். பரி. விவாக சம்பந்தமாய் அக் குருக்கள் நடத்த தனி உரிமை அவர்களுக்குக்கிடைக்க நம்அத்தியட்சரே காரணம். திருநெல்வேலி சபை மற்ற சபைகளோடு உறவு கொள்வதிலும், பிற சபைத்



அருள் பெருந்திரு
பட்ரிக் வெஸ்ரர்ன்
1929—1938

தலைவர்கள் நம் சபையில் வந்து பழகுவதிலும் விரிந்த நோக்குடையவர். தென் இந்திய சபை ஐக்கிய விஷயமான பல ஏதுக்கள் இவர் காலத்தில் தோன்றலாயிற்று.

**சுவிசேஷ வாஞ்ஞை உடையவர்:—**

அத்தியட்சாதீனத்தின் உள் நாட்டு சுவிசேஷத்தில் கருத்துக் கொண்டதோடு வெளியிடங்களிலும் சுவிசேஷம் அறிவிக்கப்பட வேண்டுமென்ற எண்ணங் கொண்டவர். இவரது காலத்தில் இந்திய மிஷனெரி சங்கம் கடனில் இருந்தது. கவலை கொண்டார் இவரது கவலை முகத்தில் தோன்றிற்று. இது கண்ட (Chaplain) சேப்ளன் காரணம் கேட்க இந்திய மிஷனெரி சங்கம் கடனில் உள்ளதே என ஏங்கினாராம். இச் சங்கத்திற்கும் மற்றும் ஊழியங்களுக்கும் பல வகையில் துணை புரிந்தார். பிறர் கஷ்டம் அறிந்து, தம்மிடம் வந்தவர்க்கு இல்லை என்று கூறுது பணம் கொடுத்து வந்தார். அத்தியட்சாதீனத்தைத் திடப்படுத்தியதோடு கூட தாய்ச் சங்கங்களையும் தட்டி எழுப்பி ஊழியர்க்கும், பணம் கிடைக்க ஆவன செய்தார். மக்களின் சுவிசேஷ வாஞ்சையை வளர்க்க டாக்டர் பட்டர் பீல்ட் (Dr. Butterfield), Dr. ஸ்டான்லி ஜோன்ஸ், கரேன் கிளார்க் முதலிய மேல்நாட்டுப்பெரியார்களை வரவழைத்து விஷேசகூட்டங்கள் ஒழுங்கு செய்தார். அத்தியட்சர் தமது நிருபத்தில் எழுதியதாவது:- பட்டணங்களிலோ, கிராமங்களிலோ சுவிசேஷம் திடனாய் அறிவிக்கப்படும் பொழுது அதை ஏற்க அநேக மக்கள் ஆவலுடன் இருக்கிறார்கள். சுவிசேஷ வேலைக்கு வயல்கள் விளைந்திருக்கிறது என்றார். ஒரு பெரிய சபையைச் சந்தித்தார். அவர்களின் உபசாரத்திற்குப் பதில் கூறும் போது " உங்கள் சபை பெரிதென மதிக்கப்பட வேண்டுமாயின் அதன் ஜனத் தொகை கொண்டோ, பெரும் ஆஸ்தி உள்ளவர்களென்றோ இல்லாது மற்றவர்களைக் கவரும் உண்மையான கிறிஸ்தவ ஜீவியம் உள்ள சபையாயிருத்தல் வேண்டும்" என்றார்.

சமாரியா சபையில் பல்லாண்டுகளாய் நடைபெறுகிற சுவிசேஷப் பண்டிகைக்குச் சென்று ஊக்கமூட்டினர். 1932ல் சர்க்கிள் பாஸ்றரேட் கமிட்டிகள் கவனிக்க வேண்டுமென்று தாம் எழுதிய இரு குறிப்புகளில் சுவிசேஷ ஊழியம் ஒன்றாகும். சுரண்டை சர்க்கிள் சுற்றுப் பிரயாணத்தில் பலருக்கு ஞானஸ்நானம் கொடுத்தார். அம்மாதக் கடிதத்தில் " புதிதாகக் கிறிஸ்து மார்க்கத்திற்கு வருகிறவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பதை விட சுற்றுப் பிரயாணத்தில் எனக்கு சந்தோசத்தைக் கொடுப்பது வேறெதுவுமில்லை. சுவிசேஷ ஊழியம் ஊக்கத்துடன் செய்யப்படுமேயாயின் நம் கிறிஸ்தவ ஜீவியம் உண்மையும், உறுதியுமானதென்று காட்டுவதுடன் நம் ஜீவியம் அதிகமாய் கிறிஸ்துவில் ஸ்திரப்படும் " என்றார்.

1933 ம் ஆண்டின் ஆரம்பத்தில் அத்தியட்சாதீன பத்திரிகையின் பத்திராதிபர் "சுவிசேஷ ஊழியம் சென்ற ஆண்டில் மிகுந்த பலனைக் கொடுத்திருக்கிறது. பல சர்க்கிள்களில் பருவங் கடந்த ஞானஸ்நானங்கள் உண்டு. சில சர்க்கிள்களில் புதிய சில கிராமங்கள் வந்து சேர்ந்திருக்கின்றன. ஆழ்வாநேரி சர்க்கிளில் அசைவு இருக்கிறது அதிசயத் தக்கதெனக்" கூறியுள்ளார்.

அத்தியட்சர் பல தடவைகளிலும் விசேஷமாக 1935 ல் கவுன்சில் வாரியாக குருக்களைச் சந்தித்து சுவிசேஷ ஊழியத்தைப் பெரிதும் முயன்று நடத்த வேண்டிய முறைகளை ஒழுங்குபடுத்தினர்.

இந்திய மிஷனெரி சங்கம் பளியருக்குள் சுவிசேஷ ஊழியம் செய்து வருவது அத்தியட்சருக்கு அலாதிப் பிரியம். 1931 ம் ஆண்டு சிவகிரி பளியருக்குத் திடப்படுத்தல் ஆராதனை நடத்தினர். பளியர் சபை ஆரம்பமானபின் இதுவே முதற் தடவையாகத் திடப்படுத்தல் கொடுக்கப்பட்டது என நம்ப இடமுண்டு. பின் நடைபெற்றதா என்பது ஆராய்ச்சிக்குரியது. அத்தியட்சர் எழுதுகிறார்: "சிவகிரியில் பளியரைச் சந்தித்தேன். அவர்கள் மலைவாசிகள், பரம ஏழைகள், நாகரீகமற்றவர்கள், வேர்களையும், காட்டுத் தேனையும் தின்கிறார்கள் அவர்களில் சிலரைத் திடப்படுத்தினேன். அவர்களில் புத்தகப் படிப்பை நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால் உண்மையான கிறிஸ்துவ ஜீவியம் அவர்களிடம் உண்டென நிச்சயிக்கிறேன்."

இவர் அத்தியட்சாதீன முழுமையிலுமுள்ள பட்டணங்களிலும் கிராமங்களிலும், சுவிசேஷம் கேட்டிராத வீடுகளோ, தனிப்பட்ட மனிதனோ இருக்கக் கூடாதென்ற நோக்கோடு சுவிசேஷ திட்டங்களும், படை முயற்சிகளும் ஒழுங்கு செய்யப்பட்டன. ஐந்தாண்டுகளுக்குள் இத் திட்டம் பூரணப்பட வேண்டுமென ஆசித்தார். ஆனால் பூரணப்படாது போயிற்றென்பது வருந்தத் தக்கது.

இவரது காலம் வரை சுவிசேஷக் கூட்டங்கள், பழைய ஜோன்ஸ் பண்ட் ஊழியம் என்ற முறையில் நிறைவேற்றப்பட்டு வந்தது. ஆனால் இவர் தம் உடன் ஊழியரான கனம் நீல் ஐயர் மூலமாய் அப் பழைய கூட்டத்தைக் கலைத்து அத்துடன் குருப்பட்ட ஆரம்ப மாணவர்களைச் சேர்த்து, சிறு சிறு கூட்டங்களாகப் பிரித்து குருப்பட்டமாணவர் தலைமையில் அத்தியட்சாதீன முழுமையிலும் சுற்றித் திரிந்து ஊழியம் செய்ய ஒரு புதிய அமைப்பு உருவாயிற்று இவ்வமைப்பில் மூன்று குழுக்கள் ஊழியம் செய்தன. இவைகள் சுவிசேஷ ஊழிய மேற்பார்வையாளர் மூலம் செவ்வையாய்ச் செயல்பட்டன.

இவ்வூழியச் செலவினங்களுக்காக சொயலில் இருந்த சுய வெறுப்புக்காணிக்கை ஊக்குவிக்கப்பட்டது. தொகை பன்மடங்கு உயர்வடைந்தது. குறைந்ததற்கு தம் பணத்தைக் கொடுத்து அத்தியட்சர் ஊழியத்தை ஊக்குவித்தார்.

ஊழியத்தின் பயனால் ஏற்படும் சபைகளைச் சந்திப்பதில் அத்தியட்சருக்கு அலாதிப் பிரியம் உண்டு. அவ்விடங்களில் புது ஆலயங்கள் கட்டுவதிலும், புது ஊழியர்களை நியமிப்பதிலும் அத்தியட்சர் முனைந்துழைத்தார். புதுக் கிறிஸ்தவர்களின் ஆன்ம வளர்ச்சியிலும் கவலை கொண்டு அவர்களுக்கு ஞானதீட்சை கொடுக்கு முன் அவர்களின் விசுவாசத்தைச் சோதித்தறிவார். ஊழியர்களுக்கு ஆலோசனைகளையும், புத்திமதிகளையும் கூறி ஊக்குவிப்பார். புதிய கிறிஸ்தவர்களுக்கு ஏற்படும் துன்பங்களைத் தமதாகக் கருதி விடுதலை பெற உதவியும் செய்வார்.

இவரின் சுவிசேஷ வாஞ்சையே விடி வெள்ளி ஆச்சிரமத்தைத் தோற்றுவித்தது எனலாம். குமாரி ஜாய் சாலமோன் அம்மையாரும் குமாரி பிரான்ஸ் மாது சிரோன்மணியும் இவ்வாச்சிரம ஸ்தம்பத்தை நாட்டினர். 1932 ம் ஆண்டு இவ்விரு ஊழியர்களையும், மற்றும் சில நண்பர்களையும் தம் இல்லத்து ஜெப வீட்டிற்கு அழைத்து பிரார்த்தனையுடன் பரி. நற்கருணை ஆராதனையில் பிரதிஷ்டை பண்ணினர். தம் பணிமூட்டுகளுடன் வாகைக்குளம் சென்றனர். அன்று அங்கு தவச உற்சவம். மாலையில் சாயமலைக்குப் போய்ச் சேர்ந்தனர். அச்சம்பட்டி குருவானவர் கனம் பால் மாணிக்கம் ஐயரவர்களும் அவர்கள் குடும்பமும் ஆதரவு கொடுத்தனர். 1932ம் ஆண்டு ஜூன் மாதம் 11ம் நாள் பரி. பர்னபாவின் திருநாளன்று வேலை ஆரம்பமாயிற்று. இது ஒரு பயங்கர சுற்றுப்புற மக்கள் வாழ் இடமாகும். இவ்விரு பெண்களின் அரிய சேவையாலும், உழைப்பாலும் 1938 ம் ஆண்டு ஜனவரி திங்களில் ஓர் விதவையும், அவளது மகனும் மகளும் திருமுழுக்குப் பெற்றனர். அவ்விளைஞன் பர்னபா என்றழைக்கப்பட்டான். கல்விச்சாலை, மற்றும் பரோபகார சாலைகள் ஸ்தாபிக்கப்பட்டன, சபை வளர ஆரம்பித்தது. இது இன்றும் நிலைத்து இந்திய மிஷனெறி சங்கத்தின் ஆதரவில் நடைபெற்று வருகிறது. ஓய்வு பெற்ற கனம் மெல்கிசெதேக் ஐயரும் இதன் தற்போதைய ஊழியராவர். ஆகவே மகாகனம் வெஸ்றர்ன் அத்தியட்சரை ஒரு "சுவிசேஷக அத்தியட்சர்" என்றழைப்பது மிகையாகாது.

**கல்வி அபிவிருத்தித் திட்டம் :-**

கிறிஸ்தவ வாழ்க்கைக்கு சிறுவர் கல்வி அவசியமெனக் கருதி 1931 ம் ஆண்டு சிறுவர் கல்வி பற்றி ஒரு நிருபம் எழுதினார். குருக்களுக்குக் கொடுத்த தம் கட்டளைப் பிரசங்கத்தில் சிறுவர் கல்வி பற்றியும் ஆலய ஆராதனை பற்றியும் எடுத்துக் கூறினார். கிராமங்களில் ஆராதனைகள் யாவருக்கும் விளங்கத்தக்க முறையில் நடைபெறப்பெரிதும் முயன்றார். கிராம நிலைக் கேற்ப பாட அட்டவணைகள் அமைத்தார். விசேஷ காலங்களுக்கேற்ற சிறுசிறு ஆராதனைகளும், ஜெபங்களும் இயற்றி வெளியிட்டார். அத்தியட்சாதீன ஆராதனை முறை கழகத்தைக் கொண்டு செய்த அவரது பணி என்றும் நம் அத்தியட்சாதீன வாழ்க்கைக்குப் பெரிதும் பயன் தருவதாயிற்று.

சபை ஊழியர் நன்குப்பயிற்று விக்கப்பட மூடிக் கிடந்த உபதேசியார் வகுப்பை 1935 ல் திறந்து வைத்தார். ஆனால் மீண்டும் மறைந்தது வருந்தத்தக்கதே. சபை ஊழியர் வேத அறிவில் வளருவதற்குக் காரணமாகவும், தூண்டுதலாகவும் அவர்களின் பரீட்சையில் காணப்பட்ட தேர்ச்சிக்கேற்ப அதிகாரப் பத்திரங்கள் கொடுத்தனர். தேர்ச்சி அடிப்படையில் அந்தஸ்தும் கொடுக்கப்பட்டது. இது நாட்டுப் பிரசங்கிகளின் தொந்தரவையும் ஒருவாறு நீக்கிற்று. சபைக்குள் தகாத உபதேசங்களும், ஒழுங்கற்ற முறைகளும், உபத்திரவங்களும் நுழையாதிருக்க இது ஒரு நல்ல ஏற்பாடாயிற்று.

சபை ஊழியர்களுக்கு வேனிற்கால வகுப்புகள் நடத்தவும், கிறிஸ்தவ ஜீவியத்தில் வளர வேண்டிய அனுகூலங்களும் அவர்களுக்கு அளிக்கப்பட்டது. திறமையும் பக்தியும் வாய்ந்த சபை ஊழியர்கள் குருக்களாக்கப்பட்டனர். பெண்கள் முதியோர் கல்வி திட்டமும் சீரிய முறையில் செயல்பட்டது. இவர் காலத்தில் நாசரேத் சாயர்புரம் முதலிய இடங்களில் உயர்தரப் பாடசாலைகள் உண்டாயின.

**நிதிநிலை வளர்ச்சி**

சபைவளர்ச்சிக்குப் பணமும் ஓர் அளவில் அவசியம் என்பதை அத்தியட்சர் சபைக்குத் தெளிவுபடக்கூறினார். சபையின் சுய ஆதரவுக்கேற்ற சில திட்டங்கள் வகுத்தார். சபைகள் தம் உத்திரவாதங்களோடு சிலாக்கியங்களையும் அனுபவிக்கும் படி சுய ஆட்சியில் பயிற்றுவித்தார் பணவிஷயங்களில் அவர் செய்த திறமானதும் தீவிரமானதுமான செயல் ஒரு இந்திய பொக்கிஷதாரரை அத்தியட்சாதீனத்திற்கு நியமித்ததாகும். அவரே திரு M.G. ஏசுபாதம் ஆகும்

## கிராமச் சபைகள் மீது ஆர்வம் கொண்டவர்

கிராமச்சபைகளே அத்தியட்சரின் விருப்பு. கிராமச்சபைகளின் திடப்படுத்தல் ஆராதனைக்குச் செல்வது அத்தியட்சருக்கு அலாதிப் பிரியம். திடப்படுத்தல் மாணவர்கள் 15 பேர் என்றாலும் கூட உற்சாகத்தோடு கிராமங்களுக்குச் செல்வார். பட்டதாரி குருக்களிடம் கிராமச் சேவையையே பெரிது படுத்திக் கூறுவார். கிராம ஊழியத்திற்குப் பட்டதாரிகளே தேவை எனக் கூறுவார்.

கிராமச் சபைகள் சமூக வாழ்க்கையிலும் பொருளாதாரத் துறையிலும் முன்னேற்றம் அடைய வேண்டுமென்பது அத்தியட்சரின் ஓர் துணிவு. அவர்களின் சமூக வாழ்விற்கு அரி புழுவாக இருந்த இந்து மதப் பழக்க வழக்கங்கள் அகற்றப் படல் வேண்டுமென்ற கருத்துக் கொண்டு "கிறிஸ்தவர்களுக்குள் காணப் படும் இந்துப் பழக்கவழக்கங்கள்" என்ற தலைப்பில் போட்டிக் கட்டுரை எழுதச் செய்து தகுந்த கட்டுரைக்குப் பரிசும் வழங்கினர். கிராமப் பொருளாதார அபிவிருத்திக்கு ஊழியரை அத்தகைய பயிற்சிக்கு அனுப்பினர். இன்று செயலில் இருக்கும் கிராம முன்னேற்ற ஊழியக் குழு அமைப்புக்கு அடிகோலியவர் நம் அத்தியட்சரே.

கிராமிய முதியோர் பெண்களின் கல்வியில் ஊக்கம் கொண்டவர் என முன் கூறினோம். செனனா மிஷன் இவ்வூழியத்தை இராப்பள்ளிகள் மூலம் நடப்பித்து வந்தது. இதனைவிரிந்த முறையில் நடத்த அத்தியட்சர் துணைபுரிந்தார். இவ்வூழியம் இன்றும் சிறந்த முறையில் நடைபெற கிராமிய வாழ்க்கையில் வெகுவாய் ஈடுபட்ட Miss கிரேஸ்திரூ என்ற அம்மையாரைத் தனக்கு துணைவியாக்கிக் கொண்டார். இவர் சகோதரமன்றத்தின் (Brotherhood) அங்கமாக இருந்து வெகுகாலம் விரக்தராக இருந்த போதிலும் கிராமிய மக்களின் நலன் கருதி இதை உதறித் தள்ளி அந்த அம்மையாரை விவாகம் செய்து கொண்டார். விவாகம் நடத்தி வைத்தவர் கனம் D.S டேவிட் ஐயர். அம்மையார் பெண்கள் மத்தியில் ஆக்கபூர்வ வேலைகள் பலசெய்தார். இனிய தமிழில் பேசுபவர். கிராமிய மக்களால் பெரிது போற்றப் பட்டவர். 1929 இல் இருந்தே தாய்மார் சங்க ஊழியத்தின் பொறுப்பை ஏற்றவர். பல புத்தகங்கள் எழுதியுள்ளார். இத்தகைய சீலமுடைய அம்மையாரும் அத்தியட்சரும் சொற்ப காலமே மிகச்சிறந்த ஊழியம் நிறைவேற்றினர். 1935 இல் செப்டம்பர் மாதத்தில் குற்றாலத்தில் திடீரென அம்மையார் மறுமைக் குட்பட்டனர். இப்பெரிய இழப்பிலும் கூட நெஞ்சம் தளராது தம் கையாலேயே அம்மையாரை அடக்கம் செய்தார். இதனை முடித்து

திருமறையூர் ஆலைய கருவி, அம்மையையும் செமினேரி நிலைய மாயிருந்த களம் நீல் றூபரே. ஆனால் அதற்கு அடிகோலை வெல்ஸ்றர்ன் அத்தியட்சரே

திருநெல்வேலி குருத்துவ மக்களை மேல் நாட்டுக்கு அனுப்பி உயரிய கல்வி அறிவுடையவர்களாக்க வேண்டுமென்பது அவரது அவா.

அத்தியட்சர், குருக்கள் மீது அன்புள்ளம் படைத்தவர். கஷ்டப்பட்ட குருக்களும் அவர்களின் பிள்ளைகளும், புருஷனை இழந்த குருத்துவ விதவைகளும் அவரிடம் பெற்ற நன்மை அனந்தம். யாருக்கும் அவர் ஒரு தந்தையாகவே விளங்கினார். அவரது அன்பு ஆழமான கடலிலேயே ஒக்கும். ஆனால் அன்புக்குரிய ஆக்கினையும் உண்டு.

மாசகனம் வெஸ்ற்றர்ன் அத்தியட்சர் காலத்தில் சாயர்புரம், கிறிஸ்தியா நகரம் ஆஸ்பத்திரிகள் சேகரங்களின் ஆதரவுக்கும் ஆட்சிக்கும் விடப்பட்டது. சென்னை கிறிஸ்தவக் கல்லூரி அமைய நற்காரணமானவர்களில் நம் அத்தியட்சர் ஒருவராவர். திருநெல்வேலி அத்தியட்சராக நீண்டகாலம் இருந்தவர்கள் சிலரே. இவர் 8 ஆண்டுகள் நம் அத்தியட்சராக இருந்து ஆக்கப் பூர்வவேலைகள் பல செய்து தந்தார். தேக நலம் கெட நேர்ந்தபோது தெல்லை அத்தியட்சர் பதவியை ராஜினாமா செய்தார்.



# நீல் அத்தியட்சர்

## இவரது காலம் 1939—1946 ஆகும்

இவர் திருச்சபைக்குப் பெரும் பணிபுரிந்த அக்கால இந்திய அரசியலோடு சம்பந்தப்பட்ட ஒரு பரம்பரையில் தோன்றியவர். இவரது தந்தையார் சார்லஸ் நீல் குருவானவர். இங்கிலாந்தில் பல உத்தியோகங்கள் வகித்தவர். பின் சென்னை அத்தியட்சாதீன கோத்தகிரி ஆலய குருவானுர். இவரின் இனத்தாரில் சிலர் இந்திய அரசு உத்தியோகஸ்தர்கள்.

ஷெல்ற்றனம் என்ற ஊரில் கல்வி கற்று அதில் பெரும்பெயர் எடுத்து கேம்பிரிட்ஜ் சர்வகலைக் கழகத்தைச் சேர்ந்த டிரினிற்றி கலாசாலை மாணவரானுர். அதில் பூர்வ கலைகளைச் சேர்ந்த பாடங்களிலும் (Classical Tripos) வேத சாஸ்திரத்திலும் (Theological Tripos) முதல் வகுப்பில் தேறினுர். கல்வியிற் சிறந்த பல பரிசுகள் பெற்ருர். அவரது திறமை, தாம் பயின்ற கல்லூரி ஆசிரிய சழகத்திலேயே அவரை ஓர் அங்கமாக (Fellow) ஆக்கிற்று. இங்கு இவர் பணிசெய்த 1924 1928 ஆகிய வருடங்களிலும் தமது பழைய கலாசலையின் ஆசிரிய கழகத் தொடர்பை விடாதிருந்தார் 1926ம் ஆண்டு டிசம்பர் திங்கள் 21ம் நாள் பரி தோமாவின் திருநாளன்று பாளையங்கோட்டை திருத்துவ ஆலயத்தில் மகாகனம் ஹப்ஸ் அத்தியட்சரால் உதவி குருப்பட்டமும் 1928 இல் ராஜாவுக்கு இங்கிலாந்து சென்றிருந்த சமயம், மார்ச்சு மாதம் 4ம் நாள் ஞாயிற்றுக்கிழமை டிரினிற்றி கலாசாலை ஆலயத்தில் ஈலே அத்தியட்சரால் குருப்பட்டமும் பெற்ருர். 1925 முதல் 39 வரை சுவிசேஷ பிரபல்ய முயற்சி, குருத்துவ பணிப்பயிற்சி, உபதேசிமார் பயிற்சி ஆகிய துறைகளில் திறம்படப் பணிசெய்தார். இவை இவரை நெல்லை அத்திட்சராவதற்குப் பயிற்சித் தளமாயிற்று.

1939ம் ஆண்டு ஜனுவரித் திங்கள் 6ம் நாள் பிரசன்னத் திருநாளன்று தோர்ணக்கல் அத்தியட்சாலயம் பிரதிஷ்டை செய்யப் பட்டது. அதில் இருதினங்களுக்குப் பின் ஸ்தேவான் நீல் ஐயர் நெல்லை அத்தியட்சராக அபிசேகம்பெற்ருர். தாம்பரத்தில்நடைபெற்ற மிஷனெரி மகாநாட்டுக்கு வந்திருந்த இங்கிலாந்து நாட்டுப் பிரதிநிதி கில்போர்டு அத்தியட்சர், இந்திய சபைகள் பிரதிநிதிகளான கல்கத்தா, தோர்ணக்கல், நாகபுரி அத்தியட்சர்கள் மகாகனம் எலிபட், மகாகனம் பானர்ஜி அத்தியட்சர் ஆகியோர் பட்டாபிசேக ஆராதனை நடத்தினுர்கள். லூத்தரன் சபை மகாகனம் சான்றக்ரன்



அருள்பெருந்திரு

ஸ்தேவான் நீல்

1939—1945

அத்தியட்சர், ஈரான் நாட்டு மகாகனம் தாம்சன் அத்தியட்சர், ஆப்பிரிக்கா நாட்டு மகாகனம் ஜாண்சன் அத்தியட்சர், நியூசிலாந்து மகாகனம் பென்னட் அத்தியட்சர் ஆகியோரும் கைகளை வைத்தனர்.

அத்தியட்சராகத் திருநெல்வேலிக்கு வந்த போது சிறந்த முறையில் வரவேற்பு அளிக்கப்பட்டு அத்தியட்சராலயத்தில் அவரின் ஆசனத்தில் அமர்த்தப்பட்டார். இச்சிலாக்கியம் பெற்ற முதல்வர் இவரே. 1929 இல் மகாகனம் வெஸ்றர்ன் அத்தியட்சர் பதவி ஏற்றபோது நெல்லை அத்தியட்சாதீனம் ஓர் தனி அத்தியட்சாதீனமாக விளங்காது சென்னை அத்தியட்சாதீனத்தோடு இணைந்திருந்தது. ஆகவே வெஸ்றர்ன் அத்தியட்சர் ஆசனத்தில் அமர்த்தப்படக்கூடாத நிலை இருந்தது.

இவரது காலத்தில் உலக மகாயுத்தம் நடைபெற்றது. எனினும் அத்தியட்சாதீனம் பல (வழிகளிலும்) துறைகளிலும் முன்னேற்றம் அடைந்தது. பாளையங்கோட்டை பரி. திருத்துவ ஆலயம் அத்தியட்சாதீன ஆலயமாயிற்று. ஒரு பிரதம குருவும் (Arch Deacon) ஏழு கனோன்களும் அடங்கிய ஒரு கழகம் ஸ்தாபிதமாயிற்று. இது நம் அத்தியட்சரால் ஆயிற்று. அத்தியட்சாதீனம் முழுமையும் இதை ஏற்றுக்கொண்டது. இந்த ஏற்பாட்டின்படி ஆர்ட்டிக்கன் ஆனவர் கனம் R. V. ஆசீர்வாதம் ஐயரவர்கள். இவ்வித கண்ணியத்தை இந்தியர் ஒருவர் பெற்றதும் கனோன்கள் ஏழுவரில் ஐவர் இந்தியர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கவை. அத்தியட்சர் இந்திய குருக்கள் மீது கொண்டுள்ள உயர்வான எண்ணத்தை இது காட்டியது. அத்தியட்சாதீனம் தன் சுய உத்தரவாதத்தை உணர்ந்து இந்தியர்களே அது செயல்படவேண்டுமென்பது அவரின் உயர் நோக்கம் ஆகும்.

இந்திய திருச்சபை இந்திய மக்களின் ஆளுகைக்குள் அமைய வேண்டும் என்ற கருத்துக் கொண்டே இந்த அமைப்பை உருவாக்கினர். அத்தியட்சரின் எண்ணம் போல் மேலை நாட்டு ஊழியர்களும எண்ணி இந்தியத் தலைவர்களுடன் ஒத்து அவர்களின் கீழ் நற்பணி ஆற்றினர். இவர் அத்தியட்சரான பின் திருமறையூர் செமினெரி தலைமைப் பதவியை இந்தியரான கனோன் சித்தர் ஐயரவர்களுக்குக் கொடுத்தார். கனம் சித்தர் ஐயர் ஒரு M. A. பட்டதாரி. இவரது ஊர் நாசரேத்துக்கு அருகாமையிலுள்ள மூக்குப்பீறி. கல்கத்தா வேத சாஸ்திரக் கல்லூரியில் பணிபுரிந்தவர். மேலை நாட்டு நற்பண்புகள் பல கொண்டவர். எக்காரணத்தும் எக்காலத்தும் காலம் தவறாதவர். தம் போன்று தம் மாணவர்களும் ஆக

வேண்டுமென்ற ஆத்திரம் கொண்டவர். மாணவர்களின் குறை கண்டு அப்போதைக்கப் போது கண்டிப்பவர். ஓர் அன்பர் தேசப் பற்றுடையவர். அவரின் மாணவன் என்று சொல்லிக் கொள்வது பெருமைக் குரியதாகும்.

பரி. யோவான் கல்லூரியிலும், சாராள் தக்கர் கல்லூரியிலும் பல தடவைகளிலும் இந்தியர் பதில் ஆளாய்த் தலைமை வகித்தது துண்டு. அத்தியட்சாதீன ஆலோசனை சபைகளின் காரியதரிசிகளும், மூன்று சபை சங்கங்களின் தலைவர்களும், அத்தியட்சாதீனத்தின் உத்தியோகஸ்தர்கள் அனைவரும் ஒருவர் தவிர இந்தியர்களே. இந்திய அத்தியட்சாதீனம் இந்தியர்களுக்கே என்ற எண்ணத் திற்கும் அமைப்புக்கும் நெல்லை அத்தியட்சாதீனம் ஓர் எடுத்துக் காட்டாய் விளங்கிற்று.

இவர் இந்திய திருச்சபை மக்களிடம் அலாதி அன்புடையவர் கிராமீய மக்களால் பெரிதும் போற்றப்பட்டவர். செல்லும் இடங் களில் ஆமோக வரவேற்புண்டு. அத்தியட்சாதீனத்தை முற்றிலும் அறிந்தவர். அத்தியட்சராகுமுன் சுவிசேஷகராகப் பணிபுரிந்த காலத்தில் நெல்லை அத்தியட்சாதீனத்தின் மூலைமுடுக்குகளெல்லாம் அறிந்தவர். இவர் சர்வஜன அத்தியட்சர் என்றழைக்கப்பட்டார். ஆரம்பத்தில் இருந்தே அத்தியட்சாதீனத்தின் ஆன்ம அவசியங்களை வெகு தகவனத்துடன் ஆராய்ந்தவர்.

அத்தியட்சாதீன ஆலோசனைச் சங்கம் இவரது காலத்தில் இரு முறை கூடிற்று. திருச்சபை சம்பந்தமான சில சட்டமாறுதல் விஷயங்கள் ஆலோசிக்கப்பட்டன. 1943 இல் முடிவான திருச் சபை ஐக்கியத் தீர்மானத்தை நமது அத்தியட்சாதீன சங்கம் அங்கீ கரிக்கும்படி 1944 இல் கூட்டப்பட்டுக் கீழ்க்காணும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

"1943 இல் தென்இந்திய திருச்சபை ஐக்கிய சங்கத்தால் செய்துள்ள முடிவான தீர்மானத்தை இந்த அத்தியட்சாதீன ஆலோசனைச் சங்கம் பொதுவாக அங்கிகரிக்கிறது". இத்தீர் மானத்தை நிறைவேற்றிய சங்கத்தார் எழுந்து 'எல்லாருக்கும் மா உன்னதர்' என்றும் பாடலின் முதற்கவியை எழுந்து நின்று தோத்திரப்பாடலாகப் பாடினர்.

அவர் அத்தியட்சர் ஆகும் சிலநாட்களுக்குமுன் தாம்பரத்தில் நடைபெற்ற அகிலலோக சுவிசேஷ பிரபல்ய மகாநாட்டின் கூட்டங் களில் நடைபெற்ற தர்க்கங்களிலும் அதின் பல உபசபைகளிலும் முக்கிய அங்கம் வகித்தார். 1940 இல் அத்தியட்ச மகாசங்கத்தின்

காரியதரிசியாகத் தெரிந்து கொள்ளப்பட்டார். 1947 ஜனுவரியில் அந்த மகாசங்கம் கூடியபோது அவர் காரியதரிசியாக நடத்திய காரிய காரணத்தால் அவர் நன்கு மதிக்கப்பட்டு ஒரு தீர்மானம் பதிவு செய்யப்பட்டது.

மகா நாடுகளில், ஆவிக்குரிய கூட்டங்களில் தியான அமைதி கூட்டங்களில் விடுமுறை நாட்கள் கூட்டங்களில் அவர் செய்த பிரசங்கங்களும் சொற்பொழிவுகளும் பாராட்டற்குரியவைகள் ஆகும். ஆலோசனை சபைகளில் அவரது பணியானது மிகுந்த பயனுடையதாயிருந்தது. இதின் சம்பந்தமாக அவர் பங்களூர், சென்னை நாகபுரி முதலிய இடங்களுக்கு அடிக்கடி போக வேண்டியதிருந்தது. இவைகளில் மிக முக்கியமானவை தமிழ் வேதாகமப் புதுமொழி பெயர்ப்பு, சபை ஐக்கியம், வேதசாஸ்திரம் என்னும் விஷயங்களாகும்.

### சுவிசேஷ ஊழியத்தில் இவரின் பங்கு

அத்தியட்சாதீன ஆரம்ப காலத்தில் சுவிசேஷகர்கள் ஓர் இடத்தில் தங்கியும் சிலர் தேசாந்தரிகளாகச் சுற்றித்திரிந்தும் சுவிசேஷத்தை அறிவித்து வந்தார்கள். இவர்கள் கல்வி அறிவில் குறைந்தவர்கள். இவர்களில் அநேகர் புதிதாய்க் கிறிஸ்து மார்க்கத்தில் சேர்ந்தவர்கள். சுவிசேஷ ஊழியத்தில் ஆர்வங் கொண்டவர்கள். ஆனால் தெளிவுபட சுவிசேஷம் அறிவிப்பதற்குக்கல்வி அறிவு போதாது. இவர்கள் ஊழியம் தலைவர்களுக்கு அதிருப்தி அளித்தது. ஆகவே பழைய முறையை அகற்றிக் கால அறிவு நிலைக்கேற்ப புதிய முறை ஏற்பட வேண்டியதாயிற்று. பழைய ஊழியர்களுக்கு ஓய்வு கொடுக்கப்பட்டது. புதிய அமைப்பின்படி சுவிசேஷ ஊழியம் பற்றிச் சபை மக்களுக்குள் ஒரு வைராக்கியமும், தகுந்த பயிற்சியும், திறமையும் உருவாக்கப்பட வேண்டும். மக்கள் ஊழியத்திற்கு ஊதியம் கோராமல் சுயமாய்ப்பக்தி எழுச்சியுடன் உழைத்து ஊழியம் செழிக்க வேண்டும். ஒவ்வொரு கிராமச் சபையிலும் சுவிசேஷ குழுக்கள் உருவாக்கப்பட்டு அவர்களுக்கு உத்தமமான பயிற்சி கிடைக்க ஏற்ற திறமைகள் உண்டாக்க ஒழுங்குகள் செய்யப்பட வேண்டும். சபை மொத்தமாகச்சேர்ந்து செய்யக்கூடாத சில குறிப்பிட்ட சேவைகளைச் செய்யவும் சபைகளுக்கு அப்பால் தூர இடங்கள் சென்றும் சுவிசேஷத்தை அறிவிக்கும் பொறுப்பும் இக்குழுக்களுக்குக் கொடுக்கப்பட்டது.

இதன் பயனால் நல்ல ஊழியம் நடைபெற்றுவந்தது. சுவிசேஷ ஞாயிறு அன்றும், சாட்சி வாரத்திலும் சபைகள் குருக்களோடும் ஊழியர்களோடும் சேர்ந்து சிறப்புற சுவிசேஷத்தை அறிவித்து வந்தனர். பிற மதத்தினரை, அவர்கள் வழிபடும் தெய்வங்களை

இழிவுபடுத்திக் கூறும் நிலை மாறிற்று. தர்க்க முறையில் சுவிசேஷம் அறிவிக்கப்படவில்லை ஏழைகளுக்கும் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் கிறிஸ்தவ மார்க்கம் பல சிலாக்கியங்களையும் உயர்வையும் தாராள மாய் கொடுக்கும் என்ற போதனை மறைந்தது. கிறிஸ்துவைப் பற்றியும் அவரின் உயரிய இரட்சிப்பைப் பற்றியுமே துணிவோடும் வீரத்தோடும் சாட்சி கொடுத்தனர்.

1929 முதல் குருத்துவப் பயிற்சிபெறும் மாணவர்கள் தங்கள் பயிற்சியின் முதலாண்டில் சுவிசேஷ சேவையில் ஈடுபடவேண்டு மென்ற சட்டம் உண்டானது. சில வருஷங்களாக ஒரு பகுதியினர் இராமநாதபுரம் வட்டத்தில் சுவிசேஷ மணமே வீசிஇராத பல இடங்களில் சேவித்தனர். ஆர்வத்துடன் சுவிசேஷம் கேட்டனர். முகமதியரும் உற்சாகம் காட்டி சுவிசேஷப் பகுதிகளைக் கேட்டு வாங்கி வாசித்து வந்தனர். ஆனால் பின்னணிப்படை தொடர்பு ஊழியத்தில் வேலை தளர்ச்சியே காணப்பட்டது. சுவிசேஷ அறிவிப்பால் சுவிசேஷ உணர்ச்சி ஏற்பட்டிருக்கும் மக்களைக் கிறிஸ்வின் மந்தையில் சேர்த்துப் புதிய சபைகள் எழுப்பத்திறமை யும் உற்சாகமும் கொண்ட ஊழியரைத் திரட்டும் முயற்சி அத்தியட் சாதீனத்தில் இல்லை. பொதுவாக மக்களின் அறிவு வளர்ச்சி, ஒரு புதிய சத்தியத்தை அறிய வேண்டுமென்ற மனோநிலை மட்டுமே உடையதாயிருந்தது.

கல்வி அறிவுடையோருக்குக் கிறிஸ்தவ உபதேச உபநியா சங்கள் ஒழுங்கு செய்யப்பட்டன. ஆனால் கூடும் மக்கள் குறைவே உபநியாசங்களுக்குத் தகுந்த அறிவுடையோரும் நம்மிடம் இல்லை. சிற்சில சமயங்களில் நம் அத்தியட்சரே இதனைச் செய்தனர். கிறிஸ்து மதப்பிரசாரத்திற்கு எளிதில் இடங்கொடாத உயர்குல இந்துக்கள், அறிவாளிகள், முகமதியர்கள் ஆகிய பட்டணவாசி களுக்குள்ளும் சுவிசேஷம் அறிவிக்கபடல் வேண்டுமென்ற உறுதி கொண்ட ஒரு கொள்கை சுவிசேஷ பிரபல்ய ஆலோசனைச் சங்கத் திற்குண்டாயிற்று. சுவிசேஷ பிரபல்ய குருத்துவமாணவர் படை சிறிய பட்டணங்களில் தங்கி ஊழியம் செய்யவும், இந்துமதக் கோட்டையான திருநெல்வேலி நகரில் வசிக்கும் கல்வி கற்ற இந்துக்களுக்குச் சுவிசேஷம் அறிவிக்கவும் தீர்மானமாயிற்று.

ஒரு வருஷத்தைக் குறித்து வைத்து அந்த வருஷ முழுவதி லும் அத்தியட்சாதீன முழுமையிலும் சுவிசேஷ ஊழியம் செய்ய வேண்டுமென்ற ஒரு தீர்மானம் இருந்து வந்தது. யுத்த காரணமாக அது எதிர் நோக்கிய அளவுக்குச் செயல்படவில்லை. ஆனால் தீர் மான சுவிசேஷ கொள்கைகள் மக்கள் மத்தியில் சுவிசேஷ வாஞ்சை யை அதிகரிக்கச் செய்திருந்தது.

**குருப்பணிவிடை**

குருப்பணி அத்தியட்சாதீனத்தின் அட்சாணியாயிருந்தது அக்காலத்தில் 1500 சபைகளும் 130000 சபை மக்களும் அடங்கியதாய் இருந்தது. நம் அத்தியட்சாதீனம் குருக்கள் எண்ணிக்கை அக்காலத்தும் குறைந்ததாகவே இருந்தமையால் சபைகள் அத்தனையையும் குருக்கள் சந்திப்பதற்கும் தீட்டப்பட்டத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கும் கூடாததாகவே இருந்தது. 1938 இல் 84 குருக்கள் மட்டுமே இருந்தனர். உதவி குருக்களோ இல்லை. 1943 இல் 105 இந்திய குருக்களும் 7 உதவிக் குருக்களும் இருந்தனர். அநேக ஆண்டுகளாகச் சபையாருக்கு இருக்க வேண்டிய குருக்களின் விகிதாச்சாரம் குறைந்து கொண்டே இருந்தது. 1879 இல் சபையார் 59 203; இந்திய குருக்கள் 89, அதாவது 660 மக்களுக்கு ஒரு குரு 1923 இல் 1200 சபை யாருக்கு ஒரு குரு. குருக்கள் எண்ணிக்கை குறைவு பட்ட நிலையில் இருந்த போதிலும் எல்லாச் சபைகளுக்கும் குருப்பணி விடை கிடைக்க ஒழுங்குகள் செய்யப்பட்டன. எனினும் தூரமான இடங்களில் பரி.நற்கருணை பரிமாறும் குருக்கள் கிடைப்பது அரியதாயிருந்தது.

குருமார்களின் எண்ணிக்கை குறைவுபடச்சில காரணங்களும் உண்டு குருத்துவத்திற்கென்று தெரிந்தெடுக்கும் மாணவர்கள் குருத்துவத்தின் உயர் மதிப்பைக் குறைத்து விடக்கூடாதென்று வெகு கரிசனையுடன் தகுந்த திறமையும் யோக்கியமும் உடையவர் வர்களையே தெரிந்தெடுத்து வந்தனர். நிற்க பெருஞ் செல்வந்தர் களும் அந்தஸ்துடையவர்களும் குருத்துவத்தை ஒரு கண்யமான ஊழியமெனக் கருதாது தம் மக்களை ஊழியத்திற்கனுப்பப்பின் வாங்கினர் பட்டதாரிகள் பலர் அரசு சேவையையேநாடினர். குருக்களும் சபையிலுள்ள வாலிபரை அனுப்பிக்குருத்துவத்திற்குக் கொண்டு வரும் முயற்சியும் எடுத்தார்களில்லை. குருக்கள் குறைந்த நிலையிலும் உயிர்த்தெழுந்த பண்டிகை நாளிலும் தொடர்ந்த ஏழு நாட்களிலும் பரி. நற்கருணை பரிமாரப்படும் எல்லா இடங்களிலும் நற்கருணை பரிமாரப்படும் ஒழுங்கு செய்யப்பட்டது. இவ்வமைப்பிலும் கூட பாதிப் பேர் முதலாய் பரி. நற்கருணையில் பங்கெடுக்கவில்லை என்று கணக்கிடப்பட்டுள்ளது. 1943 இல் ஆராதனைக்கு வந்தவரின் கணக்கெடுத்துப் பார்க்கையில் மொத்தத்தில் பாதிப்பேரே வந்ததாகக் கணக்கிடப்பட்டுள்ளது. அதிலும் பரி. நற்கருணையில் மூன்றில் ஒரு பங்கே பங்கெடுத்திருக்கின்றனர். இன்றைய நிலையும் அது போன்றே குருத்துவப் பயிற்சிக் காலத்தை மூன்று வருஷத்தில் இருந்து நான்கு ஆண்டுகளாக்கினர். குருத்துவ ஊழிய விசாரணைச்சங்கத்தாரும் இது மிக்க அவசியமெனக் கருதி ஒப்புக்கொண்டனர். அக்காலக்

குருத்துவ மாணவர்களிடம் ஆங்கில அறிவும் வேத அறிவும் குறைந்தே காணப்பட்டது. வேத அறிவு பெற ஆங்கிலம் தேவை யெனத் தோன்றிற்று. குருத்துவப் பயிற்சியின் முதல் ஆண்டில் ஆங்கிலமும் கிரேக்கமும் வேதபாடமும் விசேஷமாகப் போதிக்கப்பட்டபடியால் பின்னுள்ள மூன்று ஆண்டு பயிற்சிக்கும் இது அஸ்திவாரமாயிற்று.

சபை ஊழியர்க்கெனத் திருமறையூரில் ஏற்பட்டிருந்த வகுப்பு கள் பலனற்றவைகளாகவே காணப்பட்டன. சில குரு தொகுதிகளி லிருந்து ஒருவர்கூடப்பயிற்சிக்கு அனுப்பப்படவில்லை. வந்தவர்களும் மிகத்தாழ்ந்த தரமானவர்களே. பூரணமான தொகை வகுப்புகளில் இருந்ததுமில்லை. சபையில் ஊழியம் செய்யும் சபை ஊழியர்கள் தகுந்த ஆயத்தமும் அறிவும் கூடப்பெறாதவர்கள். காலப்போக்கில் ஊழியத்தின் சில விஷயங்களை மட்டும் அறிந்திருந்தனர். ஆனால் இவர்கள் செய்து வந்த ஊழியம் இங்கிலாந்து நாட்டில் குருக்கள் செய்து வரும் ஊழியமே. ஊழியர்கள் குறைந்த அறிவுடையவர்களா யிருந்தமையால் சபை ஊழியம் பழுது பட்ட ஒரு நிலையிலேயே இருந்தது. சபைகளில் மது அருந்தும் பழக்கம் வேரூன்றி நின்றது. விவாகத்தின் தூயதன்மை அற்பமாகவே எண்ணப்பட்டது குடும்பப் பிரார்த்தனை செய்யும் இல்லங்கள்சொற்பமே. தினசரி வேதவாசிப்பும் ஜெபமும் இல்லாதிருந்தது. இக்குறைகள் ஒருவாறு நீங்க மகாகனம் நீல் அத்தியட்சர் திடப்படுத்தல் மாணவர்களுக்குத்தக்க ஆயத்தமும் போதனையும் கொடுத்து வந்தார். ஆனால் சில சேகரங்களில் குருக் கள் மக்களுக்கு நல்ல பயிற்சி கொடுத்து வந்ததாகத் தெரிகிறது. சுவிசேஷ வாஞ்சையும் காணிக்கைப்படைப்பும் வளர்ச்சி அடைந் திருந்தது.

### கல்வித்துறை வளர்ச்சி

நம் அத்தியட்சருக்குத் தம் மக்கள் அறிவுடைய மக்களாய்த் திகழ வேண்டுமென்பது ஓர் அவா. சாராள்தக்கர் கல்லூரியை முதற்றரக் கல்லூரியாக்கினர். மெஞ்ஞானபுரம் எலியட்டக்ஸ் போர்டு பள்ளி, இடையன்குடி, நல்லூர் முதலிய பள்ளிகளும் உயர்நிலைப் பள்ளிகளாக்கப்பட்டன. (S. S. L. C.) சுரண்டை மீண்டும் மத்திய பாடசாலையாக்கப்பட்டது. பரி. யோவான் கல்லூரியில் மலையாளமும் இயற்கை சாஸ்திரமும் ஏற்படுத்தப்பட்டன. உயர்தரக்கல்வி ஸ்தாப னங்களில் தகுந்த பயிற்சிபெற்ற ஆசிரியர்களே நியமனம் பெற்றனர். அரசுத் தேர்வுகளில் வெற்றியும் மாணவர் சேர்ப்பும் பள்ளிகளில் உயர்ந்தன. பள்ளியில் வேதபாடம் கற்றுக் கொடுக்கும் ஆசிரியர் களுக்கு வேனிற்கால விடுமுறையில் அத்தியட்சரே வேதபாடம்

கற்றுக் கொடுத்து வந்தார். இவ்வூழியப் பயனால் மாணவர்கள் கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ள ஏதுவாயிற்று.

ஆரம்பக் கல்வி நிலை அந்நியசபைத் திருப்தி செய்யவில்லை. சபை மக்கள் அதிகரித்ததற்குக் கல்வி அறிவு வளர்ச்சி அடைந்து விட்டதெனக் கூற இடமில்லை. 1925 இல் 691 ஆரம்பப் பாடசாலைகள் இருந்தன. மாணவர்களின் தொகை 25864 ஆகும். 1938 இல் 711 பாடசாலைகளும் அதில் 36233 மாணவர்களும் இருந்தனர் 1943 இல் உயர்தர ஆரம்பப் பாடசாலை நீங்கலாக 646 பாடசாலைகளும் 37502 மாணவர்களும் இருந்தனர். சில கிராமங்களில் பாடசாலைகள் மூடப்பட்டன. அதனால் சபை ஊழியம் அக்கிராமங்களில் பாதிக்கப்பட்டது. பள்ளிகளில் ஆசிரியர்களின் தொகையும் தரமும் யுத்த காரணத்தால் குறைய ஆரம்பத்தது 1942 இல் செக்கண்டரி கிரேட் ஆசிரியர்கள் ரூ 18 ம் ஹயர்கிரேட் ஆசிரியர்கள் ரூ 13 ம் ஆரம்பச் சம்பளமாகப் பெற்று வந்தனர். வாழ்க்கை நிலையும் ஆகவிலையும் உயர்ந்ததால் இவ்வூதியம் போதாது கண்டு ஆசிரியர்கள் பலர் இராணுவத்தில் சேர்ந்தனர் இந்நிலை ஆசிரியர்களின் தொகையைப் பாதித்துப் பள்ளிகளையும் பாதித்தது. ஆசிரியர்கள் தேவையை ஈடுசெய்ய ஆசிரியர்களுக்குக் குறைந்த காலப் பயிற்சி கொடுத்தனர். ஆசிரியப் பயிற்சி இல்லாதவர்களும் ஆசிரியராகப் பணியாற்றினர். எனினும் ஆசிரியர் பயிற்சிக்கு மறுச் செய்வோர் குறைவே. கிறிஸ்தவ மக்கள் சபையில் எழுத வாசிக்கத் தெரிந்திருக்க வேண்டுமென்பது திருச்சபையின் நோக்கு. பிற்பட்ட கிராமங்களில் பிற மதத்தினரைக் காட்டிலும் கல்வி அறிவுடையவர்களாகவே நம்மக்கள் காணப்பட்டனர்.

பள்ளிகளில் வேதபாடம் கற்றுக் கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனை நமக்கு இருந்த போதிலும், அது சீரிய முறையில் செயல்படவில்லை. வேதபாடத் திட்டம் உண்டெனினும் ஆசிரியர்கள் தம் இஷ்டம் போல் வேதாகமத்தில் அங்கொரு பாகம் இங்கொரு பாகம் எடுத்துக் கற்றுக்கொடுத்தனர். இதே நிலை நம் பள்ளிகளில் இன்றும் நடைபெறுகிறது.

நம் போதனா பயிற்சிச் சாலையில் பயிலும் கிராம உபாத்திமார் தாம் பணி செய்யும் இடங்களில் மக்கள் சன்மார்க்க வாழ்வில் வளர நல்முறைகளும் பயிற்சிகளும் அவர்களுக்கு பள்ளியில் கொடுக்கப்பட்டன. ஆசிரியர்களுக்கு வேனிற்கால விடுமுறையில் பயிற்சிகள் கொடுக்கப்பட்டன. வருஷந்தோறும் வேதபாடப்பரீட்சை எழுதும் ஆசிரியர்களின் தொகை கூடிற்று. முன் மாதிரியான வாழ்க்கையும் மேற்கொண்டனர்.

**வைத்திய ஊழியம்**

வைத்திய ஊழியம் அத்தியட்சாதீனத்தில் மிக வளர்ச்சி அடைந்து விட்டதெனக் கூறமுடியாது. கிறிஸ்தியா நகரத்தின் பரி அந்தோனி வைத்திய சாலையை குருசேகரம் கண்காணித்தது. இது சம்பந்தமான சொத்துக்கள் S. P. G சங்கத்தாரிடமிருந்து சர்க்கீனுக்கு மாற்றப்பட்டது. மெஞ்ஞானபுரம் ஆஸ்பத்திரியும் இது போன்றே மாற்றப்பட்டது. பரி. ரபாயேல் வைத்தியசாலையை சாயர்புரமே நடத்திக் கொண்டு வந்தது. இவர்களுக்கும் இது சம்பந்தமான S. P. G. சங்கத்தாரின் பொருட்கள் கொடுக்கப்பட்டு விட்டன.

யுத்த காலமாகையால் மருந்துகள் கிடைப்பது அபூர்வமாகி விட்டது. தகுந்த வைத்தியர்களும் கிடைக்கவில்லை. உள்ளது கொண்டு ஒருவாறு வைத்தியசாலைகள் நடைபெற்றன. எல்லா வைத்திய சாலைகளிலும் சுவிசேஷ ஊழியம் நடைபெற்று வந்தது. இது விஷயத்தில் Dr. வேதபோதகம் வெகுசிரத்தை கொண்டவ ராயிருந்து பணிசெய்தார்.

**நூற்பதிப்புகள்**

யுத்த காலமாகையால் கடுதாசி விலை உயர்வுற்றது. பிரசுர வேலைகள் பாதிக்கப்பட்டு நூல்களின் கிரயம் அதிகமாயிற்று. வாங்குவோரும் குறைந்தனர். இது கண்ட நூல் பிரசுர சங்கத்தார் நூல்களின் விலை குறைந்தால் விற்பனை பெருகும் என எண்ணி ஆராதனைகளுக்கு வேண்டிய வேதாகமம், ஜெபபுத்தகம், கீர்த்தனை ஆகிய நூல்களின் விலையைக்குறைக்க எண்ணினர். எழுத வாசிக்கத்தெரிந்த அத்தனைபேருக்கும் குறைந்த விலையில் ஆராதனை புத்தகங்கள் கொடுக்க முயற்சித்தனர். சென்னை நூல் பிரசுர சங்கத்தார் இதை ஏற்றனர். பல இடங்களிலுள்ள வெவ்வேறு சபைகளும், S. P. G சங்கத்தாரும், தனி நபர்களும் பொருள் கொடுத்துதவினர். இவ்வேற்பாட்டால் ரூ. 1—8—0க்கு விற்ற வேதாகமம் 14 அணாவுக்கும், சுருக்க பதிப்பான ஜெபபுத்தகம் 12 அணாவில் இருந்து 8 அணாவுக்கும், கீர்த்தனை 14 அணாவில் இருந்து 8 அணாவுக்கும் குறைக்கப்பட்டது. இதனால் 10,000 கீர்த்தனைகளும், 10,000 ஜெபபுத்தகங்களும் 8000 வேதாகமங்களும் வெகு விரைவில் விலையாயின. அத்தியட்சாதீன சங்கங்கள் பணஉதவி செய்ய சம்மதித்ததால், Thrower பண்டிதர் இயற்றிய தமிழ் வேதாகம அகராதி பாதி விலைக்குக் கொடுக்கப்பட்டது.

ஒவ்வொரு வருஷமும் சபை ஊழியருக்கு வேதபாடங்கள் பிரசுரிக்க ஏற்பாடாயிற்று. சென்னை அத்தியட்சர் எழுதிய பத்து

வருட வேதபாடத் திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு புத்தகங்கள் எழுதப்பட்டன. ஆனால் 1939ம் ஆண்டு பரீட்சைக்கு வேண்டிய புத்தகம் அச்சிடக் கூடாது போயிற்று. ஆனால் 1941ம் ஆண்டு ஜனுவரியில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. இதன் பின் ஆண்டுதோறும் நாலு புத்தகங்கள் வெளியாயின. அவை பழைய ஏற்பாட்டு ஆகமம் ஒன்று, புதிய ஏற்பாட்டு ஆகமம் ஒன்று, கிறிஸ்தவ ஆராதனை, திருச்சபை சரித்திரம் ஒன்று. நீல் அத்தியட்சர் காலத்தில் 2500 பக்கங்கள் கொண்ட 25 நூல்கள் வெளியாகின. இத்தகைய நூல் வளர்ச்சி வேறு எந்தத்தமிழ்ச் சபையிலும் காணாத ஒன்றாகும். மேற்கூறிய நாலு வகைப்புத்தகங்களே சபை ஊழியர் வேதாகமப் பரீட்சைக்குக் கொடுக்கப்பட்டன. இதனால் பக்குவமடைந்த சபை ஊழியர்களின் வேத அறிவு மாணவர்களிடத்தும் சபை மக்களிடத்தும் வளர ஏதுவாயிற்று.

இந்திய திருச்சபைக்குப் பயன்படக் கூடிய பல ஆங்கில பிரசுரங்களையும் நம் அத்தியட்சாதீனம் இயற்றியது. நீல் அத்தியட்சர் விசுவாச சத்தியங்கள், (Beliefs) மூலாதார விசுவாசக்கொள்கைகள். (Foundation Beliefs) தெய்வ கோபமும் தெய்வ சமாதானமும், (The wrath and Peace of God) ஆங்கிலத் திருச்சபை (Ecclesia Anglicana) என்னும் நூல்களை இயற்றியுள்ளார். திரு A. J. அப்பாசாமி பண்டிதர், சுவிசேஷமும் இந்தியாவின் சுதந்திரமும், இந்திய திருச்சபையில் கிறிஸ்து பெருமான் என்னும் புத்தகங்களையும் எழுதியுள்ளார். இவை திருச்சபை மக்களுக்குப் பயனுடையதாயுள்ளன.

ஐரோப்பியர்களுக்குள் நடத்தப்படும் குருத்துவப் பணியிலும் இவரது காலத்தில் சிறந்ததொரு முன்னேற்றம் காணப்பட்டது. திருநெல்வேலி அத்தியட்சாதீனமானது சென்னை அத்தியச்சாதீனத்தின் ஒரு பாகமாக இருந்த காலத்திலும் ஐரோப்பியருக்கு நம் அத்தியட்சாதீன விசாரணையில் எவ்வித பங்கும் இருந்ததில்லை. அத்தியட்சாதீன ஆலோசனை சபையில் பிரதிநிதித்துவமும் ஐரோப்பியர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. இந்நிலை 1944ம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் கூடிய அத்தியட்சாதீன ஆலோசனை சபையில் மாற்றப்பட்டு தமிழ் கிறிஸ்தவர்கள் அனுபவித்த அதே உரிமைகள் இவர்களுக்கும் கொடுக்கப்பட்டன. ஐரோப்பிய சபைகளை விசாரணை செய்யும் ஒரு தனி மன்றம் (Chaplaincy Board) நிறுவப்பட்டது. இது ஐரோப்பிய சபைகளின் பொருளாதாரத்தையும் இதர விஷயங்களையும் நிர்வாகித்து வந்தது. இவர்களுக்கென்று இரு ஐரோப்பிய குருக்கள் பிரத்தியேகமாக நியமிக்கப்பட்டனர். ஐரோப்

பிய சபைகளில் இவர்கள் ஒழுங்காய் ஆராதனை நடத்தி வந்தார்கள்
தமிழ் மொழி தெரியாத பிற மாவட்டக் கிறிஸ்தவர்கள் இங்
கிலச் சபைகளுடன் சேர்ந்து ஆராதிக்கலாம். பாளையங்
கோட்டையிலும் அதின் சுற்றுப்புறங்களிலுமிருந்த மலையாளி
களுக்குப் பாளையங்கோட்டை ஆங்கில ஆலயத்தில் மலையாள
பாஷையில் ஆராதனை நடத்திக் கொள்ள ஒழுங்குசெய்யப்பட்டது
இவர்கள் ஆங்கில ஆலய விசாரணை சபைக்கு உட்பட்டு நடக்க
வேண்டும். இது போன்று இந்திய கப்பல் படையைச் சேர்ந்த
ஹிந்தி கிறிஸ்தவர்களுக்கும் இவ்வாலயத்தில் அவர்கள் மொழியில்
நடத்த ஏற்பாடாயிற்று. இந்த ஒழுங்கு ஐரோப்பிய சபைகளின்
விசாரணை சங்கத்தால் செய்யப்பட்டது.

இந்த ஆங்கிலச்சபை அமைப்புக்குக் கொடுக்கப்பட்டு வந்த
அரசு மானியம் ஐந்தில் ஒரு பங்கு குறைக்கப்பட்டது. இதை ஈடு
செய்ய மேற்றிராணியாரின் பொக்கிஷத்தில் இருந்து ஒரு தொகை
கொடுக்கப்பட்டது. கொடைக்கானலில் தங்கிய ஐரோப்பியர்கள்
உதாரத்துவமாய் ஊழியத்திற்குக் கொடுத்தனர் எஞ்சியதை ஒரு
சேமிப்பு நிதியாக பிற்கால ஊழியத்திற்கு ஒதுக்கீடு செய்தனர்.

**பாலியர் சங்கம்**

மகாகனம் நீல் அத்தியட்சர் காலத்தில் பாலியர் சங்கமானது
தனது பொன்விழாவைக் கொண்டாடினது அக்கால இச்சங்கச்
சேவை திருப்தி அளிப்பதாயில்லை பாலியர்நேசன் பத்திரிகை
ஒழுங்காய் அச்சிடப்பட்டு பல இடங்களுக்கும் அனுப்பப்பட்டது.
வாசகரின் தொகை பெருகிற்று. ஆனால் பெரும்பாலான பிள்ளை
களுக்குத் தங்களுக்கென்று ஒரு சங்கம் இருப்பதாகவே தெரியாது.
பாலியர்நேசப் பிரசங்கிமார், முக்கிய சம்பவங்களில் மட்டும் ஒளி
விசித்திரப் படம் காட்டி விட்டு மற்ற சமயங்களில் சபைப் பிள்ளை
களோடு தொடர்பு கொள்ளவில்லை. ஊழியத்தில் அவர்களுக்கு
எவ்விதப் பிரீதியும் முயற்சியும் இல்லை. ஆகவே இச்சங்க
ஆலோசனைக்காரர். ஊழியத்திலும் ஊழிய முறைகளிலும் மாறுதல்
அவசியம் என எண்ணி 1944ல் மூன்று உதவிக் குருக்களை
சிறுவரின் ஊழியராகக் கொடுக்கும்படி அத்தியட்சரைக் கேட்டுக்
கொண்டனர். குருத்துவ ஊழிய ஆலோசனைச் சபையார் சம்மதத்
தின் பேரில் இவ்வாறு நியமனம் செய்யப்பட்ட மூன்று உதவி
குருக்களும் 1943 ஜூன் மாதத்தில் இருந்து தங்கள் புதிய பணி
விடையை ஆரம்பித்தனர். இவர்கள் பரவலாக ஊழியத்தைச்
செய்யாமல் குறிப்பிட்ட இடங்களில் பலமான ஊழியத்தைச்
செய்யவும் சபை ஊழியர்களுக்குச் சபைப் பணிகளில் உறுதுணை
யாயிருக்கவும் கட்டளை பெற்றனர்.

பாடசாலை மாணவர்களுக்கு ஆண்டுதோறும் குற்றாலத்தில் ஆவிக்குரிய கூட்டம் நடைபெற்று வந்தது. மாணவர்களின் வருகை ஆண்டுதோறும் கூடியிற்று. 1943 இல் வந்த மாணவர்கள் 200 ஆகும். கிறிஸ்தவ சபையில் சேரும் மாணவர்களுக்கு அருவி ஓடையில் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. இவர்களுக்குச் சிறந்த முறையில் கூட்டம் நடத்த நம் அத்தியட்சாதீனத்தில் திறமைசாலிகள் வெகு சிலரே.

இந்தியாவின் சிறுவர் சங்கப் பிரசங்கியான R. T. ஆர்ச்சிபால்டு வருகை தருவதுண்டு. சிறுவர் கூட்டம் நடத்துவதில் ஆர்ச்சிபால்டு துரையையே முற்றிலும் சார்ந்திராமல், நம் அத்தியட்சாதீனத்தில் இவ்வூழியத்தில் திறமை கொண்டவர்களைக் கொண்டு நடத்த வேண்டுமென்று சிறுவர் ஊழிய ஆலோசனை மன்றத்தார் தீர்மானம் செய்தனர்.

### பெண்களின் ஊழியம்

தாய்மார் ஐக்கிய சங்கம் பெண்களுக்குள் சிறப்பான ஊழியத்தை நடத்தி வந்தது. சோபி டெய்லர் அம்மையார் தாய்மார் சங்கத்தின்நிரந்தரத்தலைவி. அதின் காரியதரிசி ஸ்மித் அம்மையார் அவர் யுத்த சேவைக்குச் சென்றுவிட்டபடியால் தாய்மார் ஊழியத்திற்குப் பெரும் நஷ்டம் ஏற்பட்டது. டெய்லர் அம்மையாரால் சிறந்த வேலை நடைபெற்று வந்தது. அக்காலத்தில் ஸ்திரமான சபைகள் 700 ஆகும். ஆனால் தாய்மார் கிளைச்சங்கங்கள் 116 மட்டுமே. இது விசனிக்கத்தக்கதொரு காரியமாகும். அக்காலத்தாய்மார் சங்க பிரசுர வெளியீடு நற்போதகத்தில் வந்தது. அதுவும், நின்று போயிற்று. தாய்மார்களுக்கென்று வேனிற்கால வகுப்புகள் நடைபெற்றன. ஆகாரப் பொருட் பஞ்சத்தால் இவ்வகுப்புகள் நின்று போயிற்று. எனினும் 1943ம் ஆண்டில் 17 வகுப்புகள் நடைபெற்றன. அதில் 900 பெண்கள் பங்கெடுத்தனர்.

அத்தியட்சாதீனப்பெண்களுக்குள் குருத்தொகுதிஸ்தாபனங்கள் நடத்தி வருபவை நீங்கலாக 24 இரவுப்பள்ளிகள் தாய்மார் சங்கத்தால் நடத்தப்பட்டு வந்தன. இப்பள்ளிகளைப் பார்வையிட ஓர் பார்வையாளரான அம்மையார் உண்டு. இப்பள்ளிகளினூல் பயனடைந்த இளமையான ஸ்திரிகள் ஜெபம் செய்யவும் பாட்டுகள் பாடவும் கிறிஸ்தவ சத்தியங்களை நன்கு அறிந்து கொள்ளவும் வல்லவர்கள் ஆனார்கள். இதிலும் மேலான நிலையில் நடத்த அத்தியட்சாதீன நிதி நிலை இடங்கொடுக்கவில்லை.

நம் நீல் அத்தியட்சர் காலத்தில் விடிவெள்ளி ஆட்சிரமமா னது தனது பத்தாண்டு நிறைவு விழாவைக் கொண்டாடிற்று இவ் ஊழியத்தில் தக்கப் பலன் கிடைத்தது எனக் கூறுவதற்கில்லை, பத்துக்கும் குறைவானவர்களே மார்க்கத்தில் சேர்ந்திருந்தனர். ஆரம்ப காலத்தில் இவ்வூழியத்திற்கு ஒப்புக்கொடுத்த இரு சகோதரி களைத் தவிர வேறு யாரும் முன் வராதது நம் அத்தியட்சாதீனத்தின் ஒரு குறையே.

திருமறையூர் குருத்துவ மாணவரின் மனைவிமாருக்கும் சபை ஊழியப் பயிற்சியும் மாணவர்களின் மனைவிகளுக்கு வேதபாடமும் கிராமச் சேவை போதனையும் நடத்தப்பட்டு வந்தன.

### அத்தியட்சாதீன நிதி நிலை

நம் அத்தியட்சர் காலத்தில் மேல்நாட்டு பண உதவி வந்து கொண்டு இருந்தது. மத்திய பண நிதி குறைவுபட வில்லை. அத்தியட்சாதீன ஊழியர் அவசிய மத்திய பண நிதி (Central Emergency Fund) மூலமாய் உதவிய பணத்தால் ஒவ் வொரு வருஷமும் வரவு செலவைக் கஷ்டத்துடன் தான் சமநிலையில் வைக்க வேண்டியதாயிற்று. இந்நிலையிலும் அவசிய வேலைகள் நடைப்படவில்லை. மேற்கூறிய நிதியானது ஊழியரின் சம்பளத்தில் விதிக்கப்பட்ட வரியல்ல. பூரண மனப்பிரியத்துடன் கொடுக்கப் பட்டதாகும். சபை மக்கள் மூலம் வரவு, எதிர் பார்த்த அளவுக்கு இல்லை சபை வளர்ச்சி அடைந்த போதிலும் சபையாரின் சங்கக் காணிக்கை, கோவில் காணிக்கை மற்றும் காணிக்கைகளும் குறைந் தே போயிற்று. இக்குறை நீங்க மக்களின் ஆன்ம வளர்ச்சி வளர்ப் பிக்கப்படல் வேண்டும். என்ற கருத்துக் கொண்டனர்.

அத்தியட்சாதீனத்தின் பொருளாதாரக் கஷ்டத்தில் அதிக மாய் பிடிக்கப்பட்டவர்கள் சபைஊழியர்களும் ஊழியக்காரிகளாகிய அவர்களின் மனைவிகளுமே. சர்க்கின் தொகுதியில் ஏற்படும் நஷ்டத்திற்கு ஈடு செய்ய சபை ஊழியர்களின் சம்பளமே பிடிக்கப் பட்டது. சுய நன்கொடை என்னும் ஒரு பெயரால் வரி விதிக்கப் பட்டது. சில சமயங்களில் ஊழியர்கள் தம் ஊதியத்தில் நாலில் ஒரு பங்கைப் பிடித்தமாகக் கொடுக்க வற்புறுத்தப்பட்டனர். இந் நிலை கண்ட அத்தியட்சர் 1/12 பாகத்திற்கு மேல் சம்பளப் பிடித் தம் செய்யக் கூடாதென்ற கண்டிப்பான ஒரு சட்டம் பிறப்பித்தார். இக்கொடிய காலத்திலும் ஊழியர்கள் கொடி ஏந்திப் போராடாமல் பூரண மனத்தோடு கொடுத்தும் உழைத்தும் வந்தார்கள் என்பது கண்டு மெச்சத்தக்கது.

**பிற குறிப்புகள்**

நீல் அத்தியட்சர் காலத்தில் தமது அத்தியட்சாதீன மூலச் சட்டத்தில் நுட்பமான சில மாறுதல்கள் செய்யப்பட்டன. அத்தியட்சாதீன விசாரணையில் பெண்களுக்குச் சொந்த உரிமை இருந்து வந்தது. இது தமது அத்தியட்சாதீன சட்டத்தின் ஒரு குறையே.

அத்தியட்சாதீனத்தின் குருத்தொகுதிகள் பலவற்றை ஒரு குருத் தலைவரால் (Circle chairman) விசாரணை செய்வது கூடாததாய் இருந்தது. இங்ஙனே இடது பறந்த தென்காசி அம்பாசமுத்திரம் பாலூர்சத்திரம், சாம்பூர் வடகரை, விக்ரமசிங்கபுரம் ஆகிய இடங்கள் ஒவ்வொன்றும் தனிக்குரு ஸ்தானங்கள் ஆக்கப்பட்டன. நான்குநேரியும் நாசரேத் கிராமப்பாகமும் புதிதாய்க் குரு ஸ்தானங்களாக்கப்பட்டன. இம்மாற்றத்தின் நோக்கம் ஒரு குருத்தொகுதி தலைவருக்கு (Circle chairman) 20 பாடசாலைகளுக்கு மேல் விசாரணைக்கு ஒப்புவிக்கக் கூடாது. 1500 சபையாருக்கு மேலான பொறுப்பும் இருக்கக்கூடாது என்பதே இத்தீர்மானம் இருப்பினும் செயல் முறைக்கு வந்ததெனக் கூறமுடியாது.

1942ம் ஆண்டு செப்டெம்பர் திங்கள் 3ம் நாள் அத்தியட்சாதீனத்தின் முதல் கூட்டுறவு வியாபாரச் சங்கம் பாளையங்கோட்டையில் ஸ்தாபிக்கப்பட்டது. அதின் கிளை மெஞ்ஞானபுரத்தில் திறக்கப்பட்டது. அதே ஆண்டில் அத்தியட்சாதீனத்திற்கு ஒரு அச்சகத்தை வாங்க எண்ணினர். ஆரம்ப காலத்தில் அது சிறிதெனினும் இன்று விரிவடைந்து அத்தியட்சாதீனப் பொருளாதாரத்திற்கு ஈடு செய்கிறது.

நீல் அத்தியட்சர் அத்தியட்சாதீனப் பணியிலும் புறம்பான பல துறைகளிலும் ஈடுபட்டு மெய்வருத்தம் பாராது உழைத்து வந்தார். தமது மோட்டார் வாகனத்திற்கு வேண்டிய அளவு எண்ணெய் (Petrol) கிடையாததால் புகைவண்டியில் பிரயாணம் செய்து வந்தார். இதில் பல கஷ்டங்கள் உண்டு. வேலைப் பளுவினால் அவர் சுகம் கெட ஆரம்பித்தது. அவருக்கு இயற்கையான தூக்கமின்மை வெகுவாய் அவரைப் பாதித்தது. நிற்க இந்தியாவின் சுதந்தர உணர்ச்சி ஆங்கிலேயர்களை வெறுக்கும் நிலையை உருவாக்கிக் கொண்டிருந்தது. இதுவும் ஒருவாறு அவரைப் பாதித்தது. 1944 ஜூலை மாதத்தில் இளைப்பாறும் நோக்கத்தோடு சுயநாடு சென்றார். அவர் மறுபடியும் இந்தியாவுக்கு வர அனுமதிக்கப்படவில்லை. ஆகவே மகாகனம் நீல் அத்தியட்சர் திருநெல்வேலி அத்தியட்சாதீன அத்தியட்சப் பதவியை ராஜினாமா செய்தார். இதைக் கேட்ட உள்ளங்கள் சஞ்சலமடைந்தன. இதுதம் அத்தி

யட்சாதீனத்திற்கு ஈடு செய்யக்கூடாத ஒரு பெரும் இழப்பு ஆகும். நம் அத்தியட்சாதீன காரிய நிர்வாக சங்கத்தார் ஓர் அனுதாபத் தீர்மானம் செய்தனர்.

"மகாகனம் நீல் அத்தியட்சர் ராஜினமா செய்ததையும் அதை ஒப்புக் கொண்டதையும் கேள்வியுற்று இச்சங்கம் வருந்துகின்றது. அவரது ஆறு ஆண்டு ஊழியத்தை இச்சங்கம் உள்ளத்தின் நன்றியுடன் பதிவு செய்கிறது. அவரின் அபூர்வ அறிவுத் திறன், சபை ஆளுகையில் அவரின் விசேஷத்திறமை, தமிழ்ப் பாஷை பாண்டித்தியம், சிறியோர் பெரியோர் யாவரிடத்தும் அவர் காட்டிய இனிய அன்பு ஆகியவற்றைப்பெருமதிப்புடன் இச்சங்கம் பாராட்டுகிறது. அவர் தம் ஊழியத்தை விட்டு நீங்கிக் கொண்டது. பெரும் நஷ்டம். எல்லாம் வல்ல இறைவன் அவருக்கு வேறொரு பணிவிடையை ஏற்படுத்தி அவர் தீர்க்காயுசுடன் உத்தம ஊழியம் செய்ய அருள் புரிய வேண்டும்" அவர் தமது அத்தியட்ச பணிவிடையிலிருந்து நீங்கிய பின் சர்வகலா ஸ்தாபனமான கேம்பிரிட்ஜில் அமர்ந்து அங்கும் பிற இடங்களிலும் திருச்சபைக்குச் சிறந்த பணியினை ஆற்றி வந்தார். காந்தர்புரி பிரதம அத்தியட்சரின் உதவி அத்தியட்சராக நியமனம் பெற்றார். இன்னும் தன் முதிர்ந்த வயதில் அரிய சேவை செய்து வருகிறார். நம் நெல்லை திருச்சபையின் இரு நூற்றாண்டு விழாவுக்கு வர இருக்கிறார். அவர் பிரயாணம் வாய்க்க சுகம் கிடைக்க நம் ஜெபம் தேவை,



# பேராயர் G. T. செல்வின் M. A.

வாலிபனான ஒரு பேனாட்டுக் குரு நமது இளம் வாலிபர்களைக் கவர்ந்து கிறிஸ்தவர்களாக்கி நமது சமுதாயத்தைக் கலக்குகிறாரே என உயர் ஜாதி இந்துமதப் பெரியார் பலர் நெல்லை நகரில் குறை கூறிக் கொண்டிருந்தனர். 1917 ம் ஆண்டில் நெல்லை நகரில் கொடிய காலரா பரவி பலரைக் கொள்ளை கொண்டது. மருந்துகளோ தடுப்பூசிகளோ காணக்காலம். இறந்தவர்களை அடக்கம் செய்வதற்குக் கூட ஆட்கள் அரிதாயினர். நோயாளிகளைக்கவனிக்காது இனத்தவர் கூடப் பயந்து ஓடினர். மருத்துவத் துறையினர் உதவி செய்யமுடியாதிருந்தனர். ஆனால் பேனாட்டு வாலிபக்குருவும் அவரது மாணவர்களும் நோயாளிகளின் அருகிலமர்ந்து பொட்டாஸியம் பெர்மாங்கனேட் மாத்திரைகளைக் கொடுத்தனர். ஜெபித்தனர். இரவு பகலாகத் தமது சுகத்தைப் பேணாது உழைத்ததன் பயனாகப் பலர் பிழைத்தனர். பலர் அவருடன் சேர்ந்து உயிர் காக்க வந்தனர் நான்கு மாதங்களின் தியாக ஊழியத்தால் நோய் நீங்கி மக்கள் விடுதலை பெற்றனர். மகிழ்ந்தனர். குழுவின் அயரா உழைப்பினால் உடல் மெலிந்ததைக் கண்டனர். நெல்லை வீதியில் ஓர் பெரும் பவனி-அலங்கரிக்கப்பட்ட கோவில் யானை முன் செல்ல மகிழ்ச்சி நிறைந்த மக்கள் கூட்டம் ஐயரவர்களின் பங்களாவை நோக்கிச் சென்றது. குருவோ அப்புகழை விரும்பாது வேறுவழியாக அயலூர் சென்று விட்டார்கள். ஆனால் அக்கூட்டம் நன்றித் தீர்மானங்கள் நிறைவேற்றி நெல்லை நகரசபையின் தலைவராகப் பதவி அளிக்கத் தீர்மானித்தனர். நெல்லை நகரசபைத் தலைவராகவும், மிஷனரியாகவும் பணியாற்றிய வாலிப குருவே பிற்காலம் நெல்லை பேராயத்தின் பேராயராகச்சிறந்த தொண்டாற்றிய பெரும் தலைவர் பேராயர் G. T. செல்வின் ஆவர்.

பதினைந்தாம் நூற்றாண்டு முதல் இங்கிலாந்து தேச பாராளுமன்ற அங்கங்களாகவும், திருச்சபையில் அத்தியக்ஷர்களாகவும், கல்வித்துறையில் உயர் பதவியிலும் பணி புரிந்த பல பெரியார்கள் தோன்றிய பரம்பரையான செல்வின் பரம்பரையில் நாட்டிங்காம் நகரில் 1887 ம் ஆண்டு ஜூலை மீ 3 ம் நாள் அருள்திரு W. M. செல்வின் ஐயரவர்களுக்கும் திருமதி பிளாஞ்ச் மார்கரேற்று அம்மையாருக்கும் தலைமகனாகப் பிறந்தார். அவருக்கு ஜார்ஜ் தியோடர் செல்வின் என்று பெயர் சூட்டினர். இன்று செல்வின்என்ற பெயரால் திருநெல்வேலி பாவட்டத்தில் நூற்றுக்கணக்கானோர் பெயரிடப்பட்டுள்ளனர். பின்னர் செல்வின் தம்பதியினர் கடற்கரை நகரான காம்றன் நகருக்குச்சென்றனர், அங்கு ஓர் மீன் பிடித்துறை. ஜார்ஜ்

இளமையிலேயே அன்புளம் கொண்டவர் மூன்று வயதுக்கும் குறை வான அவர் தமது தம்பியுடன் தம் விளையாட்டுப்பொருட்களைப்பகிர்ந்து விளையாடுவார். அவரது ஏழாவது வயதில் கான்ஸ்டன்ஸ் ஹெலன் என்ற ஒரு தங்கை பிறந்தார் இளமையிலேயே தாயார் மறுமைக் குட்பட்டார்கள். அவர்கள் தங்கள் பிள்ளைகளைத்தமது இருபக்கமும் உட்கார வைத்து ஜெபிக்கவும், வேத சரித்திரங்களைப் படிக்கவும் பழக்கிய காக்ஷி என்றும் ஜார்ஜின் உள்ளத்தை விட்டு விலகவில்லை. இரு சகோதரரும் ராம்கேற்றிலுள்ள லாரன்ஸ் கல்லூரியில் கல்வி கற்றார்கள். 1908 ம் ஆண்டு ஜார்ஜ் கேம்பிரிட்ஜ் கார்ப்பஸ் கிறிஸ்றி கல்லூரியில் M. A. பட்டம் பெற்றார். ஓராண்டு ரிட்லி ஹாலில் வேத சாஸ்திரம் கற்று 1910 ம் அக்டோபர் மாதம் பத்தாம் நாள் டீக்கன் அபிஷேகம் பெற்று பேவாட்டர் தூய மத்தேயு ஆலய உதவி குரு வாக நியமிக்கப்பட்டார்கள். 1911 ல் குருவாக அபிஷேகம் பெற்றார் கள். அங்கு பணிபுரிகையில் சுவிசேஷப் பணி அழைப்பைப் பெற்று 1912 ம் ஆண்டு டிசம்பர் மாதம் திருநெல்வேலி வந்தடைந்தார்கள்.

## நற்செய்திப் பணி

ஆப்பிரிக்காவிலும் தூர கிழக்கு நாடுகளிலும் நற்செய்திப்பணி புரிய 1799 ம் ஆண்டு ஏப்ரல் மீ 12 ம் நாள் உருவான சர்ச் மிஷனரி சங்கத்தின் ஆதரவில் பணிபுரிய அருள்திரு ஜார்ஜ் தியோடர் செல்வின் ஐயரவர்கள் விரும்பினார்கள். அச்சமயம் திருநெல்வேலி யிலிருந்து மிக அவசரமான வேண்டுகோள் வந்தமையால் அதனை ஐயரவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். திருநெல்வேலியில் பணி செய்வதென்றால், கடவுளின் அழைப்பை உண்மையாகப் பெற்று பாடுபடவும், யாவராலும் பகைக்கப்படவும், தனியாகக்கூட போராட வும், தன்னையே தியாகம் செய்து ஜீவனைக் கொடுக்கவும் கூடத் தயாராக இருக்க வேண்டுமென்பது ஐயரவர்களது தளராத நம் பிக்கையாகும். ஒவ்வொரு கிறிஸ்தவனும் அனுதின வாழ்க்கையில் கடவுளின் தூதுவனாக விளங்கவேண்டும். இத்தகைய தரிசனத்தைக் கொண்டவராக தமது பணியைத் தொடங்கினார்கள். ஐயரவர்கள் மிஷனரியின் தன்மையை பூரணமாகப் பெற்றிருந்தார்களென்று கூறின் அது மிகையாகாது. இத்தேச மக்களை இறைவனிடம் வழி நடத்தி, அவர்கள் வாழ்க்கையில் உயர்வு பெற்று மேலோக இன்பங் களடைய சன்னியாசியாகவே தன்னைத் தியாகம் செய்து தம்மை வந்தடையும் பணியனைத்தையும் ஏற்றுத் தொண்டாற்றினார்கள். வேத கலை கற்பிக்கவும், செக்கண்டரிக் கல்விச் சாலைகளை நிர்வகிக் கவும், ஆசிரியர் பயிற்சிப் பள்ளியின் பணியை ஏற்றும், கல்லூரித் தலைவராகவும், திருச்சபையின் மேய்ப்பனாகவும், சிறந்த பல பணி கள் புரிந்தார்கள். தனது சமயத்தையும், பணத்தையும், தாலந்து

களையும் மக்களின் தேவைக்கென செலவிட்டுத்துறவியாகத் தியாக சிந்தையுடன் வாழ்ந்தார்கள். சைவ மரபினர் பலரை மந்தைக்குள் கொண்டு வந்து, உயர் கல்வி பெறச் செய்து, அரசிலும் திருச்சபையிலும் உயர் பதவிக்கேற்றுவதும் ஐயரவர்களின் சிறப்பாகும். "இந்தியருக்கு இந்தியராகவே" வாழ்ந்து இந்திய உணவு உண்டு. வேஷ்டிசட்டை அணிந்து இந்தியாவை கிறிஸ்துவண்டை கொண்டு வரத்தியாசம் செய்யதார்கள். இந்திய நண்பர்களுடன் நடந்தும் மாட்டு வண்டிகளிலும் துவிச்சக்கரவண்டிகளிலும் கிராமங்களுக்குச் சென்று, வெயிலென்றும், மழையென்றும், கரடு முரடான பாதையென்றும் பாராது நற்செய்தி அறிவித்தார்கள். முதல் வேனிற்காலம் சோதனையின் நாட்களானது. கொடிய ஜுரம் பிடித்ததில் ஐயரவர்கள் இங்கிலாந்திற்கு அனுப்பப்பட்டார்கள். 1913 டிசம்பரில் சுகம் பெற்று நெல்லை வந்தார்கள். சாக்ஷியாபுரத்தில் தங்கி மிஷனரிப் பணி புரிந்து வந்த கனம் ராக்லாந்து ஐயரவர்கள் மறுமைக்குட்பட்டதால் அவர்களது பணியும், ஊழியர்களைப் பயிற்றுவிப்பதும், நெல்லை ஜில்லாவின் நற்செய்திப் பணிப் பொறுப்பும் ஐயரவர்களின் மேல் விழுந்தது. பல பொறுப்புகளை மேற் கொண்டதால், தமிழ் மொழியில் தேர்ச்சிபெற முடியவில்லை. பட்டதாரிகள் பிஷப் கல்லூரியில் வேத கலை கற்றனர். மூத்த பல குருக்கள் மறுமைக்குட்பட்டனர். பலர் ஓய்வு பெற்றனர். எனவே 1916 ல் பழைய பேட்டையில் ஐயரவர்கள் தலைமையில் ஓர் வேத கலைப்பள்ளி ஆரம்பிக்கப்பட்டது. அருள்திரு M. V. ஜாண் ஐயரவர்கள் துணை ஆசிரியராகப் பணிபுரிந்தார்கள். இப்பணியில் அருள் பெருந்திரு உவாலர் அத்தியக்ஷரவர்கள் பெரும் துணை புரிந்தார்கள். சென்னை பேராயத்தின் உதவியால் மாணவர் இல்லங்கள் கட்டப்பட்டன. தோர்ணக்கல் அத்தியக்ஷாதீனம் நூல் நிலையம் அமைக்க உதவி தந்தது. வேத கலைப் பள்ளி பல பணிகளை வெற்றியுடன் நிறைவேற்றினது. சுற்றுப்புறங்களில் நடைபெற்ற நற்செய்திப்பணி பல கிராமங்களைக்கலக்கியது ஐயரவர்களின் வாழ்கை கல்லூரிப் பணி காலை மாலை ஆராதனைகள் முதலியவை உயர் கல்வி கற்றோர் பலரைக் கவர்ந்தது. சிறுவர் சிறுமியர்களுக்கும் தமது அலுவலகத்தில் சிறந்த வகுப்புகள் நடத்தி வேதம் கற்பித்தார்கள். ஆங்கில குரு ஈசாக் உவால்ட்டன் என்பார் தமது நூலில் "ஐயரவர்கள் நூல்கள் எழுதவில்லை. ஆனால் தமது வாழ்க்கையை மக்களின் உள்ளத்தில் எழுதியுள்ளார்" எனக் கூறுகிறார். டாக்டர் அப்பாசாமி அவர்கள் "வெஸ்லியன் மிஷனெரி எல்லிஸ், நமது மிஷனரி செல்வின் ஆகியோர் தங்களின வாழ்க்கையால் தாலந்து உடையவர்களும் பிற்காலம் முன்னேற்ற மடையவர்களுமான பயன் தரும் பலரின் உள்ளத்தைத் தொட்டு அசைத்து விட்டனர்" எனக்கூறுகிறார். நெல்லையைத் தாக்கிய

காலரா நோய் நீங்ியது. ஐயரவர்களின் கடின உழைப்பால் அவர் உடல் மெலிந்து நலம் குன்றினர். உவாலர் அத்தியக்ஷரவர்கள் ஐயரவர்களைச் சுயநாடு செல்லவோ அல்லது சென்று ஓய்வெடுக்க வோ வற்புறுத்தினர்கள். ஐயரவர்கள் எங்கும் செல்ல விரும்ப வில்லை. ஆறு ஆண்டு காலம் தொடர்ந்து பணிபுரிந்ததால் பல வீனம் அதிகமானது. ஓய்வுபெற சுயநாடு சென்றார்கள். அங்கு சங்க ஆதரவாளர்கள் கூட்டங்களில் மிஷனரிப் பணி பற்றிப் பேசி அவர்களின் ஆதரவைப் பெருக்கினர்கள். விடுமுறை நாட்கள் முடிந்ததும் திருநெல்வேலியில் நடைபெற்ற C.M.S. சங்கத்தின் நூற்றாண்டு விழாவில் பங்கு பெற்றனர்.

## நெல்லை அத்தியக்ஷாதீன சமாதான தூதன்

நெல்லை மாவட்டத்தில் S. P. G. சங்கத்தாரும் C. M. S. சங்கத்தாரும் நற்செய்திப் பணி புரிந்து வந்தனர். உவாலர் அத்தியக்ஷரவர்கள் "அவர்களெல்லாரும் நம்மில் ஒன்றாயிருக்கவும்" என்ற நம் பெருமானின் சித்தம் நிறைவேற தமது ஐயரவர்கள் பேரில் நம்பிக்கை கொண்டனர். ஐயரவர்கள் நெல்லை திரும்பியதும் நாசரேத்தில் S. P. G. சங்கத்தாரால் நிறுவப்பட்டு நடைபெற்று வந்த வேத கலைப் பள்ளிக்குத் தலைவராக அவரை நியமித்தார். அன்று முதல் பேட்டையில் பயிற்சி பெற்று வந்த C.M.S. மாண வரும் நாசரேத்தில் பயின்று வந்த S P.G. மாணவரும் ஒருங்கே கற்கலாயினர். இவ்வூழியத்தில் ஐயரவர்களின் அன்பு, தைரியம், இடையறு ஜெபவாழ்க்கை, தியாகம், முதலியவை வெற்றி தந்தது. புதிய பயிற்சிப் பள்ளியின் ஊழியம் 1925 ல் இரு மிஷன்களும் ஒரு சபையாக இயங்கக் கருவியாயிற்று. நாசரேத் S. P. G. சங்கம் தலைமையகம், செல்வின் ஐயரவர்களின் பணியால் இரு பாரம் பரியங்களும் இணையும் வாய்ப்பு தந்தது. ஏனெனில் "முக்கிய மானவைகளில் ஒற்றுமை காணும் மக்கள் முக்கியமல்லாதவற்றில் வேற்றுமை கண்டாலும் ஒன்றாய் உழைக்கவும், ஜெபிக்கவும் கூடும்" என்ற உறுதியை ஐயரவர்கள் ஆணித்தரமாகக் கொண்டவர்கள். மாணவர்களின் அனுதின வாழ்வில் ஐயரவர்களது ஆலோசனை மக்கள் மேல் கொண்டுள்ள ஆர்வம், சாந்தம், இணக்கம் முதலி யவை அவர்களின் குடும்பங்கள் ஒன்றுக்கொன்று அன்பினால் நெருக்கம் கொள்ளச் செய்தன. வேத விளக்கங்களிலும் இசைவு பெற்று சபை இணைப்பில் வெற்றி பெற்றனர். எனவே 1925 ல் ஆழ்வாநேரி, செவல் சேகரங்களில் ஏற்பட்ட பெரும்பிளவு மட்டுப் பட ஆரம்பித்தது. பொங்கி எழும் கிளர்ச்சியுள்ள கிராமங்களுக்கு ஐயரவர்கள் சென்று, குழப்பம் விளைவிப்போரைச் சந்தித்தும், கூட்டங்களில் பேசியும், தமது நண்பர்களான இந்தியர்

பலரின் துணை நாடியும் வரை இருக்க பெரும் பிரயத்தனப்பட்டனர். இப்பணியில் கனம் M. V. ஜான் ஐயரவர்கள் பெரும் துணையாயிருந்தார்கள். குழப்பம் நிறைந்த பகுதியான செயல், ஆழ்வார்நேரி வட்டங்கள் ஒரு கவுன்சலாக அமைக்கப்பட்டு கவுன்சல் குருவாக நமது ஐயரவர்கள் நியமிக்கப்பட்டார்கள். 'சுத்தாங்க சபை'' என்ற பெயரால் பிரிந்த பல சபைகள் அத்தியட்சாதீன அமைப்பிற்குள் கொண்டுவரப்பட்டன. இது ஐயரவர்களின் மிகப்பெரும் பணிகளுளொன்றாகும். பேராயரைப் பின்பு அச்சபைகளைச் சந்திக்கும் போது அம்மக்களின் ஊக்கமும் மகிழ்ச்சியும் சபையை உயிர்ப்பித்தது. அப்பகுதி மக்களைப் பேர்பேராக அறிந்து உறவு கொண்டு மணிக்கணக்காக அவர்களுடன் உரையாடுவார்கள். கிராம மக்களுடன் தரையில் அமர்ந்து, அவர்களின் எளிய உணவை உண்டு, சிறந்த திண்ணைகளில் படுத்து, அவர்களின் சரீர ஆத்தும தேவைகளை உணர்ந்து ஆலோசனைகளும், உதவிகளும் தந்தார்கள். ஐயரவர்களிடம் பொருளுதவி பெற்றவர்கள் கணக்கிலடங்கா.

## ஆசிரியப்பணி

ஆர்தர் ஐயரவர்கள் மறுமைக்குட்பட்டனர். இங்கிலாந்து சென்ற உவேலன் ஐயரவர்கள் திரும்பவில்லை. அயநாடு சென்று திரும்பி வந்த நமது ஐயரவர்கள் மேல், சர்ஜண்ட் அத்தியட்சர் ஆசிரியர் பயிற்சிப்பள்ளியின் பொறுப்பு விழுந்தது. மேரி ஆர்டன், சுரண்டை டோனாவூர் முதலிய நடுநிலைப்பள்ளிகளும், பாளையங்கோட்டை, மெய்ஞ்ஞானபுரம், ஸ்ரீவில்லிபுத்தூர் முதலிய உயர்நிலைப்பள்ளிகளின் பொறுப்பையும் ஐயரவர்கள் ஏற்க வேண்டியதாயிற்று. அத்திய க்ஷாது ஆணையாளராகவும், உபதலைவராகவும் பணியாற்றியதுடன் ஓய்வு நாள் தோறும் ஆலயங்களில் பிரசங்கங்களும் நிகழ்த்தினார்கள். குற்றாலத்தில் ஆண்டு தோறும் நடைபெறும் சிறுவர் முகாம் கூட்டங்களில் பங்கு பெற்று அவர்களின் வாழ்க்கையில் கிறிஸ்து மகிமைப்பட வழி நடத்துவார்கள். ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் மாதிரிப் பாடம் நடத்துவதும் உயர்நிலைப் பள்ளிகளில் ஆங்கிலமும், வேதபாடமும் கற்பிப்பதும் அவர்களின் விருப்பமாகும். பள்ளிகளில் சிற்றாலயங்கள் கட்டுவதும், அநேக ஆலயங்களைப் பிரதிஷ்டை செய்வதும் அவர்களது நாற்பதாண்டு பணியில் பெரும்பங்காகும். தென்னிந்தியாவில் கல்வித் தொண்டில் நெல்லை அத்தியக்ஷாதீனம் முன்னணியில் நிற்கிறதென்றால் ஐயரவர்களின் சேவையே தான் எனின் மிகையாகாது. மாணவர்களின் வாழ்க்கையை அமைப்பதிலும், நல்ல ஆசிரியர்களையும், உடன் ஊழியர்களையும் சிநேகிதர்களாகக் கொண்டு செயலாற்றுவார்கள்.

இடநெருக்கடியின் காரணமாக நெல்லை C. M. உயர்நிலைப் பள்ளியையும் கல்லூரியையும் பாளையங்கோட்டை ஹைகிரவுண்டிற்கு மாற்றுவதற்குக் கட்டிடங்கள் கட்ட 1925ம் ஆண்டு முயற்சி செய்யப்பட்டது. பழைய மாணவர் சங்கம் அமைத்து வேண்டியவற்றைச் செய்து 1927ல் C. M. கல்லூரி (இன்றைய புனித யோவான் கல்லூரி) பாளையங்கோட்டைக்கு மாற்றப்பட்டது. சாயர்புரம், நாசரேத் முதலிய மத்திய பள்ளிகள் உயர்நிலைப்பள்ளிகளாக்கப்பட்டன. 1930—36ம் ஆண்டுகளில் மேனாட்டு உதவி குறைபட்டது. அரசு மானியங்களும் குறைந்தன. பள்ளிகள் நிர்வாகப்பளு அதிகமானது. எனினும் ஐயரவர்கள் திறம்பட சமாளித்தார்கள். தலைவராக சார்ஜண்ட் அத்தியஷரவர்கள் ஆசிரியப் பயிற்சி பள்ளியில் இருபத்துநான்கு ஆண்டுகள் செய்த சேவை அத்தியட்சாதீனத்திற்கு மிகுந்த உயர்வுதந்தது. நமது நாட்டின் மிகச்சிறந்த மாதிரிப் பள்ளியாக அஃது கருதப்பட்டது. மாணவர்கள் கிராமங்களுடன் தொடர்பு கொண்டு செய்த பணிகள் பலராலும் பாராட்டபட்டன. 1945ம் ஆண்டு பேராயராகப் பணியேற்கும் வரையிலும் சார்ஜண்ட் அத்தியட்சர் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியின் ஐயரவர்களது பணி மிகச்சிறந்த பணிகளிலொன்று எனின் அது மிகையாகாது.

1933ல் ஐயரவர்கள் தகப்பனார் மறுமைக்குட்பட்டார்கள். ஐயரவர்களின் துயர்துடைக்க அவர்களது தங்கை இங்கிலாந்து செல்லும் வழியில் இங்கு வந்தார்கள். 1936ல் இங்கிலாந்து சென்று திரும்பியதும் தூயயோவான் கல்லூரியின் முதல்வர் பொறுப்பை ஏற்றார்கள். இந்தியருக்குத் தலைமைப் பொறுப்பைக் கொடுப்பது அவர்களின் விருப்பம், ஆளுகைக்குழு அதனைச் சிலகாலம் ஒத்தி வைத்தது. அக்காலம் அது இண்டர்மீடியேற் கல்லூரியாக இருந்தது. 1942ல் ஓர் இந்தியர் முதல்வராக நியமிக்கப்படும்படி ஐயரவர்கள் முதல்வர் பதவியை ராஜினாமா செய்தார்கள். மாணவர்கள் மனப்பாடம் செய்யும் யந்திரங்கள் அல்ல. நம் பள்ளிகள் S. S. L. C- அல்லது இண்டர்மீடியட் தேர்வு செய்யும் தொழிற்சாலைகளல்ல என்பது அவர்கள் கருத்து. நமது கல்விச்சாலைகள் மாணவர்களின் அறிவு தெய்வீகப்பண்பு முதலியவற்றை விருத்தி செய்வதற்கேயாகும். அவற்றில் சிற்றாலயங்களைக் கட்டி மாணவர்கள் கிறிஸ்தவப் பண்புடன் தம் கடமைகளைச் செய்ய வழிவகுத்தார்கள். சமூகநல சேவைகளில் மாணவர்கள் பங்கு கொண்டனர். காலரா நோய் பரவிய நாட்களில் பாளையங்கோட்டை வாய்க்கால் தண்ணீரை மக்கள் பயன் படுத்தாதபடி படை போல் நின்று தடுத்தனர். தடுப்பூசி குத்துவதில் மக்களை ஊக்குவித்தனர். சாரண இயக்கத்தின் மாவட்டத் தலைவராக ஐயரவர்கள் பல

ஆண்டுகள் சேவை புரிந்தனர். மாணவர் தங்கிப்படிக்கும் இல்லங்கள் அமைக்கப்பட்டன. நோயுற்ற மாணவர்களைத் தாய் போல் கவனிக்கும் பண்புடையராதலால் 'தாயுமானவர்' என்ற பெயரும் பெற்றார். பலரை போஷித்தும், கல்வியூட்டியும் உயர்பதவிகளில் அமர்த்தியதால் "செல்வின் மைந்தர்" எனப்பெறும் குடும்பம் எங்கும் உளது எனின் மிகையாகாது. 1943ல் ஐயரவர்களின் சமூகநலச் சேவைகளைப் பாராட்டி சக்கரவர்த்தியின் பிறந்த தினத்தன்று 'Keiser-I hind' என்ற பட்டம் வழங்கப்பட்டது

உலக மகாயுத்தம் 1939ல் உண்டானது. இந்திய திருச்சபைக்குப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது பேராயர் நீல் அவர்களும் செல்வின் ஐயரவர்களும் சிறந்த நண்பர்கள். ஆழ்ந்து சிந்தித்தனர். சுயஆதரவில் இந்திய திருச்சபையை நிலைநிறுத்துவது தேவசித்தம் என எண்ணினர். சம்பளம் பெறும் யாவரும் 1/24 சம்பளத்தை நன்கொடையாக வழங்கவழி செய்தார்கள். 1946ம் ௵ தமது கல்லூரி உயர்தரக் கல்லூரியாக உயர்த்தப்பட்டது ஐயரவர்கள் தொடர்ந்து முதல்வராகப் பணியாற்றி திரு வேதவசிரோமணி அவர்களைத் தேர்ந்தெடுத்தமர்த்தியது சிறந்ததொரு சேவையாகும். 1936ல் தூய யோவான் கல்லூரி முதல்வராகப் பொறுப்பு ஏற்றது முதல் பேராயராகப் பதவியேற்ற 1945 வரை ஐயரவர்கள் கல்லூரிக்கு ஆற்றிய பணி போற்றுதற்குரியதே கல்லூரி எத்திசையிலும் புதிய முதல்வரின் நாட்களில் வளர்ந்து பெருக ஆரம்பித்தது.

## பேராயப்பணி

பாளையங்கோட்டை தூயதிரித்துவ அத்தியட்சாலயத்தில் 1941ல் கனோன் தாமஸ்ராக்லாண்ட் கனோன் பட்டம் பெற்றார்கள். தென் இந்திய திருச்சபை ஐக்கியப்பட Dr. அப்பாசாமி, பேராயர் நீல் முதலியவர்களுடன் சேர்ந்து முயற்சி செய்தார்கள். அத்திட்டம் நமது பேராயத்தின் இசைவும் பெற்றது எத்திசையிலும் ஐயரவர்கள் திருநெல்வேலி அத்தியட்சாதீனத்தில் திருச்சபைக்குத் தூணாக விளங்கினார்கள். மிஷனரி சங்கங்களின் பணி குறையவும், இந்திய குருக்கள் பெருகி பொறுப்பேற்கவும், அயல் நாட்டுப் பொருளுதவி குறைவுபடின் சுயஆதரவுடன் சபை வளரவும் ஊக்குவித்தார்கள். சென்னை, திருவாங்கூர் முதலிய இதர அத்தியட்சாதீனங்கள் அத்தியட்சராக அவர்களை விரும்பியும், ஐயரவர்கள் நெல்லை திருச்சபையில் தொண்டாற்றுவதையே நோக்கமாகக் கொண்டார்கள். 1945ம் ஆண்டு நவம்பர் மாதம் 14ம் நாள் சென்னை தூய ஜார்ஜ் பேராய ஆலயத்தில்பேராயராக அபிஷேகம் பெற்றார்கள். 16ம் நாள்

நெல்லை பேராயிராலயத்தில் பேராயப் பொறுப்பேற்கும் ஆராதனை நடைபெற்றது. ஆராதனை முடிந்ததும் நூற்றுண்டு மண்டபம்செல்லும் பவனி, பல தோரணங்களுடனும், வளைவுகளுடனும் அலங்கரிக்கப் பட்டசாலைவழியாகச்சென்றது. அருட்பெரும் திருசெல்வின் அத்தியட்சரவர்கள் நூற்றுண்டு மண்டபத்தில் ஆற்றிய உரைகள், அவர்களிடம் இயல்பாகவே அமைந்துள்ள தாழ்மை, விசுவாசம், இரக்கம் முதலியவை, யாவரையும் அசைத்துவிட்டது. ''இவ்வூழியத்திற்கு என்னை உருவாக்க இறைவன் 57 ஆண்டுகள் எடுத்துக்கொண்டார். நான் இதனை நிறைவேற்றத் தகுதியற்றவன். கிறிஸ்துவே என்னை பலப்படுத்துபவர். அவர் கிருபை எனக்கு போதும்.''

யுத்த காலங்களில் பொருளாதார நெருக்கடி தோன்றியது. உயர்நிலைப் பள்ளிகள் நீங்கலாக 1646 தொடக்கப் பள்ளிகளின் ஊழியர்கள் பற்றுக்குறைவும், பொருளாதாரம் கவலைக்கிடமாயிற்று. பேராயரவர்கள் விசுவாசத்தோடு தோத்திரப் பண்டிகை படைப்புகள், மற்றும் விசேஷ காணிக்கை படைப்புகளை ஊக்குவித்தார்கள். குருக்களின் சம்பளம் அதிகரிப்பதற்குக் கிறிஸ்தவ ஈகை பற்றி எடுத்துக் கூறினார்கள். மாணவர்கள் திடப்படுத்தல் ஆராதனையில் பூரணசபை அங்கத்தினரின் பொறுப்பு, கடமை முதலியவற்றை உணரச்செய்தார்கள். தேச விடுதலை சம்பந்தமாக பல பிரச்சனைகள் தோன்றின. நமது பேராயரவர்கள் இந்தியர் மத்தியில் அந்நியராக வல்ல, கல்வித்துறையிலும், சமூகப் பணியிலும் முப்பத்து மூன்று ஆண்டுகள் பெரும்பங்கு கொண்ட மிஷனரியாக விருந்ததால் அப்பிரச்சனைகள் சபையைத் தாக்கவில்லை. ஆறு ஆண்டு கால யுத்த திற்குப்பின் விலைகள் கடுமையாக ஏறின. தானியங்கள் கிடைப்பதற்கரிதாயின. குருக்களுக்கு விலையேற்றப்படி தருவது கஷ்டமாயிற்று. தேசிய கிறிஸ்தவ சங்கத்தின் ஆலோசனைப்படி மாதிரிப்பண்ணைகளும், பல குடிசைத்தொழில்களும் நிறுவப்பட்டன. ஆர்ச்டீக்கன் கனம் R. V. ஆசீர்வாதம் ஐயரவர்கள் ஓய்வு பெற்றதும் கனம் Dr. A J. அப்பாசாமி அவர்கள் ஆர்ச்டீக்கனுப்பதவி யேற்றார்கள். நற்செய்திப்பணி, ஆவிக்குரிய கூட்டங்கள் முதலிய ஊழியங்கள் வளர்ந்தோங்கின. நமது பேராயரவர்கள் இந்திய திருச்சபை மேனாட்டுப் பார்வையிலும் பொறுப்பிலும் பொதியப் பட்டிருப்பதை ஆரம்ப முதலே விரும்பவில்லை. பிரிந்திருக்கும் திருச்சபை சங்கங்கள் ஒன்றுபட்டு, ஒரே சபையாக இந்தியாவில் சாகூடிபகர விரும்பினார்கள். அவர்களது மகிழ்ச்சி 1947ம் வருஷம் செப்டம்பர் மாதம் மெதடிஸ்ட் சபையும், இந்திய ஐக்கிய சபையும் ஆங்கிலேய திருச்சபையும் 'தென் இந்திய திருச்சபை'யாக இணைந்து தோன்றியதில் பூரணமடைந்தது.

**அத்தியட்சாதீன பொன்விழா**

1947ம் ஆண்டு ஏப்ரல் மாதம் திருநெல்வேலி அத்தியட்சாதீனம் தோன்றி ஐம்பது ஆண்டுகள் முடிவடைந்தன. நமது அத்தியட்சரவர்கள் ஏழாவதாவர். ஒருவாரமாகக் கோலாகலமாகப் பெரும் விழா சார்ஜண்ட் அத்தியட்சர் ஆசிரியர் பயிற்சிப்பள்ளி வளாகத்தில் நடைபெற்றது. நெல்லை ஜில்லாவின் மக்கள் ஏராளமானோர் மாட்டுவண்டிகளிலும், லாரிகளிலும் விழாப்பந்தலில் வந்தடைந்தனர். விவசாய, கைத்தொழில் கண் காட்சிகள் அமைக்கப்பட்டன. ஏப்ரல் மாதம் 17ம் நாள் காலை பரி. நற்கருணை ஆராதனை ஆரம்பமானது- பத்து மணிக்குத் தோத்திர ஆராதனை தொடங்கியது. ஐயாயிரத்திற்கதிகமானோர் பங்கு பெற்றனர். பேராயர், ஆறு உதவியாளர்கள் நூற்றுக்கதிகமான குருக்கள் நூற்றுக்கதிகமான பாடகர்கள் சென்ற பவனியும், சேகரப்பிரதிநிதிகள் வரிசை வரிசையாகக் காணிக்கை படைத்தும் பார்ப்பவர்கள் யாவருக்கும் பரவசமூட்டியது. சேவை செய்த ஏழு அத்தியட்சரவர்களின் படங்களும் பிடிக்கப்பட்டன. அவர்களின் வரலாறுகளடங்கிய நூல் வெளியிடப்பட்டது. S. P. G, C. M. S, S. P. C. K, C. E. Z. M. சங்கங்களின் மிஷெனரிகளின் அயரா உழைப்பிற்காக நன்றி கூறப்பட்டது. படைக்கப்பட்ட தோத்திரக்காணிக்கை ரூ. 10000/- சாராள் டக்கர் தூய யோவான் கல்லூரிகளுக்கு அத்தொகை வழங்கப்பட்டது.

தென் இந்தியத் திருச்சபை ஆரம்பிக்கப்பட்டுள்ளதால் மேலநாட்டுச் சங்கங்களின் உதவிகள் குறைந்தன. எனினும் 1949ல் பொருளாதாரப் பழுநீங்கியது. ரூ. 21000/- உபரியாயிற்று. வரட்சி காலங்களில் தேசிய கிறிஸ்தவ சங்கத்தின் வழியாக, அமெரிக்க பஞ்சநிவாரண அமைப்புகள் ஆகாரப் பொருட்கள் வழங்கின, S. P. G. சங்கம் தனது மானியத்தை நிறுத்தின போதிலும், முன்னாள் நமது அத்தியட்சர் வெஸ்ட்டர்ன் அவர்கள் தூண்டுதலாலும், சந்தர்புரி அத்தியட்சரவர்கள் அனுமதியாலும் இங்கிலாந்து கிறிஸ்தவ ஐக்கிய சங்க நண்பர்கள் பலர் உதவி புரிந்தனர். பேராயரவர்கள் குருக்களின் நலனில் பெரிதும் அக்கறை கொண்டவர்கள். தெருக்கடியின் மத்தியிலும் தென் இந்திய திருச்சபை குருக்களின் சம்பளதாரணை அமுல் செய்யப்பட்டது. சாராள் டக்கர் கல்லூரியில் அரசு மான்யம் நீங்கலாக ரூ. 75000/- செலவில் விஞ்ஞானக்கூடம் கட்டப்பட்டது. பல உயர்நிலைப் பள்ளிகள் திறக்கப்பட்டன. மருத்துவ சாலைகள் விரிவாக்கப்பட்டன. புதிய ஆலயங்கள் பல பிரதிஷ்டை செய்யப்பட்டன. ஓர் ஆராதனையில் 1949ல் 10 குருக்கள் 13 டீக்கன்கள் நாசரேத்தில் அபிஷேகம்

பெற்றனர். அவர்களுள் இதை எழுதும் அடியேனும் ஒருவக்கன். 1950ம் வருஷம் அத்தியட்சாதீன பரஸ்பர இன்ஸூரன்ஸ் நூற்றுண்டு விழா பேராயரவர்களின் தலைமையில் நூற்றுண்டு மண்டபத்தில் கொண்டாடப்பட்டது. 1952ம் ஆண்டு சுவிசேஷம் செல்லாத இடங்களுக்குச் சுவிசேஷம் அறிவிக்கப்பட ஒரு புதிய திட்டம் உருவானது. இந்தியா சுதந்திரம் பெற்றபின் கிறிஸ்தவம் அந்நிய நாட்டின் பிரச்சார வேலை என்ற எண்ணம் மறைய ஆரம்பித்தது. தமிழ்நாடு இறை இயல் கல்லூரியாகத் திருமறையூர் இறை இயல் கல்லூரி உயர்த்தப்பட்டது. அங்கு தென் இந்திய திருச்சபையின் தமிழ் குருத்துவ மாணவர் பயிற்சி பெற்றனர். தமது பேராயரவர்களின் ஏழு ஆண்டு கால பேராயர் பணியில் 22 ஆலயங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டன. 7 உயர் நிலைப்பள்ளிகளும் 21 புதிய சபைகளும் தோன்றின. 1952ம் ஏப்ரல் மாதம் முப்பது ஆண்டுகளாகப் பிரிந்து நின்ற மருதகுளம் சபை மீண்டும் அத்தியட்சாதீன ஐக்கியத்திற்குள் கொண்டு வரப்பட்டது பேராயரவர்களது பெரும் மகிழ்ச்சிக்குரிய தொன்றுகும்.

நாற்பதாண்டு காலமாக உடல் நலம் கருதாது இடையருது உழைத்ததனுல் பேராயரவர்கள் 1952 மே மாதம் இருதய நோயால் தாக்கப்பட்டார்கள் மூன்றுமாதம் விடுப்பில் செல்ல மருத்துவர் ஆலோசனை தந்தனர். அருள்திரு A. G. ஜெபராஜ் ஐயரவர்களை (பின்னுல் நெல்லை அத்தியக்ஷரவர்கள்) தமது ஆணையாளராக நியமித்து மதுரை மிஷன் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுர்கள். சுகம் பெற்றுத்திரும்பி வந்ததும் மீண்டும் இரண்டாம்முறை அறுவை சிகிற்சைக்கென ஓராண்டு விடுப்பில் செல்ல மருத்துவர்கள் கூறினர். பேராயரவர்கள் சிகிற்சை முடிந்ததும் அக்டோபர் மாதமே தம் வேலைக்குத் திரும்பினுர்கள். 1952ம் ஆண்டு டிசம்பர் மாதம் மருத்துவரின் ஆலோசனையின்படி பேராயர் பதவியை ராஜினமா செய்தார்கள். 1953ம் ஆண்டு ஏப்ரல்மாதம் அத்தியக்ஷாதீனத்தை விட்டுச்சென்னை சென்றுர்கள். ஜுன் மாதம் முதல் வெஸ்ட்டர்ன் கல்லூரி விளாகத்தில் தங்கிக் கல்லூரி மாணவர்கள் மத்தியில் ஆவிக்குரிய பணி செய்தார்கள். ஓய்வுநாள் தோறும் வழக்கத்தின் படியே ஆலயங்களில் தேவ செய்தி தந்தார்கள். 1957 மே மீ 12ம் நாள் ஆலயம் சென்று இரவு சாப்பாட்டிற்குப் பின் அதிகமான காய்ச்சலுடன் படுக்கைக்குச் சென்றுர்கள். மறுநாட் காலையில் காய்ச்சல் சற்றுத்தணிந்தது. 19ம் நாள் கல்யாணி ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார்கள். 26ம் நாள் பேராயரவர்களின் நினைவாற்றல் குன்றியது. ஆனுல் மே மாதம் 30ம் நாள் கிறிஸ்து பரத்துக்கேறின திருநாளன்று காலை சற்று தெளிவு உண்டானது.

தமது தங்கையுடன், லபுரூய் அம்மையாரையும் இனம் தெரிந்து கொண்டனர். ஆனால் மதிய உணவு உண்டபின் மாலை 2-45 மணிக்கு என்றும் கர்த்தாவுடன் கூடியிருக்கும்படி பரலோகத்திற் கேறினா. திருநாளன்று உன்னத சமாதானத்துடன் சென்று விட்டார்கள். இராயப்பேட்டைக்குப் பேராயரவர்களின் உடல் எடுத்துச் செல்லப்பட்டது.மறுநாட்காலை அவர்களுக்கும் பிரிய தமிழ் பாடல்களான ''எல்லாம் இயேசுவே'' ''தேவ பிதா என்தன் மேய்ப்பன் அல்லோ'' என்ற தமிழ்ப் பாடல்களைத் தமிழ்ப் பாடகர் பாட, தூய ஜார்ஜ் அத்தியட்சாலய கல்லறைத் தோட்டத்தில் சென்னை அத்தியட்ச ஆணையாளர் அருள் திரு S. J. சாமுவேல் ஐயரவர்களால் நல்லடக்கம் செய்யப்பட்டது.

பாளையங்கோட்டையில் 9–6–57ல் சார்சன்ட் அத்தியட்சர் ஆசிரியப்பயிற்சிப்பள்ளியில் ஞாபகார்த்த ஆராதனை நடைபெற்றது. அவ்வாராதனையில் நெல்லை மாவட்டத்திலிருந்து ஏராளமானோர் பங்கு பெற்றனர். பேராயரவர்களின் கடமையுணர்ச்சி, தன்னல மிலா சேவை, தியாகம், பிறர்நலம் கருதிய ஈகை முதலியவற்றைப் பெரியார் பலர் எடுத்துரைத்தனர்.

தன்னலங் கருதாது தன்னையே தியாகம் செய்த திருநெல்வேலி அனுபவித்த தவச்செல்வம் என்றும் மறையாது தரித்து எமது உள்ளத்தில் நிற்கின்றது. உம் வழியாம் செல்ல உன்னததேவன் அருள் தர வேண்டுவோம்.



# மகாகனம் A. G. ஜெபராஜ் அந்தியட்சர்

நெல்லை மறை மாவட்டத்தில் முதல் தமிழ்ப் பேராயராக யாவரும் ஆச்சரியப்படும் வகையில் திறம்பட 17 ஆண்டுகள் பணியாற்றியவர். மறைந்த அருட்பெருந்திரு அகஸ்டின் ஞான தாசன் ஜெபராஜ் பேராயரவர்கள். இவர்காலம் திருமண்டலத்தின் பிரச்சனைகள் நிறைந்த காலம். மழையின்மையும் பஞ்சமும் தாண்டவமாடின. சபைகள் ஸ்தாபனங்களின் பிரச்சனைகளும் ஏராளம். இவைகளின் மத்தியில் தமது பொறுமை, அமைதலான வார்த்தைகள், ஞானமுள்ள ஆலோசனைகள், தீவிர செயலாற்றும் தன்மை ஜெபவாழ்க்கை இவற்றின் மூலம் வெற்றிகண்ட ஒரு தீரர் இவர். கிடைத்தற்கரிய மாணிக்கம். இத்திருமண்டலத்திலேயே பிறந்து வளர்ந்து சேவை செய்து, தம்மை முழுவதுமாக இறைப் பணிக்கென்று அர்ப்பணித்துப் பேராயர் பணிக்கு உயர்த்தப் பட்டவர். அவரது வாழ்க்கையும் சேவையும் இன்றும் பசுமைபோல் நம் உள்ளத்தில் இருந்து வருகிறது.

நெல்லை பேராயத்தில் சோலைகளாய்த் திகழ்ந்து வரும் பல சிற்றூர்கள் உண்டு. அவற்றில் ஒன்று சேர்வைக்காரன்மடம். இக்கிராமத்தைச்சுற்றி நீர் வற்றாத ஒரு பெரியகுளமும், மலைகள் போன்று உயர்ந்து நிற்கும் செம்மண் தேரிகளும், வானளாவிய பல பனைமரங்களும், மா, முந்திரி போன்ற பல பழ மரங்கள் அடங்கிய தோப்புகளும் உண்டு. இக்கிராமத்தின் மத்தியில் உயர்ந்த கோபுர முள்ள ஓர் ஆலயமுண்டு. இவ்வாலயம் பேராயரவர்களின் முன்னோர்களால் கட்டப்பட்டது. தற்சமயம் இவ்வூர் குருஸ்தான மாக்கப்பட்டு, சேகர அந்தஸ்தைப் பெற்றுள்ளது.

பேராயரவர்களின் பாட்டனார் நாலுமாவடி நாடாரென்று அழைக்கப்பட்டார். கீழநாலுமாவடி என்ற கிராமமே அவரது பூர்விகக் குடியிருப்பு. சேர்வைக்காரன் மடத்தில் வந்து குடி யேறினார். பேராயரவர்களையும், சேர்வைக்காரன் மடத்துக் கிராம மக்கள் "நாலுமாவடி நாடார் பேரன்" என்றே அழைத்தனர். ஊரில் செல்வாக்கு நிறைந்த குடும்பம். பொருளாதாரத்திலும் அப்படியே.

பேராயரின் தந்தையே ராமசாமி என்பவர். சாயர்புரம் பள்ளியில் படித்து வருங்கால் தனது 9வது வயதில் கிறிஸ்தவராகி அகஸ்டீன் என்று பெயர் பெற்றார். ஆசிரியப் பயிற்சி பெற்று தமது சொந்த ஊருக்கு அருகாமையில் உள்ள தங்கம்மாள்புரம் சபையில்

பணியாற்றினர். சுமார் 6½ அடி உயரமுள்ள செம்பிரத்தோற்ற முடையவர் வட்டதார் போட்டு நீண்ட கோட்டுடன், தலைப் பாகையுடன் காட்சியளிப்பார். புன்முறுவலோடு அமைதியாகப் பேசுவார். பாடசாலை ஊழியம், சபை ஊழியம் தவிர வேறு விவகாரங்களில் தலையிடமாட்டார். தொடர்ந்து பல ஆண்டுகள் தங்கம்மாள் புரத்திலேயே பணியாற்றியதன் காரணமாய் தனது இருக்கையை அல்லூருக்கு மாற்றி அங்கேயே தனக்கென்று ஒரு வீட்டையும் கட்டினுர். இவருக்கு வாழ்க்கைத்துணைவியாய் அமைந் தவர் அன்னம்மாள் அம்மையார் ஆவார். உபதேசியார் அவர் களுக்கு ஐந்து ஆண் மக்களும் இரு பெண் மக்களும் பிறந்தார்கள். அவர்களில் மூத்தவரே நமது பேராயர் அகஸ்றின் ஞானதாசன் ஜெபராஜ் என்பவர். 28—3—1905ல் சேர்வைக்காரன் மடத்தில் பிறந்தார்.

ஜெபராஜ் என்னும் தமது பேருக்கு ஏற்ப ஜெபமாந்தனுக விளங்கினுர். இக்கால கிறிஸ்தவர்கள் அநேகருடைய பெயருக்கும் வாழ்க்கைக்கும் சம்பந்தமே இருக்காது. கோயில்பிள்ளை என்று பெயர் பெற்றிருப்பவர் ஒருநாளும் கோவிலுக்குப் போகமாட்டார். வேதமே வாசிக்காத ஒருவர் வேதமுத்து என்றும் பெயர் வைத் திருப்பார். ஆனுல் நமது பேராயரவர்கள் ஜெபராஜ் அவர்களோ பெயருக்கேற்ப ஜெபத்தில் இலக்கணம் வழுவாது வாழ்ந்து காட்டினுர், சிறுவனுய் இருக்கும் போதும் வாலிபனுக இருக்கும் போதும் சேர்வைக்காரன்மடம் செத்தேரிகளுக்குச் சென்று ஜெபிப் பார். நண்பர்கள் பலரையும் தம்மோடு கூட்டிச்சென்று ஜெபிக்கப் பழக்கினுர் அன்றுாது நண்பர்களில் பலர் அவர்களது ஜெப ஜீவியத்திற்குச் சாட்சிகளாய் இன்றும் விளங்குகின்றனர். ஏன்? நமது திருமண்டலமே இதற்குச் சாட்சி.

அவர்கள் நெல்லையில் படிக்கும்போது ஒருநாள் கல்லூரி விடுதியில் விளாகத்தினுள் இரு வாத்துக்கள் நுழைந்து விட்டன. அதுகண்ட மாணவர்கள் உற்சாக மேலீட்டால் அவற்றைப்பிடித்துச் சமைத்துச் சாப்பிட்டனர். இக்காரியம் ஜெபராஜுக்குத் தெரிய வந்தது. அச்செயலை வன்மையாகக் கண்டித்தார். தவறுசெய்த வர்களைக் கூட்டி வைத்து ஜெபித்தார். அவர்கள் தவற்றை உணர்ந்து கண் கலங்கினர். துக்க மேலீட்டால் அவர் அன்று ஆகாரம் கொள்ளவில்லை. இச்செயல் மாணவர்களை உருக்கிற்று. அவர்களில் பலர் மனமாற்றம் அடைந்திருப்பர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ! பேராயராவற்கு முன் ஓராண்டுகாலம் திருமண்டல நற்செய்தி பணிக்குழுவின் தலைவராய் இருந்தார். அவரது தலைமையின் கீழ் 5 சுவிசேஷகர்கள் பணியாற்றினர். ஊழியர்

களோடேயே தங்கியிருப்பார். மிகுதியான நேரத்தை அவர் களோடே ஜெபத்திலேயே செலவிடுவார். பேராயரான பின் அவர்களைப் பேட்டி காணவரும் குருமார், ஊழியர்கள், சபையார் யாவரையும் அமரச்செய்து பிரச்சினைகளைக் கேட்டுத் தீர்த்தபின் தமது இல்லத்திலுள்ள சிற்றாலயத்தில் அழைத்துச் சென்று பிரச்சினை சுமுகமாய் தீர்த்தக்கதாக ஊக்கமாக ஜெபிப்பார். தம்முடன் இருப் போரையும் ஒவ்வொருவராய் ஜெபிக்கச் செய்வார். பல காரியங்களை வெற்றியாகச் செய்து முடிப்பதற்கு இதுவே துணையாக அமைந்தது. வாழ்க ஜெபவீரன் ஜெபராஜின் நாமம்!

திடப்படுத்தல் ஆராதனை நடத்துமுன் திடப்படுத்தல் பெறுவோரைத் தனித்தனியாய்க்கண்டு பேசி அவர்களை ஜெபிக்கச் செய்தார். பலருக்கு அன்று ஜெபஜீவியத்தின் துவக்கநாளாக அமையும். தொடர்ந்து ஜெபிக்கும் அனுபவத்தையும் பெற்றுக் கொண்டார்கள். பேராயரவர்கள் பிரயாணம் பண்ணும் போதும் ஜெபித்துக் கொண்டேயிருப்பார்கள். நம்மில் பலரைப்போல, பேசி வீணாகக் காலத்தை விரையம் செய்யமாட்டார்கள்.

இதோ ஒரு சான்று:— கூடன்குளம் என்பது நமது திருமண் டலத்தின் தென்கோடியில் ஐம்பது மைல் தொலைவில் கடற்கரை அருகாமையில் அமைந்துள்ள ஓர் பேரூர். பேராயர் ஜெபராஜ் அவர்கள் அங்கு திடப்படுத்தல் ஆராதனை நடத்தினார்கள். அவர்கள் பாளையங்கோட்டைக்குத் திரும்பும்போது அவர்களோடு காரில் பிரயாணம் செய்யும் சிலாக்கியம் எனக்குக் கிடைத்தது. கையில் ஏதோ ஒரு டாப்பை வைத்துக் கொண்டு சிறிது வாசித்தும் பின்பு சிறிது கண்களை மூடுவதுமாயிருந்தார்கள். அவர்களோடு பேச எனக்குத் துணிவு ஏற்படவில்லை. என்னோடு அவர்களாகப் பேசு வார்கள் என்று எதிர்பார்த்தேன். ஏமாற்றம் அடைந்தேன். அவர் கள் கரத்தில் இருந்தது வேறு ஒன்றும் இல்லை. ஒரு சபையின் அங்கத்தினர்கள் அடங்கிய சபை டாப்பே. என்ன ஆச்சரியம்! திருமண்டலத்திலுள்ள ஒவ்வொரு கிறிஸ்தவனையும் பெயர் சொல்லி ஜெபித்தார் என்றால் திருச்சபை பெற்ற சிலாக்கியம் தான் என்ன! வாழ்த்துவோம் ஜெபவீரன் ஜெபராஜின் நாமத்தை. பின்பற்றுவோம் அவர் மாதிரியை.

சேர்வைக்காரன் மடத்தில் ஆரம்பக்கல்வி கற்று அதன்பின் சாயர்புரம் பாடசாலையில் ஐந்து ஆண்டுகளும் தூத்துக்குடி கால்டுவெல் பள்ளியில் நான்கு ஆண்டுகளும் கல்வி கற்றார்கள். ஜெபராஜை பேராயராக்கின பெருமை இப்பள்ளிக்கு உண்டு. இப்பள்ளியின் நீதிவாக்கியம் "Pray and work". [ORA ET

LABORAJ இங்குள்ள பள்ளிச் சிற்ருலயம் இவரை மேலும் ஜெப வாழ்க்கையில் உறுதியடையச் செய்தது. இச்சிற்ருலய ஜெபபழக் கத்தினுல் பலர் இன்று குருக்களாயிருக்கின்றனர். இருவர் பேராய ரகி இருக்கின்றனர். பேராயரவர்கள் தமது இன்டர்மீடியட் வகுப்புகளை திருநெல்வேலி C. M. S. கல்லூரியிலும், B. A. வகுப்புக்களை திருச்சி S. P. G. கல்லூரியிலும் கற்ருர்கள். தமது கல்லூரி வாழ்க்கையிலும் பல நண்பர்களை ஒன்ருகத் திரட்டி ஜெபக் குழுக்கள் ஏற்படுத்தி ஜெபித்து வந்தார்கள். அநேகரை ஆண்டவர் அண்டை வழி நடத்தினுர்கள். பின்பு கல்கத்தா சென்று வேத சாஸ்திரம் பயின்று B. D. பட்டம் பெற்ருர்கள்.

1934 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பத்தாம் தேதி ஜெபக்கனி அம்மாளைத் தனது வாழ்க்கைத் துணைவியாகக் கொண் டார்கள். நாசரேத் பரிசுத்த யோவான் ஆலயத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. அம்மாள் அவர்கள் குலையன்கரிசலைச் சேர்ந்தவர்கள். 1914ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 7ம் தேதி பிறந் தார்கள். தங்கமணுவேல் என்பவர்கள் அவர்களது நேசத்தந்தை சென்னை மாநிலத் தபால் தந்தி இலாகாவில் உயர்ந்த பதவி வகித்தவர். ஜெபக்கனி அம்மாள் இவர்களின் ஏக புதல்வி. ஜெபத்தினுல் பெற்றெடுத்தமையால் அவர்களுக்கு ஜெபக்கனி என்று பெயரிட்டு ஓர் ஊழியக்காரனுக்கு மணமுடித்து வைக்க வேண்டுமென்று எண்ணினர். ஜெபராஜ் ஜெபக்கனி என்ற ஜோடி பொருத்தமாக அமைந்தது. பெயரில் மாத்திரம் அன்று செயலிலும் அப்படியே, திருமணத்தில் ரொக்கம் வாங்கக் கூடாதென்ற குறிக்கோளையுடையவர் ஜெபராஜ். எனவே தனது திருமணத் திற்கு ரொக்கம் கேட்கக் கூடாதென்று மிகக்கண்டிப்பாகத் தமது தந்தைக்குக் கட்டளையிட்டிருந்தார், அதை நிறைவேற்றவும் செய்தார். இன்றைய வாலிபருக்கு அவரது இச்செயல் ஒரு சவாலாக அமைந்திருக்கிறது. திருச்சபைக்குள்ளும் இச்சீர்கேடு வளர்ந்து கொண்டே போகிறது. இவ்விஷயத்தில் வாலிபர்கள் துணிவு கொள்ள வேண்டும். தமது பிள்ளைகளுடைய விவாகத் திலும் ஜெபராஜ் (இச்சமயம் பேராயர்) ரொக்கம் பேசவுமில்லை. பெற்றுக் கொள்ளவுமில்லை.

ஜெபக்கனி ஜெபராஜ் அம்மையார் பேராயர் மனைவிக்கேற்ற சகல நற்பண்புகளையும் உடையவர்களாகத் திகழ்ந்தார்கள். இன்முகம் காட்டி இல்லத்திற்குள் வரும் யாவரையும் உபசரிப் பார்கள். ஹாஸ்யமாகப் பேசுவார்கள். குருமார் மனைவியரை அவர் தம் சகோதரிகளைப் போல் பாவித்து அவர்களோடு அளவளாவு

வார்கள். ஏழைகளுக்கு இன்கரம் நீட்டி உதவி செய்வார்கள் குடும்பப்பொறுப்பு முழுவதையும் தாமே எடுத்துநடத்துவார்.

பேராயரவர்களின் நிர்வாகத்தில் தலையிடமாட்டார்கள். பிள்ளைகளைச் சகல கிறிஸ்தவ நற்பண்புகளில் வளர்த்ததின் பலனாக அவர்கள் யாவரும் பல்வேறு துறைகளில் உத்தியோகம் வகித்தாலும் ஆர்வமுடன் சுவிசேஷப்பணி செய்து வருகிறார்கள். அம்மையார் அவர்கள் ஆஸ்திகள் உடையவராயினும் பெருமை கொள்ளமாட்டார்கள். சாதாரண உடை அணிவார்கள். பேராயர் மனைவிக்கேற்ற சகல நற்பண்புகளும் அமைந்திருந்தன. தமது ஓட்டத்தை முடிக்கும் நேரம் வந்தது. வியாதிப் பட்டார்கள். வேலூர் கிறிஸ்தவ ஆஸ்பத்திரியில் அறுவை சிகிச்சை நடந்தது. பெலவீனத்தின் காரணமாக 1970 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 7 ஆம் தேதி மறுமைக்குள் பிரவேசித்தார்கள். பேராயர் தமது ஆருயிர் வாழ்க்கைத் துணைவியை இழந்தார். திருமண்டலம் தனது நேசத்தாயை இழந்தது. பேராயர் இல்லம் வெறிச்சோடிற்று. மக்கள் சோகத்தில் ஆழ்ந்தார்கள். பாளையங்கோட்டை நூற்றாண்டு மண்டபத்தில் அவர்களின் ஞாபகார்த்த ஆராதனை நடைபெற்றது. திருமண்டல மக்கள் திரளாகப் பங்குகொண்டு கண்ணீரோடு தங்கள் நேசத்தாய்க்கு அஞ்சலி செலுத்தினர். அம்மையார் அவர்கள் விருப்பத்தோடு பாடும் கவியொன்றைக் கீழே தருகிறோம்.

"Iam there"

"Do you need me? Iam there ... ...
Even if you deny me Iam there."

தமது வேத சாஸ்திரப்படிப்பை முடித்த ஜெபராஜ் அவர்கள் 4—3—1934ல் நாகலாபுரம் உயிர்த்தெழுதலின் ஆலயத்தில் குரு அபிஷேகம் பெற்று ஆற்றங்கரை பாஸ்றரேட் குருவாக நியமிக்கப் பட்டார்கள். போக்குவரவு வசதியற்ற ஊர். பட்டதாரிகள் அரிதாய் இருக்கும் அக்காலத்தில் அவர் ஒரு பட்டதாரி குரு. வசதியுள்ள பட்டண சபையே தமக்கு வேண்டுமென்று கேட்க வில்லை. குக்கிராமமாயினும் ஆண்டவன் காட்டும் இடம் எதுவோ அதுவே தமக்குகந்தது என்ற தன்னலமற்ற சேவை மனப்பான்மை யோடு சென்றார். பல இன்னல்களை அனுபவித்தார். மொட்டை வண்டியில் ஏறிக் குடும்பமாகப் பிரயாணம் செய்தார்கள். அவ் விடத்தில் மூன்று ஆண்டுகள் சிறப்பான பணி நடைபெற்றது.

1941 ஆம் ஆண்டு கீழக்கரைக்குச் சர்க்கிள் சேர்மனாக மாற்றப்பட்டு நான்கு ஆண்டுகள் பணியாற்றினார்கள். அக்காலத் தில் மதுரை இராமநாதபுரம் திருமண்டலம் ஏற்படவில்லை.

திருநெல்வேலி திருமண்டலத்திற்குள்ளேயே இருந்தது. தூர இடமாயினும் அதுவே தெய்வசித்தம் என்று அறிந்து பணியை ஏற்றுக் கொண்டார். திருமண்டல நற்செய்தி பரப்புக்குழு இவர்கள் தலைமையின் கீழ் அப்பாகத்தில் பணி புரிந்தது. இப்பணியைச் சீரும் சிறப்புமாகச் செய்து நிறைவேற்றினார்கள்.

இவர்களது பக்தியையும் நிர்வாகத் திறமையும் நன்கறிந்த பேராயர் செல்வின் அவர்கள் கனம் ஜெபராஜ் ஐயரவர்களைத் தமது சேப்ளனாக நியமித்தார்கள். ஓராண்டு காலம் மாத்திரமே இப்பணியில் இருந்தார்கள் சமூக சேவையில் ஆர்வம் கொண்ட இவ்வூழியருக்குப் பம்பாயில் சமூக சேவைக் கல்லூரியில் ஈராண்டு பயில ஓர் வாய்ப்பு கிடைத்தது. இவ்வாய்ப்பினைப் பயன்படுத்தி 1947 - 49 வரை பம்பாயில் சமூக சேவை பயிற்சி பெற்றார். (TATA Institute of Social Science) இப்பயிற்சி அவர்கள் ஊழியத்திற்குப் பேருதவியாக இருந்தது. பின் ஓராண்டு காலம் அமெரிக்கா சிக்காகோ பல்கலைக் கழகத்தில் வேதசாஸ்திரம் பயின்றனர். தமது வெளிநாட்டுப் படிப்பை முடித்தபின் 1951 ஆம் ஆண்டு ஜூன் மாதம் பாளையங்கோட்டை சர்க்கிள் சேர்மனாக நியமிக்கப்பட்டார்கள். பள்ளிகளின் நிர்வாகியாக அடிக்கடி பள்ளிகளைப் பார்வையிட்டார்கள். வெகு திறமையாகச் சர்க்கிள் கமிட்டிகளை நடத்தினார்கள். வரவு செலவு கணக்குகளையும் மதிப்பீடுப் பட்டியல்களையும் கரும்பலகைகளில் எழுதி அங்கத்தினர்களுக்கு விளக்கிக் காட்டுவார்கள்.

"ஐந்து அம்சத் திட்டம்" என்று அழைக்கப்படக் கூடிய திட்டம் ஒன்றை வகுத்துச் செயல் படுத்தினார்.

1) ஒவ்வொரு கிறிஸ்தவர் கையிலும் ஒரு வேதாகமம்.
2) ஒவ்வொரு குடும்பத்திலும் குடும்ப ஜெபம்.
3) ஒவ்வொரு சேகரத்திலும் ஒரு கன்வென்ஷன்.
4) ஒவ்வொரு சர்க்கிளுக்கும் ஒரு மிஷினெரி ஸ்தாபனம்.
5) ஒவ்வொரு சபையிலும் திருவசன ஊழியம்.

பேராயர் ஜெபராஜின் வாழ்க்கையும் ஊழியமும் அவரது திறமையை அன்று, ஆண்டவர் அவரைப் பயன்படுத்திய விதத்தையே விளக்கும். நமது அன்றாட அலுவல்களுக்குத் தேவையான ஞானத்தையும் வலிமையும் தேவனோடு நெருங்கிச் சஞ்சரித்து அவரிடமிருந்து பெற்றுக்கொண்டார். ''ஜெபராஜ் அத்தியட்சரின் காலம்'' என்று குறிப்பிடக் கூடிய அவ்வருடங்களில் நெல்லைப் பேராயம் பல துறைகளில் முன்னேற்றம் கண்டது. உயர்நிலைப்

பள்ளிகளின் எண்ணிக்கை இருமடங்காகியது. போப் கல்லூரி, மர்காஷியஸ் கல்லூரி என்ற இருகல்லூரிகள் அவரது அக்கறையால் நிறுவப்பட்டன. பரி. யோவான் கல்லூரியும், சாராள் தக்கர் கல்லூரியும் M. A., பட்டப் படிப்பைக் கொடுக்கும் நிலையை எய்தின. அவரால் திடப்படுத்தல் பெற்றவர்கள் 36, 247 பேர். 137 புதிய ஆலயங்களை அவர் பிரதிஷ்டை செய்தார். 76 குருமார் அவரிடம் அபிஷேகம் பெற்றனர்.

அவர் பணிபுரிந்த குருசேகரங்களில் எல்லாம், சபைகளைக் கண்காணிக்க பல மைல்கள் நடந்தோ அல்லது சைக்கிளில் சென்றோ வருவார். பாளையங்கோட்டையில் மாடரேற்றர் கமிசரியாக அல்லது பிஷப் கமிசரியாகப் பணியாற்றும் நேரம் 2 மணி வெயிலில் அந்தியட்சாலய குருமனையில் இருந்து பிஷப் பங்களாவுக்குத் தினமும் சைக்கிளில் செல்லுவது சாதாரண ஒரு காட்சியாகும்.

கிறிஸ்து குல ஆச்சிரமத் தலைவர் பெரியண்ணன் சவரி ராயன் ஏசுதாசன் ஒரு முறை பிஷப் வீட்டின் மேல் மாடி அறையில் தங்கி இருந்தார். அவருடைய செருப்பின் ஒருவார் அறுந்திருந்தது அச்சமயம் அங்கு வந்த பேராயரிடம் "செருப்பு தைக்கிறவன் இங்கு வருவானோ? என்று வினவினர். பேராயர் மறுமொழியாக "அவன் இங்கு வரமாட்டான்" என்று கூறிவிட்டு அச்செருப்பை பக்கத்து அறைக்கு எடுத்துச் சென்று தாமே செப்பனிட்டுக் கொடுத்தார். இங்கிலாந்திலிருந்து கப்பலில் இந்தியா திரும்பும் போது பயணநாட்களில் கப்பலில் அவர் கற்றுக்கொண்டது தோலில் பைகள் முதலியன செய்யும் முறைதான்! இச்சம்பவத்தை பெரியண்ணன் தம் ஆசிரம மாணவருக்கு ஓர் எடுத்துக்காட்டாகக் கூறுவதுண்டு.

பேராயராகப் பணியாற்றிய சமயம் துணை மாடரேற்றராகவும் சிலகாலம் பணியாற்றினர். லண்டன் மாநகரில் நடந்த லாம்பெற் மகாநாட்டிற்கு ஒரு முறையும் (ஏப்ரல் 1964), பண்டிதர் பில்லி கிரஹாம் ஜெர்மனியில் நடத்திய சுவிசேஷ மாநாட்டிற்கு ஒரு முறையும் சென்று வந்தார். ரோம் நகரில் திருத்தந்தை போப் ஆண்டகையைத் தனியே சந்தித்து உரையாடினர். அந்த ஆண்டு கிறிஸ்துமஸ் திருநாளைப் பெத்லேகேமில் கொண்டாடினர்.

கடிதங்களுக்கு உடனுக்குடன் பதில் எழுதுவதில் தவறுவதில்லை. சிலசமயம் இரவில் 3 மணி நேரம் தான் அவர் தூங்குவதற்குக் கிடைக்கும். இரவு 12 மணி வரையும் பின் காலை 3 மணி முதலும் கையாலேயே கடிதங்களுக்குப் பதில் எழுதிய நாட்கள் பல.

1970 செப்டம்பரில் ஓய்வு பெற்றபின் தம் பிள்ளைகளான மங்களகரன், கிருபாகரன், சுகந்தி இவர்களுடன் நேரத்தைச் செல விட்டார். சென்னையில் இருக்கும் போது அங்குள்ள ஆலய ஆராதனைகளில் பங்கேற்றார். பின் வேலூரில் சிலகாலம் இருந் தார். அச்சமயம் 1972ம் ஆண்டு மார்ச் மாதம் 8ம் நாள் ஆண்ட வரால் அழைத்துக் கொள்ளப்பட்டார். 10–3–1972 இல் சென்னை "San Thome"-இல் நல்லடக்கம் செய்யப்பட்டார்.

பேராயர் ஜெபராஜ் அவர்களுடைய வாழ்க்கை, ஊழிய மேம்பாட்டு இரகசியம், அவர்கள் பேராயராக அபிஷேகம் பெறறுப் பேராயர் ஆசனத்தில் அமர்த்தப்பட்ட போது அவர்கள் ஆற்றிய அருளுரையில் அடங்கியுள்ளது எனலாம்.

"ஊழியம் உன்னதமானது
ஊழியனே உதவாதவன்
உபயோகிப்பவர் கிறிஸ்து
உங்கள் ஜெபம் தேவை."

திருநெல்வேலி அத்தியட்சாதீனத்திற்கு "ஆண்கள் ஐக்கிய சங்கம்" ஏற்படுத்தப்பட வேண்டுமென ஆசித்தார். இதனை 1953 இல் அவர்களிடமிருந்து கேட்டவர்கள் இந்நாள் பேராயர் கனம் தானியேல் ஆபிரகாம் அவர்கள். பேராயர் ஜெபராஜ் இவ்வாறு கூறினார். "கடவுள் நமக்கு இரண்டு சிறகுகளைத் தந்துள்ளார். பெண்கள் ஐக்கிய சங்கம் ஒரு சிறகு, ஆண்கள் ஐக்கிய சங்கம் இரண்டாவது சிறகு. திருநெல்வேலி திருச்சபையாகிய பறவை எழுந்து பறக்க வேண்டுமானால், இரு சிறகுகளும் ஒன்று போல் இயங்க வேண்டும். ஆனால் ஆண்கள் ஐக்கிய சங்கம் செயல்பட வில்லையே. திருநெல்வேலி திருச்சபை எப்படி மேல் நோக்கிப் பறக்க முடியும்? தேவ கிருபையினால் திருநெல்வேலித் திருச்சபை யின் இருநூற்றாண்டு ஆசரிக்கப்படும் ஆண்டில் (1980) இத் தரிசனம் நிறைவு பெற்றுள்ளது. கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

பேராயர் ஜெபராஜ் அவர்களின் வாழ்க்கைக்காகத் திருநெல் வேலி திருச்சபை கர்த்தருக்குத் துதி செலுத்திக் கர்த்தரில் மகிழ்ந் திருக்க வேண்டும்.

———

# பேராயர் தாமஸ் காரட் அவர்களின் வாழ்க்கை வரலாறு

இங்கிலாந்து தேசத்தில் பரம்பரையாக குருத்துவ பணிபுரியும் குடும்பத்தில் தோன்றிய ஸ்டீபன்காரட் ஐயரவர்கள் வட இந்தியா விலுள்ள கோராக்பூர் என்ற இடத்தில் ஊழியம் செய்தார்கள். அன்னாரின் மகனாக தாமஸ்காரட் 1915ம் வருடம் செப்டம்பர் திங்கள் 29ம் நாள் பிறந்தார். முதல் உலக யுத்தத்தின் போது தந்தையுடன் இங்கிலாந்து சென்றார். இங்கிலாந்தின் தென்பகுதியிலுள்ள மார்ல்பெரோ கல்லூரியில் பயின்று பின்னர் கேம்பிரிட்ஜிலுள்ள கிறிஸ்து கல்லூரியில் இலக்கியத்திலும், இறையியலிலும் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார். கேம்பிரிட்ஜிலுள்ள ரிட்லிஹால் இறையியல் கல்லூரியில் குருத்துவப் பயிற்சி பெற்று, இலண்டனிலுள்ள ஸ்டோக் நியூரிங்டன், புனித மரியாள் ஆலயத்தில் இரு வருடங்கள் குருத்துவப் பணி புரிந்தார். 1940ம் ஆண்டு மார்ச் திங்கள் திருநெல்வேலி பேராயத்திற்குத் திருச்சபை மிஷனெரி சங்க (C. M. S.) நற்செய்தித் தொண்டராக அனுப்பப்பட்டார்.

பாளையங்கோட்டை தூய யோவான் கல்லூரியில் ஆங்கில விரிவுரையாளராகப் பணியாற்றினார். அச்சமயம் சாராள் டக்கர் கல்லூரியில் வில்லியன் ஹேரால் ஸ்வொர்த் என்ற அம்மையார் விரிவுரையாளராகப் பணி செய்தார். அவ்விருவர்க்கும் புனித யோவான் கல்லூரி சிற்றாலயத்தில் 1941ம் ஆண்டில் திருமணம் சிறப்புடன் நடந்தது. ஒரு வருடம் கழித்து தாமஸ்காரட் அவர்கள் பட்டாளத்தில் சேப்ளனாகத் தொண்டு செய்து, மத்திய மாகாணத்தில் பயிற்சி பெற்று, இங்கிலாந்து ராணியின் 14வது ராணுவ பிரிவில் பணியாற்ற பர்மா தேசம் சென்றார். பர்மா செல்வதற்கு ஒரு மாதத்திற்கு முன் 1943ல் ஸ்ரீநகரில் அவர்களுக்கு எலிசபெத் என்ற பெண் மகவு பிறந்தது. ஜப்பானியரின் யுத்தம் முடிந்த பின்பு 1945ம் ஆண்டு அக்டோபர் திங்களில், இங்கிலாந்து சென்று, சிலமாதகாலம் ஓய்வு பெற்று தமிழ்நாடு இறையியல் கல்லூரியில் பணிபுரிவதற்கு மனைவி மகளுடன் நாசரேத் ஊர் வந்தார்.

கிறிஸ்தவ சித்தாந்தங்களையும், புதிய ஏற்பாடு விளக்கங்களையும், அக்கல்லூரி மாணவர்களுக்குக் கற்றுக் கொடுத்தார். மேலும் மேற்கத்திய சங்கீதத்தின் இயக்குனராகவும், கல்லூரியின் உபதலைவராகவும் பணிபுரிந்தார். இக்கல்லூரியை தமிழ்நாடு இறையியல் கல்லூரியாக மாற்றுவதற்குப் பெருமுயற்சிகளை மேற்கொண்டார்.



அருட்பெருந்திரு தாமஸ் காரட்
1971—1974

பள்ளி இறுதித் தேர்வு (S. S. L. C.) முடித்தவர்கள் நேரிடையாக இளங்கலைதேர்வியல் (B. D.) கற்பதை இவர் விரும்பவில்லை. எனவே 1952ம் வருடம் அக்கல்லூரி ஆரம்பக்கலை இறையியல் (L. Th) கற்பதற்கான கல்விக் கூடமாக மாற்றப்பட்டது. தற்சமயம் அரசரடியில் இயங்கும் 'தமிழ்நாடு இறையியல் கல்லூரி' திருமறையூரிலிருந்து மாற்றப்படுவதற்கு இவர் தூண்டுகோலாக விளங்கினர்.

அகில உலக திருச்சபையின் ஒருமைப்பாட்டை (ecunurism) இவர் வெகுவாக விரும்பினர். தென்னிந்திய திருச்சபை உருவாகுவதில் இவர் மிக்க ஆர்வத்துடன் உழைத்தார். அகில உலக திருச்சபையின் ஒருமைப் பாட்டிற்கான முகாம்களில் பங்கேற்று, பல வெளியீடுகளின் மூலம் தமது கருத்தை எழுதினர். நைஜீரியாவிலுள்ள சபைகள் ஐக்கியத்திற்காய் தொண்டு புரிய அழைக்கப்பட்டார். 1964ம் ஆண்டு ஜனவரி மாதம் ஐக்கிய அரசு (U. K) நாட்டில் காரியதரிசி வேலை, மகன் எலிசபெத்திற்கு கிடைத்ததால், தன் குடும்பத்துடன் அங்கு சென்றார். நைஜீரியாவில் திருச்சபை ஒருமைப் பாட்டிற்கு அதிக முயற்சி செய்தும் ஒருமைப்பாடு சாத்தியமாகவில்லை. நைஜீரியாவின் கிழக்குப் பகுதியிலுள்ள பல்கலை கழகத்தில் தன் மனைவியுடன் தங்கியிருந்து பணிபுரிந்தார். அங்கு நடந்த உள்நாட்டுப் போரில் எதிரிகள் பல்கலைக் கழகத்தைக் கைப்பற்ற அவர்கள் அகதிகளாக ஆகாரக் குறைவினாலும், சுகவீனத்தினாலும் அவதிப்பட்டனர்.

ஓர் ஆண்டு யுத்தத்திற்குப் பின் 1968ம் ஆண்டில் இங்கிலாந்திற்கு குடும்பத்துடன் சென்று சில மாதங்கள் கழித்தார். தென்னிந்திய திருச்சபையும், லூத்திரன் சபையும் ஒருங்கிணைந்து மதுரை அரசரடியில் 'தமிழ்நாடு இறையியல் கல்லூரி' அமைக்கப்பட்டது அக்கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிய அழைப்பு பெற்று 1969ம் ஆண்டு ஜூன் மாதம் வந்து சேர்ந்தார். ஆலய வழிபாடுகளில் மிகவும் அக்கரை காட்டினர், குறிப்பாக தென் இந்திய திருச்சபை ஆராதனை முறைமைகளை இயற்றுவதில் முக்கியப்பங்கு வகித்தார். இவருடைய ஆர்வத்தின் வெளிவடிவமாகத் தோன்றியவை தென்னிந்திய திருச்சபை வழிபாடு கிறிஸ்தவ வழிபாடு என்னும் நூல்களாகும்.

1971ம் வருடம் நெல்லைத் திருமண்டலப் பேராயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு மூன்றரை வருட காலமாக, நெல்லைத் திருமண்டலத்தில் பேராயராகப் பணிபுரிந்தார். இவர் இந்திய மிஷனெரி சங்கப் பரிபாலனராகவும், ஆயுள் கால அங்கத்தினராகவும் இருந்தார்.

திருமண்டல விழாக்களில் கலந்து கொள்வது இவருக்கு மிக்க மகிழ்ச்சி. அதிகநேரம் பங்கு பெறுவதையோ, தன்னைப் பாராட்டு வதையோ அவர் விரும்புவது கிடையாது. சமுதாயச் சீர்திருத்தத் திலும், தனிப்பட்டவர்களுடைய வாழ்க்கையிலும் பல நன்மைகளைச் செய்தார். பேய்க்குளம் புனித லூக்கா தொழுநோய் மருத்துவ மனைக்குக் கிடைக்க வேண்டிய உதவித்தொகை தொடர்ந்து கிடைப் பதற்கு அரும்பாடுபட்டார்.

1974ம் வருடம் செப்டம்பர் மாதம் தன் குடும்பச் சூழ்நிலை காரணமாக, பேராயர் பதவியை ராஜினமா செய்து, தன் கடைசி நாட்களை இங்கிலாந்து தேசத்தில் ஹலற்றன் நகரில் பேராயர் உதவி யாளராகப் பணிபுரிந்து கழித்தார். இங்கிலாந்தில் பணிபுரிந்தாலும் நெல்லைத் திருமண்டல முன்னேற்றத்திற்கு உதவ முனைந்து நின்றார். திருமறையூரில் வயோதிபருக்கான கருணை இல்லம் தொடங்க ரூ. 5000/- நன்கொடை பெற்று வழங்கினர். மற்றும் அநேக உதவிகள் பலருக்குத் தமது மரண பரியந்தமும் புரிந்துள்ளார். எதிர்பாராத விதமாக ஓர் அறுவை சிகிச்சைக்கு உள்ளாகி, 1980ம் வருடம் ஏப்பிரல் மாதம் 10ம் நாள் உயிர்த்தெழுதலின் மகிமைக்குள் பிரவேசித்தார். 17ம் நாளில் நடைபெற்ற அடக்க ஆராதனையில் தென்னிந்திய திருச்சபையின் முன்னள் பேராயர் மூவர் பங்கேற் றனர். லெஸ்ற்றர் பேராயர் அவ்வாராதனையில் செய்தி கொடுத் தார். பேராயர் காரட்டின் நற்பணி நம் திருமண்டலத்திலும், திருச்சபை வரலாற்றிலும், அணையாத சுடராக ஒளி வீசுகிறது.





அருட்பெருந்திரு S. தானியேல் ஆபிரகாம்
1975—

# சாமுவேல்தானியேல் ஆபிரகாம் பேராயர்

நமது பேராயர் மாசுகனம் சாமுவேல் தானியேல் ஆபிரகாம் அத்தியட்சர் கலுங்குவிளை திரு சாலோமோன் சாமுவேல் அவர்களின் புதல்வராவர். இவரது தாயார் மெஞ்ஞானபுரத்தைச் சேர்ந்தவர். இருவரும் மெஞ்ஞானபுரத்தில் சபை ஊழியராகப் பணியாற்றியவர்கள். இவர்களது பணிக் காலத்தில் குப்பாபுரம் என்ற குக்கிராமத்தில் 1919 ம் ஆண்டு டிசம்பர் திங்கள் 12 ம் நாளில் நம் அத்தியட்சர் பிறந்தார்.

இவரது ஆரம்பக்கல்வி அன்பிநகரத்தில் தமது பெற்றோரிடமே பெற்றார். ஆரம்பக்கல்வி முடித்து மெஞ்ஞானபுரம் C. M. S. உயர்தரப் பாடசாலையில் (Higher School) S. S. L. C. வகுப்பை திறம்பட முடித்தார். கணிதத்தில் திறமை மிக்கவர் பள்ளி வாழ்க்கையில் அமைதி, அடக்கம், தெய்வ பக்தி உடையவராய்த் திகழ்ந்தார் யாவரிடமும் அன்பு கொண்டவர்.

பத்தாம் வகுப்புத் தேறி ஆசிரியப்பயிற்சி இல்லாது சிறிது காலம் ஆசிரியராகப் பணியாற்றிப்பின் பாளையங்கோட்டை சார்ஜெண்ட் அத்தியட்சர் போதனா முறைப்பள்ளியில் பயின்று வெற்றி பெற்றுச் சில இடங்களில் ஆசிரியப்பணி செய்து பின் முதலூர் உயர்தர ஆரம்பப்பாடசாலையில் பணி செய்தார். அன்று கைப்பந்தாட்ட வீரராகிப் பல பரிசுகள் பெற்றுள்ளார். தம்முடன் பணிசெய்து வந்த எலோபாய் அம்மையாரைத் தனக்கு வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொண்டார். அம்மையார் என்றும் மலர்ந்த முகமும் புன்சிரிப்புமுடையவராய்த் திகழ்ந்து, தம்மிடம் வந்தவர்க்கு இல்லை என்னாது உபசரிக்கும் ஓர் உத்தமி. இவர்களின் நற்பண்பு நம் அத்தியட்சரின் புகழுக்குத் துணையாய் நிற்கின்றது. இது வீண் புகழ்ச்சியன்று. அறுதியிட்டுக் கூறும் உண்மை. இவர் முதலூர் சர்க்கிளால் குருப்பட்டத்திற்கு சிபார்சு செய்யப்பட்டுச் சாத்தான்குளத்தில் நடைபெற்ற கவுன்சில் குருப்பட்ட மாணவர் தேர்தல் குழுவுக்கு அனுப்பப்பட்டார். அன்று இவருடன் வந்தவர்கள் திரு D. V. J. கிருபைமணி, திரு பீற்றர் துரைராஜ், திரு V. ஹென்றி, பாக்கியநாதன், திரு B. மாணிக்கராஜ் ஆவர். தேர்தல் குழுவினர் கீர்த்தனையில் இருந்து ஒரு பாட்டை வாசியாமல் பாடவேண்டுமென்றனர். தனித்தனியே பாடினர். ஐவரும் தெரிந்தெடுக்குப்பட்டு மேல் கமிட்டிக்குச் சிபார்சு செய்யப்பட்டனர். அத்தியட்சாதீன குருப்பட்ட மாணவர் தேர்தல் குழுவும் ஐவரின் திறமை கண்டு ஐவரையும் தேர்ந்தெடுத்தனர்.

திட்டப்படி குருப்பட்ட மாணவர் அத்தியட்சாதீன சுவிசேஷப் படையில் 1946ம் ஆண்டு ஜூன் மாதம் சேர்ந்தார். அன்று அதன் தலைவர் கனம் துரைசாமி ஐயர் சுவிசேஷ ஊழியத்திற்கென்று அத்தியட்சாதீனம் செலவிடும் பணத்தை வெகு சிக்கனவழியில் செலவிடுபவர் ஊழிய காலத்தில் ஊழியர் தங்கும் இடங்கள், பாழடைந்த வீடுகள், பள்ளிக்கூடங்கள் கோவில்கள் மட்டுமே வாடகை கொடுத்துத் தங்கினதாக இல்லை. ஆரம்பத்தில் நெல்லை புட்டகாரத்தி அம்மன் கோவில் தெருவில் ஒரு பாழடைந்த வீடு. தரையோ புழுதி மண். தண்ணீர் தெளித்து அதன் மேல் விரிப்பு விரித்து உட்காரவோ, படுத்துக்கொள்ளவோ வேண்டும். மனித குடியேற்றமில்லாத இடமாயினும் பட்டணத்துச் சுண்டெலிகள் அத்தனைக்கும் ஒரு குடிலாக இருந்தது. அன்றொரு நாள் சமையற்காரர் காலை சாப்பாட்டிற்கு ஆப்பம் வாங்கி ஒரு ஓலைப்பெட்டியில் வைத்து மூடி இருந்தார். மாணவர்கள் வெளியே சென்றிருந்த சமயம் அங்கு வாழ் சுண்டெலிகள் படையாய் வந்து மூடியைத்தட்டி ஆப்பங்களை எடுத்து புழுதியில் போட்டு உல்லாசமாய்ச் சாப்பிட்டுக் கொண்டிருந்தன. மாணவர் வருகை கண்டு தம் முன் கால்களை உயர்த்தி பல்லைக் காட்டி ஏளனம் செய்து ஓடி மறைந்தன. சிரிப்புடன் எஞ்சியதை மாணவர் சாப்பிட்டனர், அத்துடன் அன்று வேலைக்கும் சென்றனர். இதைப்பிற்றை வாழ்க்கைக்கு ஒரு பயிற்சி எனக் கொண்டனர் ஊழியத்தில் எச்சரிக்கையான மற்றதொரு அனுபவம் ஒரு சிறு கிராமத்தில் இரவு ஊழியம் முடிந்து சுவிசேஷப் பங்குகள் விற்கப்பட்டன. ஒரு சில நிமிடங்களுக்குள் 50க்கு மேலாக விற்பனையாயின. ஊழியத்தில் அன்று மன நிறைவு கொண்டனர். அடுத்த நாள் காலையில் தனித்தாள் ஊழியம் செய்யச் சென்றிருந்த சமயம் அத்தனை புத்தகங்களும் ஒரு கடையில் சாமான்கள் சுற்றிக்கொடுப்பதற்குக் கடைக்காரனால் சேர்க்கப்பட்டு அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. மனச்சோர்வடைந்து அத்தனை புத்தகங்களையும் பணம் கொடுத்து மீட்டனர். கனம் துரைசாமி ஐயரவர்களிடம் பெற்ற சுவிசேஷ ஊழியப்பயிற்சி திருமறைபாடப் பயிற்சி, சிக்கனப் பயிற்சி அத்தியட்சருக்கு பிற்கால பணிக்கு அதிக உதவியாயிற்று.

## குருப்பட்ட மாணவர் பயிற்சி

நம் அத்தியட்சர் 1947 முதல் 1951 வரை திருமறையூர் வேத சாஸ்திரக் கல்லூரியில் வேத சாஸ்திரம் கற்றுர். அந்நாள் தலைவர் கனோன் தாமஸ் சித்தர் ஐயர் பெரும் மதிப்புக்குரியவர், கண்டிப்புடையவர் காலம் என்றும் தவருதவர், மாணவர் குறைபாட்டை அப்போதைக்கப்போது எடுத்துக்காட்டிச் சீரடையச்செய்

பவர் மன்னவன் எப்படியோ அப்படியே மன்னுயிரும் என்ற எண்ணங்கொண்டு தம் போல் தம் மாணவர்களுமாக வேண்டுமென்ற ஆத்திரமும் ஆர்வமும் கொண்டவர். இதற்கிடையில் அன்பு என்ற மலர் அவரிடம் மலர்ந்து கிடந்தது. தேச பக்தியுடைய வருமாவர். பயிற்சிக்காலத்தில் கொடிய அரிசிப் பஞ்சம் ரேஷன் கார்டு உண்டு எனினும் பற்றுக்குறை. தலைவர் ஒருகட்டளையிடுத்தார். வாரத்திற்கு ஒரு நாள் காய்கறி மட்டும் சமைத்துப் சாப்பிட வேண்டும் மாணவர்கள் முணு முணுப்பின்றி இதை ஏற்றுக் கொண்டனர் அன்று பெற்ற சம்பளமோ ரூ 45. இந்த கொடிய காலத்தில் நீங்கள் கொடுக்கும் சம்பளம் எங்கள் பிள்ளைகளுக்குப் பால் வாங்கிக் கொடுக்கப் போதாதென்று கொடி ஏந்திப் புரட்சி செய்வாரில்லை. கைநிறையப் பணம் இல்லை எனினும் மனம் நிறைய சந்தோஷம் இருந்தது. அக்கால மாணவர்கள் இவற்றினைப்பயிற்சி எனவே கொண்டனர். நம் அத்தியட்சர்கள் வகுப்பின் முதல் மாணவனாயும் B. D. பட்டதாரியாகவும் வெளி வந்தார்.

1950ம் ஆண்டு ஜூன் மாதம் 4-ம் நாள் பாளையங்கோட்டை பரி. திருத்துவ அத்தியட்சாலயத்தில்மகாகனம் செல்வின் அத்தியட்சரால் உதவி குருப்பட்டமும் 1951ம் ஆண்டு ஜூன் மாதம் 3ம் நாள் மகாகனம் செல்வின் அத்தியட்சரால் சாயர்புரத்தில் குருப்பட்டாபிசேகமும் பெற்றார். மெஞ்ஞானபுரம் சர்க்கிள் கிராமச் சபைக் குருவாக நியமனம் பெற்று இரண்டரை ஆண்டுகள் பணிசெய்து 1953ல் சத்தியநாரம் பாஸ்றரேற்றுக்கு மாற்றப்பட்டு 1959-ம் ஆண்டு வரை அங்கு செயலாற்றினார். இக்காலத்தில் அத்தியட்சாதீன வாலிபர் ஊழிய பொறுப்பையும் ஏற்று, அத்தியட்சாதீன முழுவதும் வாலிபர் சங்கங்கள் புத்துயிர் பெறவும் அத்தியட்சாதீன வாலிபர் சங்கங்களாக அவை இணைப்பு பெறவும் உழைத்ததோடு, ஆண்டுதோறும் வாலிப ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியே மகாநாடுகள் ஒழுங்கு செய்து நடத்திவந்தார். 1959ல் நாகலாபுரம் சர்க்கிள் குருவாகப் பதவி உயர்வுபெற்றார். பிளவுபட்டிருந்த அன்றைய சபை மக்களை ஒன்றுபடுத்தினார். அங்கு அவரின் பணி ஆசிரியர்களாலும் கிராமச் சபை மக்களாலும் இந்து பிரமுகர்களாலும் பெரிதும் போற்றப்பட்டது. 1960ம் ஆண்டுப் பெண்கள் பயிற்சி நிலையம் ஒன்று நாகலாபுரத்தில் அமையப்பெற்றது. குருத்துவ ஊழியத்திற்குத் தகுந்தவர்களில் தெரிந்தனுப்பும் விஷயத்தில் மிக்க அக்கரையும் ஆர்வமும் கொண்டவர். அன்று மூவர் இவரால் தெரிந்தனுப்பப்பட்டவர்கள் அவர்கள் இன்று அத்தியட்சாதீனத்தில் நற்பணியாற்றிவருகிறார்கள்.

1963ம் ஆண்டு மேல்நாட்டுப் படிப்புக்குச்சென்று. நம் அத்தியட்சாதீனத்தால் அனுப்பப்பட்டார்.

New York Union Theological Seminary இல் Programme of Advanced Religious Studies (PARS) என்ற பகுதியில் பயில World Council சகாயநிதி கிடைத்தது. 1964ம் ஆண்டு மே திங்கள் 19ம் நாள் (S. T. M.) Master of Sacred Theology) பட்டம் பெற்று நாடு திரும்பினுர். நாகலாபுரம் மக்கள் இவர் கொண்ட உயர்வைத் தாம் பெற்றபெரும் பேறு எனக் கொண்டனர் அக்காலத்து நாகலா புரம் டாக்டர் உல்லியம் அவர்களும் அவர்களது பாரியாரும் அத்தி யட்சரிடத்தில் பரிவு கொண்டவர்கள். அவர்களது சுவிசேஷ வைராக் சையும், அயராது உழைக்கும் உழைப்பும் அம்மையாரின் அரவ ணைப்பும், அத்தியட்சரை அதிகமாய் ஈர்த்தது இவ்வுயரிய பண்பு களைத் தமக்கெனெ ஆக்கிக்கொண்டார்.

1964ம் ஆண்டு ஜூன் மாதம் திருமறையூர் தமிழ்நாடு இறையியற் கல்லூரிப் பேராசிரியராகப் பணியேற்ருர். இக்காலத்தில் இறையியற் கல்லூரியின் பணித்திட்டங்களில் ஒன்ருகிய Junior Ministers Study Scheme இன் இயக்குனராகத் தென் இந்திய இளங் குருக்களுக்குப் பயிற்சி வகுப்புகள் பல இடங்களில் நடத்தி வந்தார். T. E. L. C., I E L. C. முதலிய சபைகளின் குருக் களும் இப்பயிற்சியில் பங்கு கொண்டனர்.

திருநெல் அத்தியட்சர் வேதபாடத் தேர்தல் கண்காணிப் பாளராகவும், தென் இந்தியத் திருச்சபை வேதசாஸ்திரத்திர நூல் பதிப்பாசிரியராகவும் பணியேற்ருர். 1969 இல் திருமறையூரில் ஆரம்பிக்கப்பட்டிருந்த திருப்பணி பயிற்சி நிலையத் தலைவரானுர். தம்மிடம் ஒப்படைக்கும் பொறுப்புகளைத் தள்ளாது அத்தனையையும் ஏற்று சீரும் சிறப்புமாகச் செயலாற்றுபவர்.

1970 ம் ஆண்டு டோனவூர் சர்க்கிள் சேர்மனுகவும் 1973 ம் ஆண்டு அக்டோபர் திங்கள் 19ம் நாள் பேர்பிலான்குளம் சர்க்கிள் கூடுதல் பொறுப்பினராகவும் பணியாற்றினுர். 1971 இல் அத்தியட் சாதீன குருத்துவ காரியதரிசியாகத் தெரிந்தெடுக்கப்பட்டார்.

நெல்லை அத்தியட்சாதீனத்தின் அமைப்பில் ஓர் மாற்றம்.

நம் அத்தியட்சாதீனம், பாஸ்றரேற், சர்க்கிள், கவுன்சில் என்ற மூன்று அமைப்பினைக் கொண்டது. இதில் சர்க்கிள் என்ற அமைப்பை இல்லாததாக்கி பாஸ்றரேற் தொகுதியாகவே அமைக்கப் பட அத்தியட்சாதீன காரிய நிர்வாகக்கமிட்டி ஆலோசித்தது.

புதிய அமைப்பு அமைக்க அத்தியட்சாதீன மூலச்சட்டம் இசைய மாற்றி அமைக்கப்பட வேண்டும். இது சம்பந்தமாய் குழு ஒன்று அமைக்கப்பட்டு தம் அத்தியட்சர் அதில் தலைவரானார். மாற்றி அமைப்பதற்கு ஏற்ற ஒழுங்கினை 1975ம் ஆண்டு ஜனுவரி 14 இல் கூடிய அத்தியட்சாதீன கவுன்சில் இரண்டாந் தடவை வாசிப்புக்குச் சமர்ப்பித்தார். கவுன்சில் திட்டத்தை ஒப்புக்கொண்டது. 1975ம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 1ம் நாள் முதல் பாஸ்றரேற் தனித்தொகுதி (Pastorate unit) செயல்பட ஆரம்பித்தது நிர்வாகத்தையும் பணப்பொறுப்பையும் தானே ஏற்றுக்கொண்டது. இவ்வமைப்பால் பொருளாதாரமும் சுவிசேஷ வாஞ்சையும் உயர்வடைந்தது. ஆனால் இயற்கையிலேயே பொருளாதாரம் குறைபட்டுள்ள ஒரு சில பாஸ்றரேற்றுகள் பொருளாதாரத்தில் வெகுவாய் பாதிக்கப்பட்டுள்ளதெனலாம். இப்புதிய மாற்றம் சில சிக்கல்களையும் உருவாக்கியுள்ளது. தேர்தல், பாடசாலை நிர்வாகம், ஆசிரியர்களை மாற்றுவது, பாஸ்றரேற்றுகளுக்கு முழுப்பொறுப்புள்ள குருக்களை நியமிப்பது போன்று. மூன்று கவுன்சில்களாகச் செயல்ப்பட்டது. எட்டு கவுன்சில்களாக அமையப்பெற்றது. எட்டு கவுன்சில் சேர்மன்கள் நியமனம் பெற்றனர். தம் அத்தியட்சர் தென்மேற்கு கவுன்சில் குருவாக நியமனம் பெற்றார். பாஸ்றரேற் அமைப்பின் சிக்கல்கள் இன்றுமுள்ளது. எனினும் கடவுளின் கைதாங்கலாலும், அத்தியட்சாதீன அலுவலர்கள், (Office Bearers) குருக்கள், ஏனைய கமிட்டிகளின் ஒத்துழைப்பாலும் தமது பேராயத்தைத் திறம்பட நடத்தி வருகிறார்.

## அத்தியட்சராதல்

மகாகனம் காரட் அத்தியட்சர் இங்கிலாந்திலிருந்த தம் குடும்ப காரணத்தால் தம் அத்தியட்சர் பதவியை ராஜினுமா செய்தார் இதன்பின் 10 மாதங்கள் கழித்து 1975ம் ஆண்டு ஆண்டு ஜூன் மாதம் 19ம் நாள் நெல்லை அத்தியட்சராகப் பதவி ஏற்றார். இவர் நம் அத்தியட்சாதினத்தின் இரண்டாவது தமிழ் அத்தியட்சர் ஆவர்.

## அக்கால அத்தியட்சாதீன நிதிநிலை

மகாகனம் ஜெபராஜ் அத்தியட்சர் நாசரேத் மர்காஷிஸ் கல்லூரியைப் பிள்ளையன்மனையிலும் போப் கல்லூரியை சாயர்புரத்திலும் நல்நோக்கோடு ஸ்தாபித்தார். ஆனால் இரு கல்லூரிகளுக்குப் மூலதனம் (Endowment) உருவாக்கப்படவில்லை. புதிய கட்டிடங்கள், மாணவ விடுதிகள் கட்டப்பட்டன. புதிய வகுப்புகளும்

திறக்கப்பட்டன. ஆனால் இது போன்ற பிற புதிய கல்லூரிகள் பல தோன்றலாயின. இது மாணவர்களின் வருகையை நாலு கல்லூரிகளிலும் வெகுவாய் பாதித்து மாணவ விடுதிகளும் வகுப்பறைகளும் காலி இடங்களாயின. கல்லூரிகளின் வருவாயைப் பாதித்தது. அத்தியட்சாதீனத்தில் அவர்கள் வாங்கிய கடன் கொடுக்க முடியாத நிலை. அத்தியட்சாதீனத்தின் நிதி நிலையைப் பாதித்தது. வங்கியில் வாங்கிய கடனுக்கு வட்டி கட்ட வேண்டிய சக்தி கூட இல்லாததால் வங்கிக் கடன் விஷம் போல் ஏறிக் கொண்டது. இந் நிலை நீடிக்காது ஒரு சுபிட்சை நிலை உருவாக நம் அத்தியட்சர் கிட்டம் பல தேடினார். தென் இந்திய திருச்சபை சினாட் கழகத்தை அணுகினார். பல கூட்டங்களில் இது எடுத்துப் பேசப்பட்டும் உதவி கிடைக்கவில்லை. அவர்களைக் குறை கூறுவதற்குமில்லை. அவர்கள் திருநெல்வேலி அத்தியட்சாதீனத்தைப் பற்றி பெருமையாக எண்ணி அவர்களே பார்த்துக் கொள்வார்கள் என்ற முடிவுக்கு வந்து விட்டனர். சிறு உதவி கூட செய்யாதது அத்தியட்சருக்கும் ஏன் அத்தியட்சாதீனமும் வருந்தத்தக்க ஒரு காரியமாயிற்று. எனினும் மனந் தளர்ந்தாரில்லை 1976 ம் ஆண்டில் நடைபெற்ற அத்தியட்சாதீன கவுன்சிலில் நிதி நிலை உயர்வடைய இரு திட்டங்களைச் சபை முன் வைத்தார்.

(1) அத்தியச்சாதீன பொருளாதாரத்தின் நிலையினைப் பரிசீலனை செய்து அதின் அபிவிருத்திக்கான ஆலோசனைகளைக் கொடுக்க ஒரு குழுவினை அமைக்க காரிய நிர்வாகக் கமிட்டிக்கு அதிகாரம் அளிப்பது.

(2) அத்தியட்சாதீனத்தில் பணிபுரியும் யாவரும் தங்களின் ஒருநாள் ஊதியத்தை 24 தவணைகளில் அத்தியச்சாதீன அலுவலகத்தின் டெப்பாஸிட் செய்வதுடன் காப்புநிதி (Reserve Fund) ஒன்றினையையும் ஏற்படுத்துவது.

இவ்விரு திட்டங்களில் பிந்தியதற்குப் பலத்த எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. ஆனால் அதின் முழு விபரமும், பயனும் எடுத்துக் கூறப்பட்டபோது அத்தியசாதீன மன்றம் இதனை முழுமையாய் ஒப்புக் கொண்டு அதனைச் செயல்படுத்த நிர்வாகக் கமிட்டிக்கு முழு அதிகாரத்தையும் கொடுத்தது. நிர்வாக கழகமும் இதனை வெகுவாய் பரிசீலித்துச் செயல்படுத்திற்று.

செயல்படுத்தியதில் இன்று வரை காப்பு நிதியில் (Reserve Fund) ரூ 1,68,669·74 உம், அத்தியசாதீன வைப்பு நிதியில

(Diocesan Employee's Deposit Scheme) ரூ 13,01,371·37 வும் வந்துள்ளது. காப்புநிதியானது வங்கிகளில் நிலையாக (Fixed Deposit) வைக்கப்பட்டுள்ளது. வைப்பு நிதியில் ஒரு பகுதி நிலையான வைப்பில் (Fixed Deposit) வைக்கப்பட்டுள்து. மீதியைக் கொண்டு வங்கிக்கடன் (Over Draft) ஈடு செய்யப்பட்டது. அத்தியட்சாதீன ஊழியர் செய்திருக்கும் டெப்பாஸிட், அவர்களின் ஓய்வு காலத்தில் வட்டியுடன் தொகை கொடுக்கப்படுகிறது. ஊழியர்கள் தங்கள் ஓய்வு காலத்தில் இதை ஒரு வரப்பிரசாதமாக எண்ணுகின்றனர். இவ்வாறு திரும்பக் கொடுப்பதால் முன் டெப்பாஸிட் செய்த தொகை குறைவதாக இல்லை. டெப்பாஸிட் செய்த தொகையின் வட்டியும் புதிதாக நியமனம் பெறும் ஊழியரின் டெப்பாஸிட் தொகையும் அதற்கு ஈடு செய்கிறது. எஞ்சியது காப்பு நிதியில் சேர்க்கப் படக் கூடும். கல்லூரிகளுக்குத் தனி நிர்வாகிகளை நியமித்தார். இது கல்லூரி நிதி நிலையைச் சரிப்படுத்த ஏதுவாயிற்று.

### சுவிசேஷ ஊழியம் :—

சுவிசேஷ ஊழியம் அத்தியட்சாதீனத்தின் உயிர் நாடி என்ற சிந்தனை கொண்டு ஒவ்வொரு அத்தியட்சரும் தத்தம் காலத்தில் சீரிய முறையினைக் கையாடியே வந்திருக்கின்றனர் என்பது நெல்லை திருச்சபைச் சரித்திரம் சான்றுரும். மகாகனம் தானியேல் ஆபிரகாம் அத்தியட்சரும் இதில் மிக்க ஆர்வங் கொண்டு பல முறைகளைக் கையாண்டு வருகிறுர்.

### வெளி மாவட்ட ஊழியம்:

இது ஒரு சிறப்புத் திட்டமாகும். சுவிசேஷ ஊழியத்தில் ஆர்வங் கொண்டவர்கள் தங்கள் சொந்தச் செலவில் பங்கெடுத்து வருகின்றனர். அத்தியட்சரும் தமது கோடை விடுமுறையில் இதில் பங்கு கொள்வர். இது 1976 ஆண்டு முதல் செயலில் இருந்து வருகிறது. 1976 இல் கோயம்புத்தூர் மாவட்டம் தாராபுரத்திலும், 1977 இல் மதுரை மாவட்டம் மானுமதுரையிலும், 978 இல் தஞ்சாவூர் மாவட்டம் தஞ்சாவூரிலும், 1979 இல் வடஆற்காடு மாவட்டம் ஆரணியிலும், 1980 இல் வடஆற்காடு மாவட்டம் வேலூரிலும் நடைபெற்றுள்ளது 1976 இல் 26 பேர் மட்டுமே பங்கெடுத்தனர், 1980 இல் 8 குருமார்கள் உட்பட 82 பேர் பங்கு கொண்டனர் என்ருல் மக்களுக்குள் சுவிசேஷ வாஞ்சை எவ்வளவாய் பெருகி உள்ளது என்பதின் ஒரு எடுத்துக்காட்டாகும். 40 க்குப் அதிகமான சுயேட்சை ஊழியரை ஒன்றுபடுத்தி இப்பணியினை ஆற்ற இடமாயிற்று.

இவ்வூழியர்களுக்கு ஆண்டு தோறும் அத்தியட்சர் நற்பயிற்சி கொடுத்து வருகிருர். வெளியிட ஊழியர்களைக் கொண்டும் பயிற்சி பயிற்சி கொடுக்கப்படுகிறது. இன்று ஊழியரின் எண்ணிக்கை ஆண் பெண் சேர்ந்து 280 ஆகும்.

1976ம் ஆண்டு பெப்ருவரித்திங்கள் 10 முதல் 15 நாட்கள் வரை பண்டிதர் அக்பர் ஹக் என்ற சுவிசேஷகளின் கூட்டங்கள் பாளையங்கோட்டையில் நடைபெற்றன. இக்கூட்டங்களும் அதின் பின்னணி ஊழியங்களும் மக்களுக்குள் சுவிசேஷ வாஞ்சையை ஊட்டின. இதைத் தலைமை தாங்கி நடத்தியவர் அன்றைய அத்தியட்சாதீன உப தலைவர் கனம் S. T. பால் ஞானையா ஐயர்.

**இதோ வாழ்வு**

திருநெல்வேலி மாவட்டத்தில் தீவிர நற்செய்திப்பணி செய்வதற்கு Cambus Crusade International என்ற சங்கத்தாரின் உதவி பெறப்பட்டது. "இதோ வாழ்வு" என்ற திட்டத்தின் கீழ் இந்த வேலை நடைபெற்றது. இதில் அத்தியட்சாதீனத்தின் அனைத்து சபைகளும் ஊக்கமாய் பங்கெடுத்தன. இதற்கு ஆரம்பமாக இத்திட்டத்தலைவர் (Dr. Bill Brighter) டாக்டர் பில் பிரைட் 1977ம் ஆண்டு அக்டோபர் திங்கள் 7ம்நாள் இத்திட்டம் பற்றி நூற்றாண்டு மண்டபத்தில் ஒரு கூட்டம் நடத்தினர். இது நல்முறையில் நடைபெறும் பொறுப்பு அத்தியட்சாதீன உப தலைவர் கனம் சவரிதாஸ் ஐயரிடம் கொடுக்கப்பட்டது. இவரும் சுவிசேஷ வாஞ்சை உடையவர்.

இத்திட்டக் கருப்பொருள் (I found it, you can Found it too) நான் கண்டு கொண்டேன் நீயும் கூட இதைக் கிறிஸ்துவில் கண்டு கொள்ளலாம். சம்பந்தப்பட்ட ஊழியர்களுக்கும் சபை மக்களுக்கும் வெகு காலப்பயிற்சி கொடுக்கப்பட்டது.

இத்திட்டச் செயல்பாடு 16—9—78 முதல் 1—10—78 முடிய நடைபெற்றது. நான் கண்டு கொண்டேன் என்ற கருப்பொருள் கொண்ட சுவரொட்டிகள் எங்கும் எவ்விடத்தும் ஒட்டப்பட்டது. விளம்பரக்கொடிகள் எங்கும் பறந்து நின்றன. நான் கண்டு கொண்டேன் என்ற பாட்ஜ்களும் பனியன்களும், மக்களால் அணிந்து கொள்ளப்பட்டன. சுவிசேஷப் பங்குகளும் நான் கண்டுகொண்டேன் என்ற பிரதிகளும் மாவட்டத்திலுள்ள எல்லா வீடுகளிலும் கொடுக்கப்பட்டது. இச்செய்தி பத்திரிகை

களிலும் வெளியாயின. இத்திட்டம் நெல்லை மாவட்டத்தை நின்று பார்க்கும் நிலைக்கு ஆக்கிற்று.

பல எதிர்ப்புகள் மத்தியிலும் திட்டம் வெற்றியே. பலர் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டதுண்டு. அத்தனையும் ஜெபத்தின் வல்லமையால் நடத்தப்பட்டவையாகும். இத்திட்டம் நம் மக்களுக்குள் சுவிசேஷ வாஞ்சையும் அதனைச் செயல்படுத்தும் திறனையும் உருவாக்கிற்று. இது தமது கடமை என்பதையும் உணர்த்திற்று. தனிநபர் ஊழியத்தில் ஒரு பயிற்சியும் மக்கள் பெற்றனர். ஆண்டவராகிய இயேசுவை குறித்து அறிய விரும்புகிறவர்கள் கடிதத்தொடர்பு கொண்டிருக்கிறார்கள்.

**மத சுதந்திரப்போராட்டம்:**

திரு. O. P. தியாகி M. P. 1978ம் ஆண்டு மத சுதந்தர மசோதா ஒன்றினைப் பாராளுமன்றத்தில் தாக்கல் செய்தார். இந்த மசோதா வட இந்திய அருணாசலப்பிரதேசத்தில் நிறைவேற்றப்பட்டு கிறிஸ்தவர்களுக்குப் பலகஷ்டங்களைக் கொடுத்தது. கோவில்கள் இடிக்கப்பட்டன. சுவிசேஷ ஊழியத்திற்குத்தடை விதிக்கப்பட்டது. சிறைத்தண்டனையும் உண்டு. இந்த மசோதா நாடு முழுவதும் நிறைவேற்றப்பட திரு. O. P. தியாகி எண்ணினார். இதற்கு நாடு முழுவதுமுள்ள அனைத்து கிறிஸ்தவர்களும் எதிர்ப்பு தெரிவித்தனர் கண்டன ஊர்வலங்களும் கூட்டங்களும் நடைபெற்றன. பாம்பேயில் நடைபெற்ற இது சம்பந்த எதிர்ப்பு ஊர்வலம் நாட்டையே அதிரச்செய்தது. நமது திருமண்டலத்தில் தூத்துக்குடியிலும் பாளையங்கோட்டையிலும் அனைத்து சபைகளும் சேர்ந்து கண்டன ஊர்வலம் நடத்தி மாபெரும் கண்டனக் கூட்டம் ஒன்றை நடத்திற்று. கண்டன ஊர்வலத்திலும் கூட்ட மேடையிலும் நம் அத்தியட்சர் கலந்துகொண்டு சுவிசேஷ ஊழியம் கிறிஸ்தவனுக்குத் தேவன் இட்ட கட்டளை என்றும் அது அவனின் கடமை என்றும் ஆணித்தரமாகப் பேசினார். மசோதா செயல் பட்டுவிடுமோ என்று ஏங்கி இருந்த காலத்தில் அன்றுள்ள ஜனதா அரசு கவிழ்க்கப் பட்டுப்போயிற்று. இது ஆண்டவரின் தலையீடாகும்.

**குழந்தைகள் ஆண்டு 1979**

இது ஐக்கிய நாட்டுச்சங்க ஏற்பாடாகும். தென் இந்தியத் திருச்சபையும் இதில் பங்கு கொண்டது. விழாக்கொண்டாடுவதில் அதிக விருப்பங்கொண்ட நம் அத்தியட்சரும் தமது சகாக்களுடன் கலந்து திட்டமிட்டு சிறந்த முறையில் நடைபெறச் செய்தார். இது சம்பந்தமான ஆரம்பப் பெரு விழா 1979ம் ஆண்டு பெப்ருவரித் திங்கள் 19ம் நாள் V. O. C. மைதானத்தில் மாவட்ட

ஆட்சித்தலைவர் தலைமையில் நடத்தப்பட்டது. அத்தியட்சாதீனத்தின் பல பகுதி மாணவ மாணவிகள் கலந்து நிகழ்ச்சிகள் பல நடத்தி விழாவினைச் சிறப்பித்தனர்.

**சமூக சேவையும்** அபிவிருத்தித்திட்டமும் நம் அத்தியட்சர் ஆவிக்குரிய விஷயங்களில் மட்டும் பொறுப்புக் கொள்ளாது சமூகசேவையிலும் ஈடுபட்டு கிருபை இல்லம், கருணை இல்லம் என்ற இரு ஸ்தாபனங்களை ஏற்படுத்தியுள்ளார். கிருபை இல்லம் வாழ்க்கையில் வழுக்கிவிழுந்த பெண்களின் வாழ்வை புனர்வாழ்வடையச் செய்வது. இதுதாய்மார் சங்க ஆதரவில் நடைபெற்று வருகிறது. கருணை இல்லம் ஆதரவற்ற முதியோர்களுக்கு ஆதரவு கொடுத்து வருகிறது. மேல் நாட்டு உதவிகொண்டு டக்கர் அம்மான்புரத்திலும், சிவகிரியிலும் கல்லுடைப்புத் தொழிலும் சாயர்புரத்தில் நெசவுக் கூடமும், பாளையங்கோட்டை பஞ்சாயத்து கிராம அபிவிருத்தித் திட்டமும் மற்றும் பல வளர்ச்சித் திட்டங்களும் நடை பெற்று வருகின்றன. இத்திட்டங்களின் திட்டஅலுவலர் திரு. தாமஸ் டேவிட் ஆவார். இவரது முயற்சி போற்றற்குரியது.

**வறட்சி நிவாரணப்பணி.**

சபையாருக்கு வேத அறிவை சித்தாந்த ரீதியில் புகட்டுவதற்கு ஆண்டுதோறும் பரி ஆவியின் திருநாளுக்கு முன்வரும் 15 நாட்கள் வகுப்புகள் நடத்துவதற்கென்று 1978 முதல் பரிசுத்த ஆவி, திருச்சபை, கடவுளுடைய ராஜ்யம் என்ற பொருட்களின் பேரில் தானே பாடநூல்கள் எழுதி வெளியிட்டுள்ளார்.

ஆராதனை முறைகளில் ஏற்பட்டுள்ள குறைகளைத்தாம் நேரில் கண்டு சீர் அடைய நற்போதகப் பத்திரிக்கையில் திருத்தமும் ஆலோசனைகளையும் கூறிவருகிறார். பண்டிகை நாட்களில் துதிகீதம் பாட அத்தியட்சரே அமைத்து அச்சிட்டுக் கொடுத்து வருகிறார். குருமார்களுக்கு அத்தியட்சர் அச்சிட்டு அனுப்பும் கடிதங்கள் மிகப் பயனுடையதாயுள்ளது. இதில் குருத்துவப் பணிவிடை திடப்படுத்தல் ஆயத்தம் ஊழியசம்பந்தமாய் மற்றும் ஆலோசனைகள் அடங்கும்.

இவர் அத்தியட்சாதீன வாழ்வுக்கெனத் தம்மைப் பூரணமாக அர்ப்பணித்தவர் என்பது அவர் செய்து வரும் ஊழியத்தில் வெளிவாய் காணப்படுகிறது. இரவு பகலென்று பாராது அயராது உழைக்கும் உத்தமரும் உண்மையுமான ஊழியன்.

பேராயர் பொறுப்பேற்ற காலத்தில் எங்கும் வறட்சி நிலவியது. சில ஆண்டுகள் மழை குறைவின் காரணமாகக் கிணறுகளில் தண்ணீர் வற்றிப்போயிற்று. விவசாயம் வெகுவாய் பாதிக்கப் பட்டது. குடிதண்ணீருக்குத் தேடி அலையும் நிலை கிராமங்களில் காணப்பட்டது. அச்சமயத்தில் அத்தியட்சாதீன சமுதாய நலப் பணித்திட்டத்தின் கீழ் CASA, world vision, Tamil Christian Council முதலிய நிறுவனங்களின் உதவி கொண்டு நூற்றுக்கணக் கான கிணறுகள் ஆழப்படுத்தப்பட்டன. உழைப்புக்கு ஊதியம் என்ற திட்டத்தின்கீழ் ஆயிரக்கணக்கான மக்களுக்கு வேலையும் உணவும் கொடுக்கப்பட்டது World vision என்ற நிறுவனத்தின் உதவி கொண்டு ஆழக்குழாய் கிணறுகள் வறட்சியால் அதிகமாய் பாதிக்கப்பட்ட இடங்களில அமைக்கப்பட்டன. இத்தனை முயற்சி கள் எடுத்தும் தண்ணீர் தேவை பூர்த்தி செய்யபடவில்லை. பேராயர் யாது செய்வது என்று எண்ணங்கொண்டு இறுதியில் மக் களை உபவாசித்துஜெபிக்க அழைக்க மனதில் தீர்மானித்தார். அன்றே பேராயத்தின் மேற்குப் பகுதியில் ஒருவரும், கிழக்குப் பகுதியில்ஒரு வரும்வறட்சிநீங்க உபவாசித்து ஜெபிக்கவேண்டுமென்று ஆலோசனை யாக எழுதினார்கள். இதுவே கடவுளின் நோக்க மெனக்கொண்டு அத்தியட்சாதீனம் முழுமையிலும் மூன்று மாதத்திற்கொருமுறை முதல் வெள்ளிக்கிழமையில் உபவாசித்து ஜெபிக்க வேண்டுமென்ற ஒழுங்கினை குருக்களுக்கு அறிவித்து இன்று வரை செயல்பட்டு வருகிறது. முதல் உபவாச ஜெபம் 1977ம் ஆண்டு ஆசரிக்கப் பட்டது. ஜெபம் கேட்கப்பட்டது பல பாகங்களில் நல்ல மழை பெய்தது தொடர்ந்து நல்ல மழையினை ஆண்டவர் கொடுத்து வருகிறார்.

தம்போன்று தம் ஊழியர்களும் செயல்பட வேண்டுமென்று எதிர்நோக்குகிறவர் இவர் ஒரு நர்வாக சமர்த்தர். ராஜதந்திரி (Diplomat) எனக்கூறலாம். இவரது காலத்தில் பல பிரச்சனைகள் அத்தியட்சாதீனத்தில் தோன்றின அத்தனைக்கும் அத்தியட்சாதீன அலுவலர்கள், (office bearers) குருமார், கமிட்டி அங்கத்தினர்கள் ஆகியவர்களின் ஒத்துழைப்பாலும் ஆலோசனைகளாலும் தீர்வு கண்டவர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்று தெளிவுடைய தாகும். இவர் அத்தியட்சாதீன அனைத்து மக்களால் அறியப் பட்டும் அவர்களை இவர் அறிந்துமிருக்கிறார். யாவராலும் போற்றுதற் குரியவர்.

இவரது கால (Office Bearers) அத்தியட்சாதீன அலுவலர்கள், அத்தியட்சாதீன உபதலைவர் கனம் S. சவரிதரிஸ் ஐயர் B. D குரு காரியதரிசி கனம் திரவியம் ஏசுதாசன் B. D., அத்தியட்சாதீன 'லே' காரியதரிசி திரு. D. G. ஜெபசிங், B. Sc , B. L , அத்தியட்சாதீன பொக்கிஷதார் திரு. பெட்போர்ட் சாலொமோன் ஆவர். இவர்களின் அறிவும் காரியங்களைச் செயலாற்றும் திறமையும் போற்றுதற்குரியது.

2ம் நூற்றுண்டு திட்டங்கள் பல தீட்டப்பட்டன. நல்முறையில் நடக்க ஆண்டவர் அருள் புரிவாராக.

எங்களுக்கு அல்ல, கர்த்தாவே எங்களுக்கு அல்ல, உமது கிருபையினிமித்தமும், உமது சத்தியத்தினிமித்தமும், உம்முடைய நாமத்திற்கே மகிமை வரப்பண்ணும் சங் 115:1.



